# தனித்தமிழ்க் கட்டுரைகள்






தி. நீலாம்பிகை அம்மையார்

எழுதியது.

வெளியீடு—க

# தனித் தமிழ்க் கட்டுரைகள்

மறைமலையடிகள் மகளாரும்,
சென்னை நார்த்விக் மகளிர் கல்லூரியின்
தமிழாசிரியராயிருந்தவருமாகிய

**திருவாட்டி தி. நீலாம்பிகையம்மையார்**

இயற்றியன.



கிடைக்குமிடம்:

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி, சென்னை.

# முகவுரை

ஏழெட்டு ஆண்டுகளாகத், 'திராவிடன்', 'தேசாபிமானி', 'ஆனந்த போதினி', 'ஒற்றுமை', 'தமிழ் நாடு', முதலான இதழ்களில் யான் இடைஇடையே எழுதிவந்த கட்டுரைகள் ஆண் பெண் என்னும் இருபாலார்க்கும் பயன்படக்கூடு மென நினைந்து இப்போது அவற்றை ஒருங்கு திரட்டி ஒரு புத்தகமாக வெளியிடலானேன்.

இக்கட்டுரைகளில் வடசொற்கள் மருந்துக்கும் அகப்படா. வடசொற்கலப்பால் தமிழ் தன் இனிமையும் தூய்மையும் இழத்தலை யான் முதன்முதல் அறிந்தது பின்வருமாறு: யான் பதின்மூன்றாண்டுடைய சிறுமியாயிருந்தபோது, ஒருநாட் சாயங்காலம் என் தந்தையா ரவர்களுடன் மிக மகிழ்வோடு எங்கள் தோட்டத்தில் உலாவிக்கொண்டு வருகையில், தந்தையார் தம்மை மறந்து இராமலிங்க அடிகள் அருளிச்செய்த திருவருட்பாவிலுள்ள "பெற்றதாய்தனை மகமறந்தாலும்" என்னும் பாட்டைப் பாடிக்கொண்டு வந்தார்கள்; அப்பாட்டின் இரண்டாவது அடியாகிய "உற்றதேகத்தை உயிர் மறந்தாலும்" என்பதனைச் சொன்னபோது என் தந்தையாரவர்கள் என்னை நோக்கி, "அம்மா, இப்போது நான் பாடின பாட்டைத் தூய தமிழில் இராமலிங்க அடிகள் எவ்வளவு அழகாய்ப் பாடியிருக்கின்றார்கள்! ஆனால், அப்பாட்டின் இரண்டாம் அடியிலுள்ள 'தேகம்' என்ற சமஸ்கிருதச் சொல்லை நீக்கி, 'யாக்கை' என்னும் தனித்தமிழ்ச் சொல்லை அங்கே அமைத்துப் பாடியிருந்தால் இன்னும் எவ்வளவு நன்றாயிருக்கும்! தமிழில் வடசொற்களைச் சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்துபோவதோடு, பல தமிழ்ச்சொற்களும் வழக்கில் இல்லாமல் இறந்து போகின்றன" என்றார்கள். இது கேட்ட நாள்முதல் என் தந்தையாரும் யானும் தனித்

தமிழிலேயே பேசுதற்கும் எழுதுதற்கும் உறுதிகொண்டோம்.

இனி, உலகத்திற் பண்டைக்காலத்திலேயே பண்படுத்தப்பட்டு வழங்கிய ஈபுரு, ஆரியம், இலத்தீன், கிரீக் முதலான மொழிகளெல்லாம் இக்காலத்து இறந்துபடவும், தமிழோ அந்நாள்தொட்டு இந்நாள்காறும் தன் இளமைத் தன்மை குன்றாது இருநூற்றைம்பது நூறாயிரம் மக்களாற் பேசப்பட்டுப் பெரிதும் பயனுடையதாய் வருகின்றது. இவ்வளவு சிறந்த தமிழ் மொழியைப் பிறமொழிக் கலப்பில்லாமல் வளர்த்துப் பயன்படுத்தி வருதல் அதனைப் பேசும் தமிழ் மக்கள் எல்லார்க்கும் இன்றியமையாக் கடமையாம்.

என் கட்டுரைகளில் உள்ள வழுக்களைத் திருத்தி இவை தம்மை அச்சிட்டு உதவிய என் தந்தையாரும் ஆசிரியருமாகிய தவத்திருவாளர் சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை அடிகட்கும், இதற்கு ஆங்கிலத்தில் 'நன்னயம்' (Introduction) எழுதி உதவிய திருவாளர் டாக்டர் ஏ. ஜெ. அப்பாசாமி (எம். ஏ., பி.எச்.டி.) அவர்கட்கும் நான் பெரிதும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். ஒன்றுக்கும் பற்றாத சிறியேனாகிய என்னையும் அருந்தமிழ்க் கல்வியில் மனம் பொருந்தச் செய்து, என் சிற்றறிவு தன்னாலும் சில கட்டுரைகள் எழுதுவித்த எம்பெருமான் திருவருட்கு என் எளிய வணக்கம் உரியதாகுக!

பொது நிலைக்கழகம்,
பல்லாவரம், 1925,
சூலை 29

நாகை நீலாம்பிகை

# INTRODUCTION

This volume of essays is written by an author of much promise, Srimathi Neelambigai Ammal, the daughter of the distinguished Tamil scholar, Swami Vedachalam. In some of her essays, the author specially addresses women readers and writes with an intimacy and depth of feeling which must necessarily win their hearts. Speaking as one of them, she appeals with a force which appears natural in her. But it would be a pity if our men in the Tamil country instead of reading it themselves hand this book over to their women folk and feel that they have done their duty.

Women have been led long enough; they ought to give the lead now. We must not merely expect them to listen to what we say, but we must allow them to think for themselves and to tell us their views for our guidance. We are sure to find in such views certain distinctive qualities such as depth of feeling and clearness of intuition in a greater degree than in men. But the first condition for all this is, of course, freedom of thought. It is only when women are given the opportunity to think for themselves and to express their mind in all matters, great and small, that they are able to contribute anything of importance to our knowledge of things.

For this reason, the two essays towards the end of the book—'How shall we dispose of a dead body?' 'On those who visit houses of mourning' are of genuine interest. More than men, women are moved beyond all measure by the havoc wrought by death. The death of a near relation, which fills a man with grief, creates a profound sorrow in the heart of a woman with all its infinite tenderness and love. Therefore the ideas and feelings of the women in the house exert an influence over the ceremonies and pervade the atmosphere of the whole family. We listen therefore with deep interest to this woman writer as she discusses with feeling whether we should bury dead bodies or burn them. Not allowing herself to come under the influence of long-accepted practices in this country, she acknowledges that

burial is good when as with the ancient Egyptians, Chaldeans and Tamils, this is done most carefully so that no noxious matter from the dead bodies may mingle with the water running underground and cause injury to people's health. But this not being easy, she advocates cremation with electricity which is speedy and clean.

In her next essay, she writes with the zeal of a reformer against the evil custom of extravagant expenditure and vain display on funeral occasions. These, she argues with much force, are not only incompatible with the solemnity of such occasions but also at times involve the family in life-long poverty and debt.

Fortunately for us the author of these essays has not concealed her sex as is sometimes done by literary women in the West. This facilitates the task of estimating an author's work at its true worth. Some women writers in England have insisted that their books should be judged without any reference to their sex. One great woman writer was anxious to hide her identity by taking on a masculine pseudonym, George Eliot. Another great writer, Charlotte Bronte, was very angry with her friend Mr. G. H. Lewes when he wrote a review of her *Shirley* dwelling too much on the fact of her being a woman (Gaskell's The Life of Charlotte Bronte, p. 343). The point of these writers is that their books should be judged by the same standards by which the books of men are judged. It is quite necessary that prejudice should not warp our judgment of books written by women, but I think this sensitiveness of women writers in the West goes too far. Is it not right to say that, all prejudice apart, there are some matters in which what women have to say counts more, while there are some other matters in which what they say counts less? The essays before us have received the impress of certain qualities which are peculiar to women, and about which we are left in no doubt as we are in a position to know the identity of the author.

I think it is a pity that the book should open with three essays on education. In the first, it is true, she

writes about the education of women with an earnestness and vigour which appear quite natural in her. But this as well as the other two essays are a little hackneyed. It has become the custom with our Tamil writers to include in their books essays on education with a string of familiar and therefore to some extent ineffective-quotations from the old classics. The theme itself can never become old-fashioned. Education is too vital a matter and too perennial in its interest for that, but the method of dealing with it may easily become hackneyed. When dealing with such wellknown themes, greater pains should be taken to make their treatment fresh and living.

Many of the essays in the book are concerned with the necessity of keeping up the purity of the Tamil language. On this matter there is much difference of opinion and, in some respects, I myself differ from the author. Her devotion to Tamil and her appreciation of its sweetness and capacity are clearly seen in these essays. In these, as well as in her longing for making the study of Tamil compulsory, I am entirely at one with her. Every one who is a Tamil should admire her for them and strive to possess that great devotion to it which characterises her. The time has come for India to wake up and move as a whole. Every Indian, to whichever community he may belong, ought to revise his ideas in the light of those possessed by the other communities. This may lead him to adopt, among other languages, assimilating them into his own. To such an intelligent adoption of foreign elements, I believe, the author of these essays does not object. Still, as has been well pointed out by her, we must not too easily adopt foreign words. Only after our attempts to express alien thoughts in the mother tongue have proved fruitless must we have recourse to foreign words. And he alone who has made a deep study of his mother tongue and who knows how to write it, can understand best when to use foreign words.

Pallavaram,
1st August, 1935.

A. J. APPASAMI.

# பொருளடக்கம்



தனித்தமிழ்த் திருவாட்டி

**தி. நீலாம்பிகை அம்மையார்**

ஓம்

# தனித் தமிழ்க் கட்டுரைகள்

## 1. கல்வியும் தாய்மாரும்

"கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளார் அறிவுடை யார்"—திருக்குறள்.

அடுப்பூதும் பெண்பாலர்க்கு நூற்கல்வி வேண்டா மென்று தாய்மார்கள் சிலர் கூறுகின்றார்கள். இது முற்றும் பேதைமையாகும். உலகத்தில் எல்லாத் தொழிலினும் மேலதாய் விளங்குந் தொழில் அடுப்பூதி அமுது சமைத்து அதனால் உடம்பையும் பாதுகாத்து நாவுக்கும் இனிமையைத் தருவதாகும். பலகாரமும், உணவும் சுவையோடு செய்யக் கற்றுக்கொள்ளுதலும் ஒரு கல்விதான். ஆயினும், நூற் கல்வியோடு சேரா தாயின் சமைத்தற் கல்வி சிறிதும் சிறப்படையாது. நூற்கல்வியுடன் சமைத்தற் கல்வி சேருமாயின், பூவோடு கூடிய நார் அப்பூவின் நறுமணத்தை அடைதல் போல, அதுவும் ஒளிவுற்றுப் பொலியும். நூற்கல்வி கற்றவர்களுக்கு எல்லா தொழிலினும் அவர்களின் அறிவு முனைத்து நின்று விளங்கும். நூற் கல்வி கல்லாதவர்கள் சமைத்தல் தைத்தல் முதலான சிறு கல்வியில் எத்துணை தான் மிகுந்தவர்க ளாயினும் அவர்களின் அறிவு எல்லாத் தொழிலினும் விளங்கித் தோன்றாது. ஆகையால் பொன்றாத் துணை யாகிய நூற் கல்வியை இளமைதொட்டே கற்று வருவோமாயின் அந் நூற்கல்வியறிவு எல்லாத் தொழி லிலும் விளங்கி நிற்குமாதலாற், சமைத்தல் தைத்தல் முதலான மற்றைய சிறு கல்வி யெல்லாம் நாம் பிற ரிடத்துக் கல்லாமலே தாமாக வரும். அழிவில் செல்வ மாகிய கல்வியோ அங்ஙன மன்று. நூற்கல்வியை

இளமைதொட்டே கற்று வருவோமாயின், இம்மையிற் புகழையும், மறுமையில் வீட்டின்பத்தையும் அடையலாம். இவ்வரிய நூற்கல்வியைக் கற்பதற்குப் பல ஆண்டுகள் வேண்டப்படுமல்லவா? ஆகையாற் பொன்றுந் துணையாகிய நூற்கல்வியை முதன்மையாகக் கற்றுப், பின் சிறு கல்வியைத் தாமே கற்கலாம்.

இன்னும், பகலவன் உலகுக்கொருவனாய் எக்காலமும் நின்று விளங்குதல்போல, எல்லாச் சிறு கல்விகளுக்கும் முதன்மையாய் நின்று விளங்குவது அழிவில் செல்வமாகிய நூற்கல்வி ஒன்றுமேயாம். இங்ஙனம் என்றும் அழிவில்லாததாய் விளங்கித் தோன்றும் அந் நூற்கல்வியைக் கற்பதற்குப் பெண்பாலாரான நாம் முன்னெழுந்தாலும், நம் எண்ணத்திற்கு மாறாகத் தாய்மார் சிலர், பெண்பாலாரான நமக்குத் தைத்தல், சமைத்தல், பின்னல் முதலான சிறு கல்வியை மட்டும் மிகுந்த முயற்சியோடு கற்பிக்கின்றார்கள். அவர்களை நோக்கி, அழிவில் செல்வமாகிய நூற்கல்வியை ஏன் கற்பிக்கவில்லை யென்றால், அதற்கு அவர்கள் அடுப்பூதும் பெண்களுக்கு நூற்கல்வி யாது பயனைச் செய்யும்? என்றும், பெண்கள் படித்தல் கூடாதென்றும் பேதைமையோடு பேசிவிடுகின்றார்கள். அன்னோ! இவர்கள் பேதைமைதான் என்னே!

இன்னும், சிறிதும் ஒளியின்றிக் கிடந்த ஓர் இருட்டறைக்குட் பகலவன் ஒளியை உட்செல்ல விடுத்தால் அஃது அவ்வறையின் இருளை நீக்கி அதனை மிகுந்த ஒளியுடன் விளங்கச் செய்தல் போலப், பெண்பாலாரான நமக்கு ஏற்கனவே இருளடைந்து கிடக்கும் நம்மனத்தில் நூற்கல்வி யென்னும் கதிரவனொளியைச் செல்ல விடுத்து நம் மன இருளை நீங்கச் செய்தால், நமதறிவு ஒளியுடன் பொலிந்து விளங்குமல்லவா?

"பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைகூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமி லறிவி னவர்."

என்று நாலடியாரின்கட் கூறப்பட்டவண்ணம் தாய்மார் சிலர் நூற்கல்வியில் வல்ல பெண்மணிகளாய் அகத்தே யிருந்தும், அவர்களிடத்திற் சென்று கல்வியில் மேம்பட ஒட்டாமலும், கற்ற அப் பெண்மணிக ளிடத்தில் நம்மை நூற்கல்வி கற்கவிடாமலும், அவர்க ளுடன் பழக இசையாமலும், நாம் வீண்பொழுது கழித்துப் பேரிருளில் அழுந்தும்படி நம்மவர் செய்கி ருர்கள்! இவர்கள் பேதைமைதான் என்னே! இன் னும், ஆங்கில நன்மக்களிற் பெரும்பாலும் தாய்மார் கள் தாம் ஆங்கிலக் கல்வியில் வல்லவர்களாய் இருத்த லாலே, அவர்கள் தம் பெண்மக்களையும் ஆங்கிலக் கல்வியில் வல்லவர்களாக்கி, அறிவுப்பெரு நூல்களை அவர்கள் இயற்றும்படி செய்து, பல நன்மைகளை விளைவித்து, இம்மையிற் புகழையும் அறிவையும், மறுமையில் இறைவனருளையும் எய்துகின்றுர்கள். இவ்விந்திய நாட்டுத் தாய்மார்களோ கல்வியின் அருமை தெரியாதவர்களா யிருத்தலால், அவர்கள் வயிற்றிற் பிறக்கும் பெண்மக்களும் கல்வி இலரா யிருக்கின்றனர். ஆதலால், தமிழ்க்கல்வியில் வல்லவர் களாயும், அறிவுப் பெருநூல்களை இயற்றுதலில் திறம் பெற்றவர்களாயும் இருக்கும் பெண்மணிகளை நம்மிற் காண்பது அரிதினும் அரிதாயிருக்கின்றது. தமிழ் நூற்கல்வி யின்றி அறியாமை வழிப்பட்டுக் கிடக்கும் நமக்குத் தமிழ்நூற் கல்வியை அறிவுறுத்துவார்க ளாயின், அத் தமிழ்நூற் கல்வியறிவால் உலகத்திற் பல நன்மைகளை விளைவித்தும் பல சீர்திருத்தங்களைச் செய்வித்தும் வாழலாம். பெண்மக்களாகிய நாமே முதன்மையாகக் கல்வியில் மேம்பட்டு வருதல் வேண்டும். பெண்மக்கள் நூற்கல்வியில் மேம்பட் டால்தான் அப் பெண்மக்கள் ஈனும் பிள்ளைகளும் நன்மக்களாக வளர்ந்தும், நூற்கல்வியில் மேம்பட்டும், உலகத்திற் பலவகையான நன்மைகளை விளைத்தும் புகழையும் அறிவையும் நல் வினையையும் அடைவார்க ளென்று நம்மனேர் அறிதல் வேண்டும்.

இன்னும், சமைத்தல் தைத்தல் முதலான சிறு கல்விதான் நிலையுற்றிருப்பதென்று தாய்மார் சிலர் பேதைமையாய்ப் பேசுகிறார்களல்லவா? முற்காலத்திலும், தமிழ்நூற் கல்வியில்லாமற், சமைத்தல், தைத்தல் முதலான சிறு கல்வியில் எவ்வளவோ வல்லவர்களாய் உள்ளவர்களும் இருந்திருப்பார்களல்லவா? அவர்கள் பெயரெல்லாம் இந்நில உலகில் நிலவுகின்றனவா? சிறிதும் இல்லையே. அல்லது இக்காலத்திலும் சிறுகல்வியில் வல்லவர்கள் எத்தனையோ பெயர் இருக்கிறார்களல்லவா? அவர்கள் பெயரெல்லாம் விளங்குகின்றனவா? சிறிதும் இல்லையே. இக்காலத்திலும் தமிழ்நூற் கல்வியில் வல்ல ஒரு பெண்மணி எங்கிருப்பினும், அப்பெண்மணியின் பெயர் தெற்றென விளங்குகின்றதன்றோ?

இன்னும், ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னேயிருந்த **வெள்ளிவீதியார்** முதலான பெருமாட்டிகளெல்லாம், தமிழ்நூற் கல்வியில் வல்லவர்களாயும், பல நூலாராய்ச்சிகளிற் சிறந்தவர்களாயும் இருந்து, உலக நன்மைக்காக அறிவுப் பெரு நூல்களை இயற்றினதால் அன்றோ, இந்நில உலகில் இன்னும் அப் பெருமாட்டிகளின் பெயர்களெல்லாம் அழியாமல் நிலவுகின்றன. இவ்வுண்மையை அறிந்த தாய்மார்கள் சமைத்தல் முதலான சிறு கல்வியே நிலையுற்றிருப்பதென்று சொல்லத் துணிவரோ கூறுமின்கள்! தாய்மார் இனிமேலாயினும், "தீமை யகற்று, நன்மை கடைப்பிடி" என்ற **ஔவையார்** திருமொழியைக் கைக்கொண்டு, அடுப்பூதும் பெண்களுக்குக் கல்வி வேண்டாம் வேண்டாமென்னும் தீச்சொல்லை அகற்றி, அடுப்பூதும் பெண்களுக்குக் கல்வி வேண்டும் வேண்டுமென்னும் நற்சொல்லைக் கடைப்பிடித்துத் தம் பெண்மக்களை நூற்கல்வியில் மேம்படச் செய்து எல்லாம் வல்ல இறைவனருட்டிறத்தால் மேன்மையைப் பெறுவார்களாக!

---

# 2. ஒழுங்கான கல்வி

கல்வி யென்னும் சொல்லுக்குப் பொருளென்னை யெனின், நம் மனத்தின்கண் இருக்கின்ற அறியாமை யிருளைக் கல்வி நீக்கி விளக்குவது என்பதாம். கல்வி யானது நூற்கல்வி, தொழிற் கல்வி யென இருவகைப் படும். மேன்மேலும் தம் அறிவை விளங்கச் செய்ய வேண்டு மென்னும் எண்ண முறுவார்க்கும், உலக இயற்கைப் பொருள்களை ஆராய்வோர்க்கும் நூற்கல்வி இன்றியமையாத தொன்றும். நூற்கல்வியால் நாமெய்தும் பயன்கள் அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு. அவைகளைக் குமரகுருபர அடிகள்,

> " அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
> புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
> றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
> சிற்றுயிர்க் குற்ற துணை "

என்று நீதிநெறி விளக்கத்திற் கூறியுள்ளார். இவற்றுள் அஃது அறந்தருதலைப்பற்றிச் சிறிதாராய்வாம். அறத்தைக் கல்லாதாரும் செய்யக் காண்கின்றோமே யெனின், அவர்கள் நூல்களிற் கூறிய அறப்பயன்களை உணரா ராகலின், அவர் செய்யும் அறம் பிழைபா டுடைத்தென்று பிறர் கூறின் அதைச் செய்தலை விடினும் விடுவர். ஆனால், கற்றவரோ நூல்களிற் கூறிய அறப்பயன்களை நன்கு உணர்ந்திருப்பாராகலின், தாம் செய்யும் அறம் முறையன் றென்று பிறர் கூறினும் அதனைச் செய்தலினின்றுந் தவறார். கல்லாதார் பொருளைக்கொண்டு அறஞ்செய்யப் புகினும், நூல்களிற் கூறிய முறைப்படி தக்க வழியில் அதனைச் சிறக்கச் செய்ய அறியாதவர்களா யிருக்கின்றனர். கற்றார், சிறு செல்வத்தைக்கொண்டும்பேர் அறத்தைச் செய்வர். இதனைக் குறித்தே 'நாலடியா'ரிற் பின் வருமாறு கூறப்பட்டிருக்கின்றது :

" உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனும்
தான்சிறிதே யாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும் "

இனி, அது பொருள் தருதலைப்பற்றிச் சிறிதாராய்வாம். கல்லாதார் எக்காலத்தும் செல்வ முடையரா யிருத்த லரிது. ஏனெனிற், கல்லாதாரது பொருள் பிறராற் கவரப்படினும், வேறு வழிகளிற் கேடுறினும் அப்பொருளை அவர் மீண்டும் பெற லரிது. கற்றூர் செல்வத்தை யிழப்பினும் மீண்டும் கல்வியினுதவியால் அதனை எளிதாகப் பெறுவர். இதனைக் குறித்தற்கே,

" கைப்பொருள் கொடுத்துங் கற்றல்
கற்றபின் கண்ணுமாகும்,
மெய்ப்பொருள் விளக்கும் நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையுமாகும்,
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும்
புகழுமாந் துணைவியாக்கும்,
இப்பொருள் எய்தி நின்றீர்
இரங்குவ தென்னை யென்றான் "

என்று சீவகசிந்தாமணியுங் கூறுகின்றது.

இனி, அஃது இன்பந் தருதலைப்பற்றிச் சிறிதாராய்வாம். கல்லாதாரிடத்துப் பெரும் பொருளிருப்பினும் அதனைத் தக்க நாகரிக வழியிற் செலவுசெய்து இன்ப நுகர அறியாதவர்களா யிருக்கின்றனர். இதனைச் சில நாட்டுப்புறங்களிலுள்ள பெரும் பணக்காரரிடத்து இன்றுங் கண்கூடாகக் காணலாம். அவர்கள் கற்றல், உண்ணல், உடுத்தல், கொடுத்தல் முதலியவைகளால் உண்டாகின்ற இன்பங்களைத் தருங் கல்வியறிவின் விளக்க மின்மையால் தம் பொருளைப் பொய்யான இன்பங்களிற் செலவழித்துத் தம் வாழ்நாளை வீணே கழிக்கின்றனர். இதனைக் குறித்தே,

" உண்ணு னொளிநிறா னோங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே

வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும்.''

என்று **நாலடியார்** கூறுநிற்கின்றது.

இனி, அது வீடு தருதலைப்பற்றி யாராய்வாம்.

'' ஈதற்குச் செய்க பொருளை யறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை—யாது
மருள்புரிந்து சொல்லுக சொல்லையிம் மூன்று
மிருளுலகஞ் சேராத வாறு ''

என்னுந் **திரிகடுகப்** பாட்டிற் கிசைய, வீடடைதற் கேதுவாகிய அறம் பொருள் இன்பம் என்னு மிவற்றை இம்மையில் முறையாகச் செய்தால், அதுவே மறுமையில் வீடுபேற்றினைத் தருவதாம். மேற்கூறிய இருவகைக் கல்வியில் நூற்கல்வியானது தன்மொழிக் கல்வி யெனவும் பிறமொழிக் கல்வி யெனவும் இரு வகைப்படும். தன்மொழிக் கல்வி யென்பதுதான் கட்டாயமாகக் கற்கவேண்டிய தாய்மொழிக் கல்வி யாம். பிறமொழிக் கல்வி யென்பது அயல்நாட்டுக் கல்வி யென்பதாம். நாம் நமது தாய்மொழியை நம்மால் இயன்றமட்டுங் கற்று நன்குய்த் தேர்ச்சியடைந்த பின்புதான் பிறமொழிகளைக் கற்கவேண்டும். இன்றேல், நம்மறிவு இரண்டிலும் நிரம்பப்பெருமற் குறைபாடுடையதா யிருக்கும். தாய்மொழி கல்லா அறிவு வலிவற்றதாகவே யிருந்துவிடும். எங்ஙன மெனின், ஒரு வலுவற்ற தூணின் மேல் வலிய சுமைகளை யேற்றினுல் அத்தூண் அவற்றைத் தாங்காது முறியும். அதுபோல், நாம் நம் தாய்மொழியில் நம்மறிவை வலுப்படுத்துவதற்கு முன்னரே அயல் நாட்டுக் கல்வியைக் கற்போமாயின் அதன்கண்ணும் உயர்ந்த அறிவை அடையப்பெருது நம் தாய்மொழி யிலும் அறிவு விளங்கப்பெருது அறியாமையிற் கிடந் துழலுவோம். நம் தாய்மொழி யுள்ளும் பிறமொழி யுள்ளும் சொற்களையும் சொற்ருெடர்களையும் திருத்த மாகப் பேசவும் எழுதவும் கற்ருலன்றி அவற்றின்க

ணுள்ள மெய்ப்பொருள் விளங்காது. பிழையின்றி எழுதுதற்கும் பயிலுதற்கும் கருவியா யிருப்பது இலக்கணக் கல்வியேயாகும். இலக்கணம் என்னும் சொற்குப் பொருள் என்னை யெனின், இலக்கியத்திலுள்ள அமைப்புகளைச் செவ்விதின் விளக்கிக் காட்டுவது என்பதாம். ஒரு தச்சன் ஓரழகிய பாவையைச் செய்ய வேண்டின் அதனை யமைத்தற்குரிய கருவிகளை முதலிற் செம்மையாகத் தெரிந்துவைத்துக் கொள்ளல் போல, நாமும் இலக்கிய நூல்களைத் திருத்தமாகவும் பிழையறவும் பயிலுதற்கு இலக்கணம் கட்டாயம்வேண்டும். இலக்கணத்தின் முதன்மையைக் குறித்தே,

> " எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழு முயிர்க்கு "

என்று **திருவள்ளுவ நாயனர்** கூறியிருக்கின்றார். இத் திருப்பாட்டிலுள்ள எண் என்னும் சொல்லுக்குச் சிலர் கணக்கு என்று பொருள் கூறுகின்றனர். ஆனால்,

> " எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
> எனுநான் களவையுள் உம்மில தத்தொகை "

என்னும் **நன்னூற்** சூத்திரப்படி எண் என்பது எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை என நால்வகைப்படும். இவற்றுள், **எண்ணலளவை** யென்பது கருத்தா லளக்கப்படும் அளவை நூலாகும். இதனை வடமொழியில் தருக்கநூ லென்பர். மற்ற எடுத்தல், முகத்தல், நீட்டல் என்பனவோ புறப் பொருளாராய்ச்சியாகும். மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்புலன்களாலும் உணரப்படும் பொருள்களையும், அப் பொருள்களின் தன்மைகளையும் அறிவதே **புறப்பொருள் ஆராய்ச்சி**. அவ் வைம்புலன்களாலும் ஆராய்ந்தவற்றையும், புறப்பொருளுக்கும் மேம்பட்ட கடவுள் நிலையையும், துறக்க நிலையையும், மெய்யறிவையும், உயிரின் நிலையையும் ஆராய்வது **அகப்பொருளாராய்ச்சி**யாகும். ஒன்று இரண்டு மூன்றென

எண்ணி யறிதலே எண்ணலளவை; பலம், வீசை, மணங்கு என நிறுத்தறிதலே எடுத்தலளவை; ஆழாக்கு, உழக்கு, படி என முகந்தறிதலே முகத்த லளவை; விரல், அடி, முழம் என நீட்டியறிதலே நீட்டலளவை. இந்நான்களவைகளும் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் புறக் கருவிகளைக் கொண்டு வெளியே யுள்ள புறப்பொருளை ஆராய்தலாற் கணக்குநூ லாராய்ச்சியைப் புறப்பொருளாராய்ச்சி யென்று வழங்குவர். இப் புறப்பொருளாராய்ச்சியா லளக்க முடியாத கடவுள்நிலை, துறக்கநிலை முதலிய வற்றை நுட்பமாக ஆராயும் ஆராய்ச்சியே அகப்பொரு ளாராய்ச்சி யென்று வழங்கப்படும்.

கண்டதைக் கொண்டு காணுததை யறிவதே தருக்கமாகும். எதுபோ லெனின், நாம் அடுக்களையில் தீயையும் புகையையும் பலகாலுங் கண்டு, அப் புகை தீயினின்றும் வருகின்றதென்பதை உணர்ந்தபின், நாம் ஒரு மலைப்பக்கத்தே செல்லும்போது அம்மலைமே லிருந்து புகையெழ, முன் தீயினின்றும் புகைவருதலைக் கண்டிருக்கின்ருே மாகலின், அப் புகை வருதற்கு அவ்விடத்தில் தீ யிருக்கின்றதென்று உணர்கின்ருேம். இவ்வாறு காணப்படும் புகையைக் கொண்டு காணுத தீயை உணர்வதுதான் தருக்க மெனப்படும். இன்னும், நாம் குழந்தைகளாய்ப் பிறந்து பால் பருகத் துவங்கிய நாள் முதலே நம்மோடு தருக்க உணர்வும் வளர்ந்து வருகின்றது. எவ்வாறெனின், ஒரு பெண் குழந்தையா யிருந்து பால் பருகும்போது தாயையும் பாலையும் பலகாலும் அறிந்து, பின் பசித்தழுதபோது, தாயைக் கண்டதும், முன் அவள் பலமுறையும் பால் கொடுத் திருக்கின்ருளாகலின் இவளிப்போதும் எனக்குப் பால் கொடுப்பாள் என்று உணர்ந்து அழுகையை நிறுத்தி விடுகின்றதன்ருே? இங்ஙனம் நடக்கப்போகும் செயல் களை நடந்ததைக்கொண்டு ஆராயும்போது தருக்க உணர்வு உண்டாகின்றது. புறப்பொருளை யளக்கும் கணக்குக்கும் அகப்பொருளாகிய கடவுள் நிலை,

துறக்கநிலை முதலியவற்றை விளக்கும் அகப்பொருளாராய்ச்சிக்கும் தருக்கம் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. முதலில், புறப்பொருளை யாராய்தற்குக் கருவியாகிய கணக்கை ஆராய்ந்த பின்னரன்றோ அகப்பொருளை யாராய வல்லவர்க ளாகின்றோ மென்று நினைக்கலாம். ஆனால், புறப்பொருளாகிய கணக்கை ஆராயும்போது தருக்க உணர்வே முன்னின்று அக் கணக்கறிவையும் உண்டாக்குகின்றது. எவ்வாறெனின், ஒன்று ஒன்றாகப் பத்து மாம்பழங்களைக் கூட்டினால் அத் தொகையைப் பத்தென்று சொல்லுகின்றோம். அப்பத்தில் நான்கு போய்விட்டால் மிச்சம் ஆறு என்று எண்ணிப் பாராவிட்டாலும், ஆறு இருக்க வேண்டுமென்று பார்த்ததைக் கொண்டு பாராததை யுறுதியாகச் சொல்லுகின்றோமல்லவா? இவ்வாறு ஆராய்வதும் தருக்கமே; அஃதாவது அளவை யுணர்வேயாகும். புறப்பொருளை யாராயும் கணக்கை நாம் கற்க வேண்டுவது உலக வாழ்க்கைக்கு இன்றியமையாததாயிருப்பினும், அகப் பொருளாகிய கடவுள் நிலை, உயிரின் நிலை முதலியன புறப்பொருளினும் மேன்மை யுடைத்தாகலின், அதனை யாராய்ந்து கற்றற்கே கண்ணுங் கருத்துமாக இருக்கவேண்டும். புறப்பொருளை யளக்கும் கணக்குக்கும் அகப்பொருளாகிய கடவுள் நிலை, உயிரின் நிலை முதலியவற்றை யளக்கும் ஆராய்ச்சிக்கும் தருக்கம் பொது. புறப்பொருள் ஆராய்ச்சியில் நிற்கும் தருக்க உணர்வால் எண்ணியறிதற்குரிய புறப்பொருளை யாராய்ந்து பயில முடியுமேயல்லாமற் பிழையின்றி எழுதுதற்கும் பயிலுதற்கும் அஃது உதவி செய்யாது. இலக்கணத்திற்கே தருக்கம் சிறப்பாக வேண்டப்படுகின்றது. ஆதலின், **திருவள்ளுவ நாயனார்** எண் என்னும் சொல்லுக்குத் தருக்கம் என்னும் பொருளைத் தந்து அதனை முன்னும், அத் தருக்கத்திற்கு இன்றியமையாக் கருவியாகிய எழுத்தென்னும் இலக்கணத்தைப் பின்னுமாக வைத்து, "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப" என்று

கூறினாராகலின், எண் என்னும் சொல்லுக்குக் கணக்கு என்று பொருள் கூறலாகாது. நாம் நூல்க ளியற்று தற்கும் விரிவுரைகள் செய்தற்கும் செய்யுளியற்று தற்கும் அகப்பொரு ளாராய்ச்சியாய் நிற்கும் தருக்க மும், அத்தருக்க நூலுணர்ச்சிக்குக் கருவியாகிய இலக் கணமும் இன்றியமையாதனவாம். யான் மேல் விளக் கிக்காட்டிய பொருள்களைக் கொண்டு கணக்கைக் குறைவாகப் பேசுகின்றேனென்று நினைக்கலாகாது.

இக்காலத்தில் நம்மவர்களிற் பெருந்தொகையின ரான பெண்பாலர்கள் கல்வி கற்கின்றார்கள். ஆனால், பள்ளிக்கூடங்களிற் புறப்பொரு ளாராய்ச்சியாகிய கணக்கைக் கட்டாயக்கல்வியாக ஏற்படுத்தி அதனி னுஞ் சிறந்த இலக்கணக் கல்வியைக் கட்டாயமல்லாத கல்வியாக ஏற்படுத்தி யிருக்கின்றார்கள். பள்ளிக்கூடங் களில் நமக்குத் தமிழ்க் கல்வியினையும் ஆங்கிலக் கல்வி யினையும் போதுமான இலக்கணக் கல்வியின்றிக் கற்பிக்கின்றார்களாகலின் நாம் பல ஆண்டுகள் முயன்று பள்ளிக்கூடத்தில் இருமொழிகளையுங் கற்றாலுங்கூட, நாம் ஒரு மொழியிலாவது ஒரு நூலேனும்; ஒரு செய்யுளேனும், ஒரு விரிவுரையேனும் இயற்ற ஆற்ற லற்றவர்களா யிருக்கின்றோம். இவ்வாறு போதுமான இலக்கணக் கல்வியில்லாமற் பெருந்தொகையினரான நம் பெண்மக்கள் கல்விகற்றாலும் நாம் உலக நன் மைக்கும் நமது பெயர் உலகில் நிலைபெறுதற்கும் தக்கபடி நூல்களையும் செய்யுட்களையும் விரிவுரை களையும் இயற்ற வலுவற்றவர்களாய் இவ்வுலகை விட்டு நீங்குவோமாயின், நம் பேரும் புகழும் நம் மோடே நீங்குமல்லவா? நம்மவர்களிற் பெண்பாலார் பள்ளிக்கூடப் பயிற்சியை முடித்த பின்னரேனும், தாம் பள்ளிக்கூடத்திற் சிறிதாகக் கற்ற இலக்கண உணர்வைப் பெருக்கி நூல்கள் எழுத முயல்கின்றார் களாவென்றால் அதுவுமில்லை. ஆங்கில மக்களிற் பெண் பாலாரிற் சிலர் பள்ளிக்கூடப் பயிற்சியை முடித்த பிறகு தாம் சிறிதளவாகக் கற்ற இலக்கண உணர்

வைப் பெருக்கித் தங்கள் காலத்தை வீண்போக்காமல் உலக நன்மைக்காகப் பல நூல்களையும் எழுத முயல்கின்றனர்; பல விரிவுரைகளையும் செய்கின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னேயிருந்த நூற்றுக் கணக்கான தமிழ்ப் பெண்மக்கள் தம் தாய்மொழியாகிய செந்தமிழை இலக்கணக் கல்வியோடு பிழையறக் கற்று **"அகநானூறு," "புறநானூறு," "குறுந்தொகை"** முதலிய நூல்களில் தீஞ்சுவையினையுடைய பாட்டுகளைப் பாடியிருக்கின்றனர். அவர்களில் இருவரை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன்.

**நச்செள்ளையார்** என்னும் பெண்மணி கல்வியிற் சிறந்தவள். அவள் **சேரலாதன்** என்னும் சேரமன்னனைப் புகழ்ந்து பாட, அவன் அவள் அங்ஙனம் சொற்சுவை பொருட்சுவை முதலியன விளங்கப் பாடிய செய்யுட்களைக் கண்டு அவள் நுட்ப அறிவின் வன்மையைப் பெரிதும் பாராட்டி, அவள் அணிகலனுக் கென்று ஒன்பது துலாம் பொன்னும், ஆயிரம் பொற் காசும் பரிசிலாகக் கொடுத்தான்; அதுவுமன்றி அரசன் பக்கத்தே வீற்றிருக்கும் பெருஞ் சிறப்பையும் அவள் பெற்றாள். இவள் காக்கை கரைந்தமையினைப் பாராட்டி மிகவும் அருமையாகப் பாடினமையாற் கற்றோர் பலரால் தரப்பட்ட '**காக்கை பாடினி**' என்னும் பெயரையும் பெற்றனள். இவள் இயற்றிய செய்யுளிலக்கணத்தினின்றும் பல சூத்திரங்கள் **"யாப்பருங்கலக் காரிகை"** என்னும் செய்யுளிலக்கண நூலின் உரையில் எடுத்துக் காட்டப்பட் டிருக்கின்றன. அவற்றுட் சிலவற்றை ஈண்டும் எடுத்துச் சொல்லுகின்றேன்.

*"நீர்த்திரை போல நிரலே முறைமுறை*
*ஆக்கஞ் சுருங்கி அசையடி தாழிசை*
*விட்டிசை விரியத் தொடுத்துச் சுரிதகந்*
*தாக்கித் தொடுத்த தரவினோடு ஏனவும்*
*யாப்புற் றமைந்த அம்போ தரங்கம்"*

" அளவடி அந்தமும் ஆதியு மாகிக்
குறளடி சிந்தடி யென்றா விரண்டு
மிடைவர நிற்ப திணைக்குற ளாகும் "

இனி, **ஆதிமந்தி** என்னும் பெண்மணியும் கல்வியிற் சிறந்தவள். இவள் திருமாவளவனெனச் சிறந்த கரிகாற் சோழன் அருமை மகளாவள். இவள் சேர நாட்டு மன்னன் ஒருவனை மணந்தவள். இவள் தன் கணவனுடன், தன் தந்தை கரிகாற் சோழனால் ஓர் ஊரில் கொண்டாடப்பட்ட புதுப்புனல் விழாவிற்குச் சென்றபோது இவளறியாதபடி இவள் கணவன் காவிரியாற்றில் விளையாடிக்கொண் டிருக்கையில் அவனைக் காவிரி நீர் அடித்துக்கொண்டு போய்விட்டது. அப்போது அவள் தன் கணவன் நீரில் மறைந்த தறியாமல்,

" மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண் டக்கோனை
யானுமோர் ஆடுகள மகளே யென்கைக்
கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
நாடுகெழு குரிசிலு மாடுகள மகனே "

என்னும் அரிய பாடலைப் பாடினாள். இவ்வாறு இலக்கணச் சுவை, பொருட் சுவை முதலியன விளங்கப் பாடிய அப்பெண்மணிகளின் பாட்டுகளைப் போல் இக்காலத்து ஆண்மக்களுங் கூடப் பாட இயலாதவர்களாயிருப்பது போதுமான இலக்கணக் கல்வியின்மையினாலேயே யன்றோ? நாம் பல ஆண்டுகள் பள்ளிக்கூடத்திற் போதுமான இலக்கணக் கல்வியின்றிக் கற்று நாமடைந்த பயனென்னை? இனிமேலாயினும், பெண்மக்களாகிய நாம் கண்விழித்தெழுந்து பள்ளிக்கூடத்திற் கற்பிக்கும் இலக்கணக் கல்வியையும் கருத்தூன்றிப் பயின்று பள்ளிக்கூடப் பயிற்சியை முடித்தபிறகு, அவ்விலக்கணக் கல்வியை மேன்மேலும் பெருக்கி, நம் அறிவை அறியாமையினின்றும் நீக்கி, உலக நன்மைக்காகப் பல செய்யுட்களையும் நூல்களையும் விரிவுரைகளையும் இயற்றி நன்மையடைய முயல்வோமாக!'

## 3. கற்றலிற் கேட்டலே நன்று

நாம் குழந்தைகளாயிருக்கும்போது இது நல்லது, இது தீயது என்று பகுத்துணரும் உணர்ச்சியும் பேசுந் திறனும் இல்லாமல் அறியாமையி லகப்பட்டுக் கிடக்கின்றோம். அப்போது, நமக்கு வாயிருந்தும் பேசாது, கண்ணிருந்தும் கண்டறியாது, செவியிருந்துங் கேளாது, மூக்கிருந்தும் முகராது, எல்லாம் அறியாமையே. பிறகு தாய் தான் பாலூட்டுங்காலம் முதற் பொருள்களைக் காட்டிக் கொடுக்கச் சிறிது சிறிதாக அறிவுடையவரானோம். பிறகு நாம் பள்ளிக்கூடத்திற்குச் செலுத்தப்பட்டு அங்கே உபாத்தியாயர் (கணக்காயர்) நமது துடுக்கடக்கிச் சிறிது சிறிதாகக் கல்வி கற்பிப்பதாற் பலவற்றை அறிந்தறிந்து அறிவுடையவரானோம். அதன்பின் அப்பள்ளிக்கூடத்தில் நம்முடன் கற்கும் நண்பர்கள் நமக்குக் கூறும் அறிவுரைகளாலும், அதன் பிறகு கற்றாரோடு கலந்து பழகுதலாலும் வரவர அறிவு வளரப்பெற்றோம். அதன்பின், ஆசிரியனை யடுத்து மெய்யறிவு நூல்களைக் கற்று மெய்ப் பொருள்களை யெல்லாம் உணரப்பெற்று மேலும் மேலும் அறிவு மிகப் பெற்றோம். இங்ஙனமே நம்மினும் உயர்ந்த மேலோருடன் கலந்து பழகும் சேர்க்கையால் நமக்கு அறியாமை நீங்கி அறிவு விளங்கப் பெறுகின்றது. இங்ஙனம் நம்மினும் உயர்ந்தோர் கூறும் அறிவுரைகளைக் கேட்டறிதலே 'கேட்ட'லாகும். இனிக் கல்வியோ வென்றால், இறந்து போன அறிவுடையோரை நாம் நேரே கண்டு அவருடைய அறிவுடை மொழிகளை நேரே கேட்க முடியாமையால், அவ் அறிவுடையோர் எழுதிவைத்த நூல்களைக் கற்றலும், நம்முடைய காலத்திலுள்ள அறிவுடையோரை நாம் நேரே கண்டு அவர் சொற்களைக் கேட்டல் எப்போதும் இயலாமையின் அவர் எழுதிய நூல்களைக் கற்றலுமே யாகும். இவ்வாறு ஆராய்ந்து பார்க்குங்காற் கல்வி யென்பது நேரே யில்லாத அறி

வுடையோர் அறிவுரைகளைக் கண்வழியாகக் கற்பதே யாம் என்பது நன்ருகப் புலப்படுகின்றது.

கேட்டற் கல்வி, கற்றற் கல்வி என்னும் இரண்டு கல்வியுள் எது சிறந்தது என்பதைப்பற்றி ஆராயுங் கால், இரண்டு கல்வியையும் முறைப்படி கற்ருல் இரண்டும் சிறந்த பயனைத் தருவனவேயாம். கல்வி யைக் கற்கவேண்டுமாயின் ஏராளமான புத்தகங்கள் வாங்கல் வேண்டும். அவற்றை வாங்குவதற்கும் நம்மைப் பாதுகாத்தற்கும் மிகுந்த பொருள் வேண்டும். அப்புத்தகங்களைக் கற்று முடித்தற்கு எத்தனையோ ஆண்டுகள் வேண்டும். இவ்வளவிற்கும் பெருமுயற்சி வேண்டும். பிறகு கற்றவைகளை நினைவி லிருத்தல் கட்டாயமாக வேண்டும். இல்லையேல் இவ்வளவு கற்றும் பயனில்லை; மறதியானது கல்விக்குப் பெரும்பகை. இங் ஙனமெல்லாம் மிக வருந்திப் பள்ளிக்கூடங்களிற் கற் கும் பெரும்பான்மையான ஆண்மக்களும், பெண் மக்களும் தாம் ஆங்கிலப் பட்டப்பெயர்கள் வாங்கல் வேண்டுமென்றும், பெரிய வேலைகளிலிருந்து பெரும் பணந் தேடவேண்டுமென்றுங் கருதிக் கல்வி கற்கின் றனர். இங்ஙனங் கற்ற பிறகோ, தாம் கற்ற சிலவற் றையும் பெரும்பாலும் மறந்துவிடுகின்றனர். இவர் கள் இங்ஙனங் கற்குங் கல்வி, கல்வி யெனப் பெயர் பெருது. அவர்கள் பள்ளிக்கூடத்திற் கணக்காயர் கற்பிக்கும் பொருள்களை நன்ருக ஆழமாக உன் னித்துக் கற்றுப், பின் தாங் கற்ற கல்வியைக் கொண்டு தம்மறிவை மேன்மேற் பெருக்கிப், பல நூல்களையும் பல விரிவுரைகளையும் செய்யுட்களையும் இயற்றுந் திறம் பெறுவதே கல்வியாகும். கல்வி கற்கு முறை இது வென்பதனை,

“ நூல்பயி லியல்பே நுவலின் வழக்கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்

*விஞதல் விஞயவை விடுத்தல் என்றிவை*
*கடனுக் கொளினே மடநனி யிகக்கும்''*

என்று நன்னூலிற் கூறிய சூத்திரத்தால் நன்கறி கின்ருேம்.

இனி, அறிவுடையோர் அவைக்களங்களி லிருந்து சொல்லும் அறிவுரைகளைச் செவியினுற் கேட்டறித லாகிய கேட்டற் கல்விக்கோ சிறிது காலமும், சிறிது முயற்சியும், சிறிது பொருளும் போதும். பணக்காரர் களுக்குக் கல்வி கற்கப் பல தகுதிகள் இருந்தாலுங்கூட அவர்களும் பல நூல்களையும் கற்று அவற்றின் பொருள்களை அறிதற்கும் நீண்டகாலம் வேண்டும். கல்வி கற்கும்போதே கழகங்களில் வந்து அறிவுடை யோர் கூறும் அறிவுமொழிகளைக் கேட்டல் முதன்மை யாம் என்பது **பழமொழி நானூற்றில்,**

*" உணற்கினிய இன்னீர் பிறிதுழி இல்லென்னும்*
*கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்—கணக்கினை*
*முற்றப் பகலும் முனியா தினிதோதிக்*
**கற்றலிற் கேட்டலே நன்று."**

என்று கூறப்பட்டு உளது. இதற்குப் பொருள் என்னையோ வெனிற், கிணற்றிலுள்ள தவளை அக் கிணற்றிலிருக்கின்ற நல்ல தண்ணீரைப் போல், வேறு நீர் வேறு இடத்தில் இராது என்று நினைப்பதுபோல், ஒரு நூல் கற்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருக் கின்றவன் அந்நூலின் வேருன பல நூல்களின் பொருள்களையும் அறிவதில் கருத்தூன்ருன்; ஆதலால், ஒவ்வொரு நூலாகக் கற்பதைவிடக் கழகங்களுக்குச் சென்று பல நூல்களையுங் கற்ற பெரியார் கூறும் அறிவு மொழிகளைக் கேட்டலே நன்ருகும் என்பது. பள்ளிக்கூடத்திற் சிறிதும் பயின்றிராதவர்கள் அவை களில் வந்து அறிவுடையோர் கூறும் மொழிகளை எவ்வாறு அறிந்துகொள்வ ரென்று நீங்கள் நினைக் கலாம். ஆனல், அவரவர்கள் நிலைக்குத் தக்கவாறு விரிவுரை செய்யப்படுங் கழகங்கட்கு வந்து அங்கே

சொல்லப்படும் அறிவுரைகளைக் கேட்டு மேன்மை யடையலாம். இங்கிலாந்தில் தச்சு, கொல்லு முதலான கைத்தொழில் செய்பவர்களின் நிலைமைக் கேற்றவாறு பல கழகங்களையும், விரிவுரை செய்பவர்களையும் ஏற்படுத்தி, அவைகளில் அத் தச்சர், கொல்லர் முதலி யோர் அறிவிலும் கல்வியிலும் சிறிது சிறிதாக மேன்மையடையச் செய்து வருகின்றனர். இங்கி லாந்தில் ஏற்படுத்தி யிருக்கும் கழகங்களைப்போல் நம் தமிழ்நாடுகளிலும் ஏற்படுத்துவார்களாயின் எல்லாத் தொழில் செய்பவர்களும் கேட்டற் கல்வியில் மேன்மை யடைவதோடு நேரம் வாய்த்தபோது கல்வியுங் கற்று மேன்மை யடைவர். பெண் பாலராகிய நாம் வீட்டின் கண்ணே இருந்து குடும்பத் தொழில்களைச் செவ்வனே நடத்தக் கடமைப்பட் டிருக்கின்றோ மாகலின், பல நூல்களையும் நெடுங்காலங் கற்கத் தகுதியில்லாதவர் களா யிருக்கின்றோம். ஆதலின், பல கலைகளையும் கற்றுணர்ந்த அறிவுடையோர் இத்தகைய கழகங் களில் வந்து கூறும் அரும்பெரும் பொருள்களைக் கேட்டுத் தெளிதல் முதன்மையினும் முதன்மையாகும். இன்னும், பள்ளிக்கூடங்களிற் கற்கும் பெண் பிள்ளைகள் ஆங்கிலம், வடமொழி முதலியவற்றைப் பெரிதாகவுந் தம் தாய்மொழியைச் சிறிதாகவுங் கற்கின்றார்கள். பல ஆண்டு அவர்கள் பள்ளிக் கூடத்திற் கற்றும் தமிழின் உண்மைப் பெருமை யினையும், தமிழில் எழுதப்பட்டிருக்கும் அரும் பெரு நூல்களையும், அவற்றின் பொருள்களையும் ஒரு சிறி தும் அறியாதவர்களா யிருக்கின்றனர். ஆதலின், இவர்கள் அறிவுடையோர் விரிவுரை செய்யும் அவை கட்கு வந்து அவர் கூறும் அறிவுரைகளைக் கேட்டால் அவர்கள் எவ்வளவு அறிவு விளங்கப் பெறுவார்கள்! எவ்வளவு அரும்பெரு நூல்களின் பொருள்களை அறிவார்கள்! பள்ளிக்கூடத்திற் பயிலும் பெண் பாலர்கள் கழகங்கட்கு வந்து அறிவுடையோர் மொழி களைக்கேட்டல் முதன்மையினும் முதன்மையேயாகும்.

நாம் நூல்களைப் பயிலும்போது அவற்றின் பொருள்கள் நம்மிடத்து நேரே பேச இயலாதனவா யிருக்கின்றனவாகலின், நாம் அவைகளைக் கண்டு மகிழ்தலும் நகைத்தலும் முடியா. மகிழ்ச்சியும் அறிவும் உண்டாகுமாறு நூல்கள் எழுதிய ஆசிரியரைக் கண்டு பேச மிகவும் அவாவுறுகின்றோமல்லமோ? ஆனால், அவைக்களங்களில் அறிவுடையோர் துன்பப் பொருள்களைப் பற்றிப் பேசுகையில் அதற்கேற்ற குரலிலும் குறிகளிலும், மகிழ்வான பொருள்களைப்பற்றிப் பேசுகையில், அதற்கேற்ற குரலிலும் குறிகளிலும் இரக்கமும் மகிழ்வும் நமக்கு உண்டாகும்படி பேசுகின்றார்கள்! அங்ஙனம் அவர்கள் செய்யும் விரிவுரைகளைக் கேட்கும் நாமும் அவர்கள் கூறும் அறிவுரைகளைக் கேட்பதிற் கருத்தைப் பதிய வைத்துத் துன்பமும் மகிழ்வும் அடைகின்றோமல்லமோ? அறிவுடையோர் செய்யும் விரிவுரைகளைக் கேட்பது சிறந்த செல்வமாகத் திருவள்ளுவ நாயனாரால்,

> "செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
> செல்வத்து ளெல்லாந் தலை"

எனக் கூறப்பட்டது.

இனி, அவைக்களங்களில் அறிவுடையோர் கூறும் அறிவுரைகளைக் கேட்கும் முறைகளைப்பற்றிச் சிறிது பேசுவாம். அறிவுடையார் பல நூல்களையும் வருந்திக் கற்றுப் பின் மனத்தி லமைத்துக்கொண்டு, நமக்கு நல்ல பொருள்களைப்பற்றிக் கூறும்பொருட்டு இத்தகைய அவைகளில் வந்து பேசும்போது, நாம் அவர்கள் விரிவுரைகளை ஒழுங்காகக் கேட்டல் வேண்டும். ஆசிரியனிடத்து மாணாக்கர்கள் அடக்க ஒடுக்கத்தோடு இருந்து நூல் கேட்டல் போலவே, அவைக்களத்துக்குச் செல்வோர்களும் ஆண்டு அறிவுடையோர் கூறும் அறிவுரைகளை அடக்க ஒடுக்கத்தோடிருந்து கேட்டல் வேண்டும். அல்லாவிடின், அவர்கள் அவைக்கு வந்தும் ஒரு பயனையும் பெறுவார்களல்லர்.

மாணுக்கன் ஆசிரியனிடத்துச் சென்று பாடங்கேட்கும் முறைகளை நன்னூலார் கூறியிருக்கின்ருர். அம் முறைகளேயே அவையிற் சென்று கேட்போரும் பின்பற்ற வேண்டி யிருத்தலின் அவற்றை இங்கே சிறிது எடுத்துப் பேசுகின்றேன்.

"கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகிஅவன் குறிப்பிற் சார்ந்து
இருவென இருந்து சொல்லெனச் சொல்லி
பருகுவன் அன்ன ஆர்வத்த னுகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவி வாயாக நெஞ்சுகள னுகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனுர் புலவர்."

என்று நன்னூலாற் தாமியற்றிய நன்னூலிற் கூறுகின்ருர். இதிற் சொல்லப்பட்ட "பொழுதொடு செல்லல்" என்பது மிகவும் உன்னிக்கற் பாலது. அஃதாவது குறித்த காலத்திற் செல்லல்வேண்டுமென்பதாம். அவைகட்குச் செல்வோரிற் பலர் புகைவண்டிக்குச் செல்பவரை ஒப்பராவர். எப்படியெனிற், புகைவண்டிக்குச் செல்வோரிற் பலர் ஓர் ஊருக்குப் போக வேண்டுமாளுல், இரண்டுமணி நேரம் அல்லது மூன்றுமணி நேரத்திற்கு முன்னரே பயணப் பொருளை ஒழுங்குபடுத்தி வைத்துக்கொள்ளல் வேண்டும். பின் புகைவண்டி புறப்படுதற்குக் கால்மணி நேரத்திற்கு முன்னேயே புகைவண்டிகள் நிற்கும் தங்குநிலைக்கு வந்திருக்க வேண்டும். அங்ஙனமின்றி, ஊருக்குச் செல்பவர்கள் தங்கு நிலைக்குப் புறப்படும் வரையில் ஒன்றும் ஒழுங்கு படுத்தாம லிருந்து புறப்படப்போகும் போது மிகவும் பரபரப்போடு தட்டுமுட்டுக்களை எடுத்துக் கட்டிக்கொண்டு, போகும் வழியில் தமக்குத் தெரிந்தோர் வீடுகளுக்குச் சென்று ஒவ்வொருவர்க்கும் தம் பயணத்தைப்பற்றிக் கூறுகின்றனர். அப்போது வண்டிக்கு நேரமாகி விடுகின்றதென்று பிறர் கத்திய

பிறகு, தாம் அவர்களோடு பேசியதும் பேசாததுமாய்த் தங்குநிலைக்கு ஓடிவருகின்றனர். அங்ஙனம் அவர்கள் நேரஞ்சென்று ஓடிவந்தால் வண்டி கிடையாமல் திகைத்து நிற்கின்றனர். இன்னும் சிலர் புகை வண்டி புறப்படும் வேளையில் விரைந்தோடுகின்றனர். இதைப்போலவே அவைகட்குச் செல்பவர்களுள்ளும் சிலர், தாம் அவைகட்குச் செல்லுதற்கு முன்னரே தமக்குள்ள வேலைகளை ஒழுங்குபெறச் செய்யாமல் போம்போது பரபரப்போடு ஒழுங்கின்றிச் செய்துவிட்டுப், பின் போகும் வழியில் தமக்குத் தெரிந்தார் வீடுகட்குச் சென்று அவ்வீட்டிலுள்ளோரை அவைக்கு வரும்படி அழைத்துக்கொண்டு செல்கின்றனர். இங்ஙனமே இவர்கள் நேரத்தைப் போக்கி விடுகின்றார்களாகலின், குறித்த காலத்தில் அவைகட்குச் சென்று அறிவுடையோர் பேசும் மொழிகளைக் கேட்க இயலாது ஏமாந்து போகின்றனர்.

இன்னும், "பருகுவன் அன்ன ஆர்வத்த னாகி" என்னும் சொற்றொடர்ப் பொருட் கேற்றவாறு நன்றாய்ப் பசித்த ஒருவன் தனக்குப் படைத்த உணவைக் கண்டவுடனே அதனை எவ்வளவு வேட்கையோடு உண்கின்றான்! அதுபோல, அறிவுடையோர் அவையின்கட் கூறும் பொருள்களையும் மிக்க அவாவோடும் ஆழ்ந்த கருத்தோடும் கேட்க வேண்டுமன்றோ? "சித்திரப் பாவையி னத்தக வடங்கி" என்ற சொற்றொடர்ப் பொருட் கிணங்க, அவையிற் கேட்போர் ஓவியத்தி லெழுதிய பாவையைப் போல் அசைவற்றுக் கேட்கவேண்டும். ஆனால், விரிவுரை நிகழ்த்துவோர் அரிய பெரிய பொருளைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில், பெண்பாலாரிற் சிலர் தம்வீட்டுக் குறைகளைப் பற்றியும் தாம் அணிந்துகொண்டிருக்கும் புடைவைகள் நகைகளின் விலைகளைப்பற்றியும் பேசத் தொடங்கி விடுகின்றனர். இவர்கள் இவ்வாறு பேசுகையில் விரிவுரையை உன்னித்துக்கொண் டிருக்கும் ஏனையோருக்கும், விரிவுரை நிகழ்த்துவோருக்கும் பெரியதொரு

துன்பத்தை விளைவிக்கின்றனர் அல்லரோ! அன்னோ! இவர்கள் வீண் பேச்சுகளைப் பேசவா அவைகட்கு வருகின்றனர்!

"செவி வாயாக நெஞ்சுகள னுகக் கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்து," என்ற சொற்றொடர்க் கேற்றவாறு அவையிற் கூறும் அறிவுரைகளைக் கேட்போர் தம் செவிகளையே அவ்வுரைகளைக் கொள்ளும் வாயாகவும், அங்ஙனம் கேட்டவற்றை உட்கொண்டு அமைக்கும் இடத்தையே மனமாகவும் கொள்வதோடு, தாம் கேட்டவற்றை உடனே மறந்து விடாமல் திரும்பத் திரும்ப நினைவிற்குக் கொண்டுவருதலும் வேண்டும். சிலர் கடமைக்காயினும் அவைகட்கு வந்துவிட்டு ஒரு பொருளையும் உன்னியாது செல்கின்றனர். அது பெருங் குற்றமே. இதற்கொரு சிறு கதையை ஈண்டெடுத்துக் கூறுகின்றேன்.

ஓர் ஊரில் மூன்று உருவங்கள் மண்ணின் கீழ்ப் புதைந்து கிடந்தன. அவற்றைச் சிலர் கண்டெடுத்தனர். அவ்வுருவங்கள் மூன்றுந் தம்முள் ஒரு சிறிதும் வேறுபாடின்றி எல்லா வகையானும் ஒத்திருந்தன. இப்புதுமையைக் கண்ட அவர்கள் அம்மூன்று உருவங்களையும் அவ்வூரிலுள்ள அரசனிடத்திற்குக் கொண்டு போனார்கள். அரசன், அமைச்சன் முதல் அங்கு உள்ளார் எல்லாரும் அவ்வுருவங்கள் எவ்வகையால் வேறுபாடு உடையன வென்று அறிதற்குப் பெரிதும் முயன்றும் அது பயன்படாதாயிற்று; பிறகு, அவ்வரசன் அவ்வுருவங்களைச் சிறந்த அறிவுடையார் ஒருவரிடம் போக்கினர். அவ்வறிவுடையார் மிகவும் முயன்று முடிவில் ஒரு சிறு துடைப்பக் குச்சியைக் கொண்டுவந்து அம்மூன்றில் ஓர் உருவத்தின் காதிலுள்ள தொளையுள் விட்டார். அப்போது காதின் வழியாக விட்ட அக் குச்சி மறு காதின் வழியாக வெளிவந்தது. அதனால் அவ்வுருவத்திற்கு "நடுத்தரம்" என்று பெயர் வைத்தார். மற்றோர் உருவத்தையெடுத்து அதன் காதில் ஒரு குச்சியை விட்டார். அக்

குச்சி வாய் வழியாக வெளியில் வந்தது. ஆதலால் அவ்வுருவத்திற்கு "இழிதரம்" என்று பெயர் வைத்தார். பின் மூன்ருவது உருவத்தின் காதின் வழியாக ஒரு குச்சியை விட்டபோது அக்குச்சி நெஞ்சுக்குள் நுழைந்தது. அதனல் அவ்வுருவத்திற்கு "உயர்தரம்" என்று பெயர் வைத்தார். இவ்வாறு இவர் கூறிய பெயர்களின் ஏதுவினை அரசன் அவரிடங் கேட்டபோது பின்வருமாறு கூறலானுர். முதல் உருவத்தின் காதின் வழியாக விட்ட குச்சி மறுகாதின் வழியாக வந்தமை, கேட்போர் சிலர் கேட்ட பொருளை மனத்தில் அமையாமல் தம் ஒரு காதால் வாங்கி அவற்றை மற்ருெரு காதால் விட்டுவிடுதலைக் காட்டிற்று. அச்சிலைக்கு "நடுத்தரம்" என்று பெயரிட்டேன் என்ருர். பின், கேட்டவைகளுள் நல்லவற்றை விடுத்துத் தீயவற்றைக் கைக்கொண்டு வாயினுல் எங்குந் தூற்றித் தீங்கு விளைவிப்போரைப் போல் உள்ள உருவத்தை "இழிதரம்" என்றேனென்ருர். பிறகு, கேட்போர் சில கேட்டவற்றைத் தம் மனத்தில் நன்ருக அமைத்துக் கொள்ளுதல் முறையாதல்போல, மூன்ரும் உருவத்தின் காதின் வழியாக விட்ட குச்சி நெஞ்சுக்குள் இறங்கியதால் அதற்குப் பெயர் "உயர்தரம்" என்றேனென்ருர். இவர் இங்ஙனம் கூறியதைக் கேட்ட அரசன் பெரிதும் மகிழ்ந்து அவர்க்குப் பல பொருள்கள் கொடுத்தனன். யான் மேல்விளக்கிக் காட்டியபடி கேட்டற் கல்வி எல்லார்க்கும் சிறந்த பயனைத் தருகின்றதாகலின், திங்கள்தோறும் ஈண்டு அறிவுடைய மாதர்களாற் கூட்டப்படும் இவ்வரிய அவைக்குத் தவருமல் வந்து அரிய பெரிய பொருள்களைக் கேட்கும் முறைப்படி கேட்டு மேன்மையடைகவென்று இறைவனை வேண்டுகின்றேன்.

(இது கி. பி. 1922-ஆம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 19-ஆம் நாள், சென்னைத் தமிழ்ச்சங்கத்தின் மாதர் அவையில் விரிவுரையாக நிகழ்த்தப்பட்டது.)

---

## 4. நாகரிகமும் மொழிவளர்ச்சியும்

மக்கள் தாம் நினைத்த நினைவுகளையும் எண்ணங்களையும் பிறர்க்கு அறிவிக்கும்பொருட்டுத் தம்மினின்றும் எழும் ஒலிகளைப் பல பொருள்கட்கும் ஏதுப் பற்றிய சொற்களாய் வழங்க அச் சொற்றொகுதியே மொழியெனப்பட்டது. மொழியானது மொழியப்படும் அளவின் நில்லாது, எழுத்து வடிவிலும் வழங்குவது என்னையோ வெனிற் கூறுதும்.

மக்கள் முதன் முதல் நாகரிகம் அற்றவர்களாய்த் தனித்தனியாய் மலைகளிலும் காடுகளிலும் மரங்களிலும் உயிர்வாழ்ந்து வந்ததோடு, விலங்கினங்களைப் போல் ஒன்றும் பேசாது பசியெடுத்தபோது கிழங்குகளையேனும் இறைச்சியையேனும் பதப்படுத்தாமல் தின்று வருவாராயினர். இந் நிலையி லிருந்த இவர்கள் தாம் ஒன்றுகூடி மகிழும் ஞான்றுந் துன்புறும் ஞான்றும் பற்பல கருத்துக்களை யுடையவராய்ப் பிறர்க்கு அவைகளை வெளியிடல் வேண்டித் தங் கை கால் முதலிய உறுப்புக்களினால் அவற்றைத் தெரிவிக்க முயன்றனர். தாம் அங்ஙனம் தெரிவித்தல் பெரிதும் இடர்ப்பாடாதல் கண்டு எளிதில் தங் கருத்தைப் பிறர்க் கறிவிக்கும் ஒரு வழியைக் கண்டறியும் முயற்சி யுடையராயினர். "முயற்சி திருவினை யாக்கும்" என்ற திருமொழிக் கிணங்க, அவர் தம் ஓயா முயற்சியால் தாங் கண்ட ஒவ்வொரு பொருள்களின் தன்மைக் கேற்ப அவைகட்குப் பெயர் தந்து வழங்குவாராயினர். பின்னர் அவர்தம் பகுத்தறிவு சிறிது சிறிதாகவே மேனோக்கிச் செல்லாநிற்பத், தம் உடம்பை உடைகளால் மறைக்கவும் குடில்களில் வாழவும் தெரிவதாயினர். பின் தம்மவர் கூட்டம் நாளேற நாளேறப் பெருக்க மடைந்தமையின் தமக்குப் போதுமான உணவுகள் காடுகளிற் கிடைத்தில. ஆகலின் அவர்கள் மலைகளினின்றும் பிரிந்து பலவேறிடங்கட்குச் சென்று குடியேறி, மண்ணைப் பதப்படுத்திப் பயிர்செய்யத்

தொடங்கினர். இங்ஙனம் பயிர் செய்யுங்காற், சில நிலப்பகுதிகள் வளத்தான் மிக்கும், வேறு சில வளத் தாற் குன்றியு மிருந்தமையின், கொழுவிய இடங்களி லிருந்தவர் எளிதில் விளைந்த பண்டங்களைத் தொகுத்து வளமுடையராக, எளிதில் நன்கு விளையாத நிலப் பகுதிகளில் உள்ளார் அது கண்டு அவர்க்குரிய பொருள்களைக் கவர்ந்துகொள்ள முயலவே, இருவர் தமக்குள்ளும் போர் உண்டாயது. போர் புரிதற்கு முன் அக்கூட்டத்தார் தமக்குள் ஒருமைப்பட்டுத் தமக்குள் ஓர் ஒழுங்கு உண்டாக்கும்பொருட்டு ஒவ் வொரு தலைவனை ஏற்படுத்தினர். பின் அத்தலைவர்கள் ஒவ்வொருவரும் தம் அறிவின் ஆற்றலால் தங்கீழுள் ளாரிடம் நல்லாற்ற‌ ஞெழுகி, அவர்களைப் பல்வகை முயற்சிகளில் ஏவித் தம் நாடுகளைப் பலவகையிலும் வளம்படுத்தி வாழுங்கால், அவர் தமக்குள்ளும் அழுக்காறு மிகுந்து ஒருவர்மீதொருவர் எதிர்க்கத் தொடங்கினர். ஒவ்வொரு வகுப்பின் தலைவரும் தம்பாற் பகைவர் வந்தணுகாவாறு வலுவமைந்த அழகிய கோட்டைகளையும், புறமதில்கள் அகழி களையும் அமைத்ததோடு, போர்புரிதற்கு வேண்டிய மறவர்களையும் தமக்கு மெய்காப்பாளரையும் துணை யாகக் கொண்டு நாகரிக வாழ்க்கையில் வாழ்ந்து வரலாயினர். இவ்வளவு நாகரிகமும் எய்தி வாழ்வ தற்கு அவர்கள் வழங்கும்மொழி சீர்திருந்தி நடைபெற வேண்டுவது இன்றியமையாததாயிற்று.

இனி, ஒவ்வொரு வகுப்பாரும் தம்மைப் படைத்துக் காக்கும் இறைவன் ஒருவன் உளன் என்பதை யுணர்ந்து அவற்குக் கோயில்கள் அமைத்து வழிபாடாற்றத் தலைப்பட்டனர். அங்ஙனம் அவர்கள் வழிபாடாற்றும்போது மனங் கசிந்து அவ்விறைவனைப் பாடிய பாட்டுக்களையும், தாம் பலவாற்றானும் சீர் பெறல் வேண்டித் தாம் நினைத்த நினைவுகளையும் எண்ணிய எண்ணங்களையும் மறந்தும் பிறழ்ந்தும் போகவிடாமல் நூல்களாய் எழுதிவைக்க முயன்றனர்.

இன்னும் நாகரிகமுடைய அம் முதுமக்கள் தாம் பயன்படுத்தும் பல்வகைப் பொருள்களின் தன்மைக் கேற்பத் தாமும் தம் முன்னோரும் பெரிதும் முயன்று கண்டறிந்த சொற்கள் பிற்காலத்துப் பேசுவோரால் சிதைந்தும் பிறழ்ந்தும் போகாமல், அவற்றை முன் வழங்கியபடியே நிலைபெறுத்துதற் பொருட்டு எழுத்து வடிவில் நூல் வழக்காய்க் கொணர்ந்தனர். ஆயின், நூல் வழக்கில் எழுதிய மொழி எக்காலமும் இறத்தல் இல்லையோ வெனில்; அற்றன்று, ஒரு மொழி உலகில் என்றும் இறப்பின்றி வழங்குவதற்கு நாகரிகமும், அம் மொழியின் ஓசை நுட்பமும், இலக்கண வரம்பும் இன்றியமையாது வேண்டப்படும். ஒரு மொழியை நாகரிகமுடைய முதுமக்கள் தம் காலத்தே செவ்வை யாக வழங்கினாலும், அம் மொழியானது நூல்வழக்கிற் கொணராமல் விடப்படுமாயின், பிற்காலத்தே தோன்றுகின்ற மக்கள் தமக்குத் தோன்றியவா றெல்லாம் அம்மொழியின் சொற்களைப் பல்வேறுவகை யாய்த் திரித்தும் சிதைத்தும் வழங்கிச் சிலகாலம் சென்றபின் அம்மொழியும் உலக வழக்கி னில்லாது இறந்துபோம்படி செய்துவிடுவர். யாழ்ப்பாணம், திருநெல்வேலி, தஞ்சாவூர், சென்னை முதலிய நாடுகளி லுள்ள தமிழ் மக்கள் தமிழ் மொழியைத் தமக்கேற்ற வாறெல்லாம் வழுப்படத் திரித்து வழங்குகின்றனர். இவர்கள் இங்ஙனம் வழுப்படத் திரித்து வழங்கும் சொற்கள் '**தொல்காப்பியம்**,' '**திவாகரம்**,' '**பிங்கலந்தை**' முதலிய நூல்களில் திருத்தமாக எழுதப்படாது விடப் பட்டிருக்குமாயின், நந் தமிழ் மொழி எவ்வாறும்! இதற் கெடுத்துக்காட்டாகத் 'தாஸ்மானியா' என்னும் நாட்டில் வழங்கிய மொழி, அந்நாட்டு முதுமக்களால் நூல்களில் எழுதி ஒழுங்குபடுத்தாது விடப்பட்ட மையின், அவர்க்குப் பின் வந்த நாகரிகமில்லா மக்கள் தாம் விரும்பியவாறு அம்மொழியைப் பிறழ்த்தியும், திரித்தும், மாற்றியும் வழங்கிவந்தனர்; இறுதியில் அம்மொழி இறந்துபட்டது. இன்னும் சைபீரியா ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலுள்ள நாகரிகமில்லா

மக்கள் வழங்கிய மொழிகள் பலவாற்ருனும் திரிந்து நாளடைவில் இறந்தொழிதலும் சான்ரும். பாதிரியார் ஒருவர் ஒரு தீவுக்குச் சென்று ஆண்டு வாழ்ந்துகொண் டிருந்த நாகரிகமில்லா மக்களின் மொழியைச் சீர் திருத்தி அதற்கு எழுத்துக்கள் உண்டாக்கித் தமது விவிலிய நூலேயும் அதில் மொழிபெயர்த்து வைத்து, அம்மொழி அவர்களிடம் நிலைபெற்றிருக்கத் தக்கபடி பல ஆண்டுகள் அவரோடிருந்து உழைத்துப் பின் தம் ஊர்க்குத் திரும்பினர். திரும்பிச் சில ஆண்டுகள் கழித்து அந்நாட்டுக்குச் சென்று பார்த்தபோது, அந் நாகரிகமில்லா மக்கள், அவர் மிகவும் முயன்று கற்பித்த மொழியை அறவே மறந்து ஏதோ ஒரு நாகரிக மற்ற மொழியைப் பேசிக்கொண்டிருக்கக் கண்டார். இவ் வரலாற்றினைக் கற்றறிவு மிக்க **மாக்ஸ்முல்லர்** தமது மொழியாராய்ச்சி நூலில் எடுத்துக் காட்டி, நாகரிக மில்லா மக்களிடைப்பட்ட மொழியானது நிலைபெருது அழிந்துபோம் என்பதை நன்ருக விளக்கியிருக்கின்ருர்.

ஒரு காலத்தில் நாகரிகவாழ்க்கை யுடையரா யிருந்த ஆரிய மக்கள் தம் ஆரிய மொழியை நூல்களில் நிலைநிறுத்தி வைத்திருந்தும், அஃது உலக வழக்கில் வழங்கா தொழிந்தது. என்னையோ வெனின், அம் மொழி இயற்கைக்கு மாருன வல்லோசைகளையும் குறிப்போசைகளையும் மிகுதியும் உடையதாகலின் அஃது அங்ஙனம் இறந்துபட்டது. அவ்வாருயின் முதன் முதல் தமிழரும் நாகரிகமற்றவராய் இருந்த காலத்துத் தமிழ் மொழியை இயற்கை ஒலிமுறை யோடு எவ்வாறு கண்டறிந்து வழங்கினர் என்று வினவுவார்க்கு விடை கூறுவாம். ஒலி ஒரே தன்மைத் தாயினும், இந்நிலவுலகத்திற் பல வேறிடங்களும், அவ் விடங்களிலுள்ள பொருள்களும் பல்வேறு தன்மை யுடையனவா யிருத்தலால், அவ்வவற்றில் வாழும் மக் களும் அவ்வந்நிலத்தின் றன்மைக் கேற்பப் பல்வே றியற்கையும், அவ்வியற்கைக் குரிய ஒலிவேறு பாடு களும் உடைய ராயினர். எங்ஙனமோ வெனின், ஒரு

நாடு குளிர்மிக்கதா யிருந்தால் அந்நாட்டின் பொருள்களும் அதற்கேற்ற தன்மையவா யிருக்கும். அதன்கண் வாழும் மக்களும் குளிரின் மிகுதியால் வெளியே வந்து, பலவகைப் பொருள்களை நன்றாக உழைத்து விளைக்கவும், சிறந்த கட்டிடங்களைக் கட்டவும் முடியாதவர்களாகித், தமக்குக் கிடைத்த உணவை உட்கொண்டு சிறு குடில்களில் வாழ்ந்துகொண்டு நாகரிக மற்றவரா யிருப்பர். அங்ஙனம் வாழும் குடிகளை இஞ்ஞான்றும் பனிமிகுந்த நாடுகளிற் காணலாம். இனிப் பனி நிலத்தில் வாழும் அம்மக்கள் வெண்ணிறத்தினராயும், வலுவினராயும் இருத்தலுக் கிசைய அவரது குரலும் உரத்த ஓசையினை உடையதாகவே யிருக்கும். வட ஆசியா என்னும் குளிரும் பனியும் மிகுந்த நாட்டில் முதன்முதல் உயிர்வாழ்ந்த ஆரியர் நாகரிக மற்ற வாழ்க்கையினராய்த் தமது உரத்த குரலுக் கேற்ற வல்லோசை நிரம்பிய மொழியொன்றை வழங்கலாயினர். குளிரும் பனியும் ஒரு நிலையான இந்நாவலந் தீவின்கண் அவ் ஆரியர் குடியேறிய பின், அவர் நாகரிக நிலை சிறிது அடைந்து அதற் கிணங்க மெல்லிய குரலும் வாய்க்கப் பெற்றாராய்த் தம் முன்னோர் வழங்கிய ஆரியமொழியை உரத்துப் பேச இயலாது நெகிழவிட அம்மொழியும் உலக வழக்கின் இல்லாது மறைந்தது.

இனி, ஆரியம், இலத்தீன் முதலான மொழிகள் பல்வேறு இடங்களில் கற்பிக்கப்படுதலும், கற்றறிவுடையராற் பேசப்படுதலும், உடையவாதல் பற்றி அவை உலகவழக்கினின்றும் ஒழிந்தனவாகக் கொள்ளப்படா என்பார்க்கு உணர்த்துவாம். மக்கள் முதன்முதல் இடர்ப்பாடின்றித் தாம் எண்ணுவனவற்றைத் தம் இனத்தவர்க்கு அறிவிக்கும் பொருட்டே சொற்களைப் பேசத் தலைப்பட்டனர். பேசத் தலைப்பட்ட சொற்களை, நாகரிகம் முதிர முதிர அவை நிலைபெறும் பொருட்டு, எழுத்திலும் எழுதத் தொடங்கினர். இங்ஙனங் கற்றூர் முதற் கல்லாதார் ஈறாகச் சிறு மகாரும் பெண்டிரும் உளப்பட எல்லாராலும் பேசப்

படுவதே மொழியெனப் படுமன்றி, நூல்களிற் கற்ருர் பால் மட்டும் வழங்குவது மொழியெனப்படாது. வல்லோசை யில்லா நந்தமிழோ சூடும் குளிர்ச்சியும் ஒப்ப வாய்ந்த இத் தமிழ்நாட்டின்கண் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய்த், தன் இளமை குன்ருது கல்லாதாராலும், கற்ருராலும், சிறுமகாராலும், பெண்டிராலும் பேசப்பட்டு வருகின்ற தென்பதை எவரே அறியாதார் கூறுமின்கள்!

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத்
துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி
யிருப்பதுபோற்,
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலை
யாளமுந் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல
ஆயிடினும்,
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து
சிதையாவுன்,
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து
வாழ்த்துதுமே"

என்னும் 'மனோன்மணீயத்' தமிழ்த்தாய் வணக்கச் செய்யுளால் இவ்வுண்மையும் நன்கு விளங்கும். பண்டைக் காலத்து நூல் வழக்கில் உள்ள தமிழ் உலக வழக்கிற் பேசப்படுதலில்லாததுபற்றி அதுவும் மொழி யெனப் படாதெனின்; அற்றன்று, மக்கள் முதன் முதல் சொற் சொல்லத் தொடங்கிய காலத்துப் பேசுகின்ற தம்மையும், முன்னின்று பேசுவோரையும், தம்மாற் பேசப்படுவோரையும் சுட்டிப் பேசுதற்கு நான், நாம், நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை என்னும் இடப்பெயர்களும், தமக்கு நெருங்கிய உறவினராயுள்ள அம்மை, அப்பன், தம்பி, தங்கை, அக்கை, கணவன், மனைவி என்பாரைக் குறிக்கும் முறைப் பெயர்களும், தமக்கு இன்றியமையாது வேண்டும் உணவுப் பொருள்களான காய், கனி, கிழங்கு, நீர்,

பால், தேன் என்பவற்றைக் குறிக்கும் உணவுப் பெயர்களும், இவ்வுணவுப் பொருள்களை அளந்தறிய ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு முதலான எண்களின் பெயர்களும், அவ்வுணவுப் பொருள்களை யிவ்வளவின என்று அளந்தறிதற்கு ஆழாக்கு, உழக்கு, படி என்னும் கருவிப் பெயர்களும், தாம் உணவு சமைத்தற்கு வேண்டிய கலம், பானை என்னும் கலப்பெயர்களும், தமக்கு இன்றியமையாத மண், நீர், தீ, காற்று, வெளி என்னும் முதற் பொருளின் பெயர்களும், தாம் நாடோறும் எதிரே காணும் ஆடு, மாடு, குதிரை என்னும் விலங்கினங்களின் பெயர்களும், தம்முடம்பின் கண் உள்ள தலை, கை, கால் என்னும் உறுப்பின் பெயர்களும் நம் பண்டைத் தமிழ் நூல்களிற் காணப்படுவதோடு, இன்றுகாறும் அவை திரிவுபடாமற் கல்லாதாராலும், கற்றோராலும், மகாராலும் வழங்கப்பட்டு வருவதை வெள்ளிடைமலைபோற் றெள்ளிதி லுணரலாம். ஆதலாற், றமிழ்மொழியின் உயிரான கூறு எக்காலத்துந் திரிபின்றியே வழங்குகின்றமை தெளியப்படும்.

இனி, வருந்திச் சொல்லவேண்டிய ழகர ளகரங்கள் தமிழ்மொழியில் இருத்தல்பற்றி, அது செயற்கை மொழியாகுமோ வெனின், ஆகாது. நந்தமிழ் மக்கள் முதன்முதற் சொற் சொல்லத் துவங்கிய காலத்துத் தாம் நாடோறும் இன்றியமையாது பேச வேண்டிய பெயர்களில் ழகர ளகர ஒலிகள் கலந்தில. பிற் காலத்தே அவர் நாகரிக முதிர்ச்சி யடைந்து பலவகை யினிய ஒலிகளைச் சொல்லத் தெரிந்தபின் அவ்வொலிகள் தோன்றிப் பல சொற்களிலும் பெருகிக் கலப்பவாயின. ஒரு குடப் பாலில் விட்ட கருப்பஞ்சாறு அப்பாற் சுவையினை மாற்றுமல் அருந்துவோர்க்கு அதன் சுவையினைப் பின்னும் மிகுதிப்படுத்தல் போல, நந் தூய செந்தமிழினிடத்துப் பின்னுளிற் கலந்த இவ்வினிய ஒலிகள் நஞ்செந்தமிழ்ச் சுவையினைக் குறைவு செய்யாது அதனை நிரம்பவும் நிறைய செய்வவாயின

என்க. மிகுதியும் வல்லோசை நிரம்பப்பெற்ற ஆரியம், இலத்தீன் முதலான மொழிகளில் இத்தகைய ஒலிகள் இன்மையின் அவை தம்மை வழங்குவார்க்கும் துன்பந் தருவவாயின.

இன்னும் சிறிது இவ் ழகர ளகர ஒலிகளைப் பற்றி ஆராய்வாம்.

நாம் ஒருவரோடொருவர் அமைதியாய் அறிவோடு பேசும்போது மெல்லிய குரலிற் பேசுகின்றோம். நாம் அமைதியும் அறிவுமின்றிச் சினந்து உரையாடும்போது உரத்தகுரலிற் பேசுகின்றோம். உரத்துப் பேசும்போது ஓசையானது உரைக்கப்படும் சொல்லுக் கடங்காமலும், நாவினால் ஒற்றப்படும் மேலண்ணத்தின் அளவில் நில்லாமலும் மூச்சோடு கலந்து மிகுதியாக வெளியே கழிந்து செல்கின்றது. அவ்வாறு மூச்சு மிகுதியாக வெளியே செல்லுங்காற் களைப்பும் இளைப்பும் உண்டாகின்றன. அமைதியாகப் பேசும்போது சொற்களினோசை நாவினால் ஒற்றப்படும் மேலண்ணத்தின் அளவில் நிற்க, மூச்சுச் சிறிது சிறிதாக வெளியே அளவாகக் கழிந்து செல்கின்றது. இங்ஙனம் மூச்சு அளவாகவும் மெதுவாகவும் கழிந்து செல்வதால் உடம்பினுருப்புக்கள் தளர்வுறாமல் ஒழுங்காக இருக்கும். இவ்வியற்கை முறைப்படி நோக்குங்கால் தமிழ் ஒலிகள் அமைதியாய் அறிவோடு பேசுதற்கு ஏற்றனவாயும், வடமொழி ஒலிகள் உரத்த ஓசையுடையனவாய்ப் பேசுதற்கு ஏற்றன அல்லவாயும் இருக்கின்றன. அற்றேல், சமஸ்கிருத ஒலிகள் பேசுதற்கு வருத்தந் தருவது போலவே ழகர ளகர ஒலிகளும் வருத்தந் தருகின்றன என்பார்க்குக் கூறுதும். சமஸ்கிருத ஒலிகள் கொப்பூழின் அகத்தினின்றும் எழும்பி நாவினால் ஒற்றப்படும் மேலண்ணத்தின் அளவில் நில்லாது மூச்சு மிகுதியும் வெளியே கழிந்து செல்லச் செல்வதால் நம் உடம்பு வலுக்குறைந்து போகின்றது. நாம் ஒருவரைச் சினந்து பேசுங்கால் ஓசை உரக்க எழுதலின் நம் மூச்சு மிகவும் வெளியே கழிந்து சென்று நம் உடம்பின் வலிவைக்

குறைப்பதோடு, சிலர் செந்நீர் பொங்கி உயிரையுந் துறக்கின்றனர். நம் மூச்சைச் சிறிதேனும் அடக்கிய பிறகுதான் நாம் எந்த முயற்சியையும் செய்ய வல்லவர்களாகின்றோமென்பதை இயற்கையிற் காண்கின்றோம். நாம் பேசும்போது ஓசை மிகவும் பரவிச் செல்லச் செல்ல நம் உடம்புநலங் குறைகின்றது. வலுக் குறைந்தபின் நாம் ஒருமனப்பட்டு இறைவனை நினைத்தற்கு ஏலாமையின், அறிவுடைய பெரியோரிற் சிலர் வாய்பேசாதிருந்து மூச்சைத் தம்முள்ளே யடக்கித் தம் மனத்தை ஒருவழி நிறுத்தி உலகிற் பல வியப்பான நிகழ்ச்சிகளை நிகழ்த்துகின்றனர். மூச்சை அடக்குவதால் உண்டாகும் நன்மையைக் குறித்தே,

> " ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்கும்
> காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
> காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
> கூற்றை யுதைக்குங் குறியது வாமே "

> " புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
> நெறிப்பட வாங்கி நின்மல மாக்கில்
> உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
> புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே "

என்று **திருமூல நாயனாரும்** கூறியுள்ளார். ஆங்கில நன் மக்களும் மூச்சை யடக்கும் முறைகளாற் பல நோய்களை நீக்குகின்றனர். இஃதிங்ஙனமாகவும், சமஸ்கிருத மொழியைப் பேசுவதால் நம் உடம்பினுறுப்புக்கள் வலுவடைகின்றன வென்பார் போலியுரை எங்ஙனம் பொருந்தும்? கூறுமின்கள்! இது கொண்டு வல்லோசை நிறைந்த ஆரியம் போன்ற மொழிகள் மக்கட்குப் பயன்படா தொழியு மென்பது திண்ணம்.

இனி, மற்றொரு சாரார் தமிழ்மொழி உலகில் நிலை நின்று வழங்குவதற்குப் பல மொழிச் சொற்களையும் தன்னொடு சேர்த்து வழங்கல் வேண்டு மென்று கூறுவதோடு, தமிழ் வடமொழிக் கலப்பின்றி எழுதலும்

வழங்கலும் இயலா வென்றுங் கூறுகின்றனர். இதனைத் 'தனித் தமிழ்ப் பாதுகாப்பு' என்னுங் கட்டுரையில் மறுத்து விளக்கினும்; அதனை அங்கே கண்டு கொள்க.

இனி, இலக்கண வரம்பு இன்னதென்பதைப் பற்றி ஆராய்வாம். சொற்களையுஞ் சொற்றொடர்களையும் நூல்களிற் பிழையின்றி எழுதுதற்கும் வழக்கிற் பேசுதற்கும் இலக்கண நூல் முதன்மையாக வேண்டப்படும். பழைய இலக்கிய நூல்களை ஆராய்ந்து சொற்களையும் சொற்றொடர்களையும் வரையறுத்து அவைகளை வழங்கும் முறைகளை ஒரு வரம்பிற் குட்படுத்தி அறிவுடையோர்கள் அரிய பெரிய இலக்கண நூல்களை எழுதி வைத்திருக்கின்றார்கள். இங்ஙனமாக அறிவுடையோர் வழங்கிய சொற்களையும் சொற்றொடர்களையும் நன்கு ஆராயாமலும், அவைகளை வழங்கும் முறைகளை அவர்கள் கருத்தொட்டிச் செவ்வையாகக் கூறாமலும், பிற்காலத்து வருவோர் தமக்குத் தோன்றியவாறெல்லாம் சொற்களையும் சொற்றொடர்களையும் வழங்குவாராயின், அம்மொழி வேறு வேறு மொழிபோல் மாறிக்கொண்டே போகும். எவ்வாறெனின், ஆரிய மொழியிற் பழைய முனிவரால் இலக்கண நூலிற் கூறப்பட்டுள்ள சொற்களையும் சொற்றொடர்களையும், அவர்க்குப் பிற்காலத்து வந்தோர் வேறு திரித்துப் பல வேறு வகைப்பட வழங்கினமையின், அவற்றிற் கேற்பப் பிற்காலத்து இலக்கண நூல்கள் எழுதப் பட்டன. பாணினீயம் எழுதப்பட்ட காலத்தில் ஆரிய மொழி ஒரு தன்மைத்தாயும், காளிதாசர் காலத்தில் வேறு தன்மைத்தாயும் இருந்தது. இங்ஙனம் பாணினீயம் எழுதப்பட்ட காலத்தில் வழங்கிய ஆரிய மொழியையும், பாணினீயத்திற்குப் பிற்பட எழுதிய வேறு பல இலக்கண நூல்களின் காலத்தில் வழங்கிய சமஸ்கிருத மொழியையும் உற்று நோக்கின், அவை ஒன்றற்கொன்று தொடர்பின்றி வெவ்வேறு மொழி போற் றோன்றுகின்றன.

இங்ஙனமே ஆங்கில மொழியும் காலங்கடோறும் வேறுபட்டு வழங்கினமையின் முன்னுக்குப் பின் முரணுக எழுதப்பட்ட பல்வேறு இலக்கண நூல் களுடையவா யிருக்கின்றது. அவ் ஆங்கிலமொழி 'சாசர்' காலத்தில் ஒருவகையாயும், 'கேட்மான்' காலத்தில் வேறு வகையாயும் இப்போது மற்றொரு வகையாயும் எழுதப்பட்டிருக்கின்றது. இவ்வாறு ஆங்கில மொழியானது "சாசர்" காலத்திலும், 'கேட்மான்' காலத்திலும் மாறுபாடடைந்தமையின், நாம் 'சாசர்' காலத்தும் 'கேட்மான்' காலத்தும் வழங்கிய ஆங்கில மொழியை இப்போது பேசவும் எழுதவும் இயலாதவர்களா யிருக்கின்றோம். இங்ஙனமே, பாணினீய காலத்து வழங்கிய ஆரிய மொழியை இப்போது எழுதவும் பயிலவும் இயலாதவர்களா யிருக்கின்றார்கள். தமிழ் மொழியின் சொற்களும் சொற்றொடர்களும் இப்படித்தான் வழங்கவும் எழுதவும் படல்வேண்டு மென்னும் முறைகளையும் நுட்பங்களையும் நுண்ணிதி னாராய்ந்து அவைகளை ஒரு வரம்பிற் குட்படுத்தி நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயே பல சிறந்த இலக்கண நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. தொல்காப்பியத்திற்கும் முன்னே எழுதப்பட்ட இலக்கண நூலாசிரியர்களின் கருத்தோடிணங்கி, அவர்தம் சொற்களையும் சொற்றொடர்களையும் வேறுபடுத்தாது, அவர்க்குப் பின் வந்த 'தொல்காப்பிய' ஆசிரியர் தம் காலத்து வழக்கும் உடன் சேர்த்துத் 'தொல்காப்பியம்' என்னும் நுண் பொருள் விரிந்ததோர் இலக்கண நூலை யியற்றினர். தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய 'பவணந்தி' முனிவரும் தொல்காப்பியர் கருத்தோடிசைந்து தமது காலத்து வழக்கையும் உடன் புணர்த்தி விளக்கி, 'நன்னூல்' என்னும் ஓர் அரிய இலக்கண நூலை யியற்றினர். இவ்வகையானே, நம் பண்டைத் தமிழர் அவ்வக் காலத்து இயல்பிற்கு இசைகின்ற விடத்தும், தம் முன்னுசிரியர் கருத்தோடு மாறுபடாமற், சொற்களையும் சொற்றொடர்களையும் ஒழுங்குபடுத்தி இலக்

கண நூல்கள் எழுதி வைத்தமையா லன்றோ நங் தனித் தமிழ் பண்டைநாள்தொட்டு இன்றைநாள் வரையும் சிறிதும் வேறுபடாமற் பேசவும் எழுதவும் எளியதா யிருக்கின்றது !

இலக்கண நூல்களைப் பண்படுத்திச் செவ்வையாக எழுதி மொழிகளை ஒரு வரம்பிற் குட்பட நிலை நிறுத்துவதற்கு மக்களின் நாகரிகமும் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. எவ்வாறெனின், ஆரியர் தமக்கென ஊர் ஒன்றின்றி ஊணும் உடையு மின்றி ஊர் ஊராய்த் திரிந்து துன்புற்றமையின், அவர்கள் இடரின்றி ஓர் ஊரில் அமர்ந்து அமைதியோடு ஆராய்ந்து, தம் முன்னோர் வகுத்த சொற்களையும், சொற்றொடர் களையும் ஒப்பிட்டு நோக்கிப் பார்த்து இலக்கண நூல்கள் எழுதுவதற்கு நேரமும், செல்வமும், கல்வியும் போதாமையின், ஆரிய மொழியில் அவ்வக்காலத்து வேறுபட்ட அவ்வத் திரிபுகளுக்கு ஏற்ப இலக்கிய இலக்கணங்கள் எழுதுவாராயினர். அதனால் அவ் வாரியமொழி ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொரு மொழியாய் வேறு வேறு திரிந்து ஒன்றற் கொன் றியைபின்றிக் கடைசியில் இறந்துபட்டது.

தமிழரில் நாகரிக வாழ்க்கை மிக்க சிலர் பலர் நகரங்கள் ஆங்காங்கு அமைத்துச் சிறந்த கட்டிடங்களும் அரண்களும் எடுப்பித்துப், பெருஞ் செல்வர்களாய் வாழ்ந்திருந்தமையின், தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை ஆராய்ந்து கற்றும், முன்னோர் வழங்கிய மொழி வழக்கிற்கு ஒத்தும் பல அரிய இலக்கிய இலக்கண நூல்களைத் தாமும் எழுதித் தமிழ் எக்காலமுந் தன்னீர்மை கெடாது வழங்குமாறு செய்தனர். ஆனால், தமிழரில் நாகரிகமில்லா மற்றை வகுப்பாரோ வடக்கே மலைநாடு, கன்னட நாடு, தெலுங்கு நாடு முதலியன புகுந்து ஆண்டாண்டுக் குடியேறி, நாகரிகத்திற் சிறவாமையின் தமிழ்ச் சொற்களைத் தமக்குத் தோன்றியவாறெல்லாம் திரித்து வழங்கியும், வேறு பல மொழிச் சொற்களைத் தாம் ஏராளமாய் எடுத்துச் சேர்த்தும் தங்

தமிழ்மொழி ஒன்றையே வேறு பல மொழிகள்போற் காணப்படுமாறு திரித்து மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளுவு, எர்க்கலா, தோடா என்னும் மொழிக ளாக்கிவிட்டனர். ஆங்கிலேயருக்குள்ளும் பண்டைநாளில் ஓவாது போர் நடந்து வர ஒவ்வொரு வகுப்பாரும் புதிது புதிதாக மாறிக்கொண்டே செல்லப், பிற்காலத்தில் மட்டுமே அவ்வகுப்பின ரெல்லாம் ஒருங்கு சேர்ந்து ஒரு நிலைப்பட்ட வாழ்க்கையுடையரானமையின், இன்னின்ன சொற்களையும் சொற்றொடர்களையும் இவ்விவ் வகையாக வழங்கல் வேண்டுமென்று வரையறுத்து ஆங்கில மொழிக்கு ஒரு வரம்பு கட்டி இலக்கிய இலக்கண நூல்கள் இப்போது தான் சில நூற்றாண்டுகளாக எழுதிவந்திருக்கின்றார் கள். நந் தமிழ் மொழியோ பண்டைநாட் டொடங்கி இன்றைநாள் வரையும் ஒரே தன்மைத்தாய் இலக்கண வரம்பிற் குட்பட்டு விளங்குதல் குறித்தே,

"கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா யெண்ணவும் படுமோ"

என்று சான்றோரால் கூறப்பட்டுளது.

---

## 5. தனித் தமிழ்ப் பாதுகாப்பு

அறிவானும், நாகரிகத்தானும் சிறந்து விளங்கும் ஒரு கூட்டத்தார் ஒரு நாட்டி லிருப்பின், மற்ற நாட்டி லுள்ளார் தாங் தொகுத்த பண்டங்களையும் பொருள் களையும் விலைப்படுத்தும் பொருட்டு அந்நாகரிக மக்க ளிடம் வந்து கலப்பர். இன்னும் பலவகை இடையூற் றானுந் தந்நாடு துறந்து பிறநாடு போந்து குடிபுகுந்து அவரோடு கலப்பாரும் உளர்; எனவே நாடு துறப் போர் இருவகைப்படுவர். இங்ஙனம் பண்டம் விற்

போரும், குடி புகுவோரு மென்னும் இரு கூட்டத் தாரும் நாகரிக வாழ்க்கையுடைய கூட்டத்தாருடன் வந்து கலப்பது இயற்கை. இங்ஙனம் நேரும் மக்களின் கலப்பால் அவர் பேசும் ஒருமொழிச் சொற்கள் பிற மொழியிற் கலவா நிற்கும். இவ்வாறு நேருங் கலப்பு இயற்கை ஏதுவாகும்; இனிச் செயற்கை ஏதுவும் உண்டு. பண்டங்கள் விற்றற்கும் குடிபுகுதற்கும் ஒரு நாட்டார் தந்நாடு நீங்கிப் பிறிதொரு நாட்டிற் புகுந்து அந்நாட்டினரை ஒன்றிப் பிழைக்குங் காலத்து அவர் தம் மொழிச்சொற்கள் மற்றவர்பாற் கலக்கும். இவ் வியற்கையைத் தடுத்தல் அரிதினும் அரிதாம்.

இனி, நாம் மன ஒருமைப்பா டுடையராய்ப் பகுத் துணர்வோடு ஆய்ந்து நூல்கள் எழுதும்போது பிற மொழிச் சொற்கள் நந்தமிழில் வந்து கலப்புறுவாறு எழுதுதல் கூடும். நாம் கருதியவற்றைத் தெளிவாக விளக்கவேண்டியதற்குப் போதுமான சொற்கள் நம் மொழியில் இருக்கின்றனவா என்று ஆராய்ந்து பார்த்து நம்மொழியிற் போதுமான சொற்கள் இல்லா விடின், அவைகளைப் புதிதாகச் செய்துகொள்ளாமற், சோம்பலுற்றுப் பிறமொழிச் சொற்களை எளிதாக எடுத்து நம் மொழியிற் சேர்த்தெழுதுவதே செயற்கை யேதுவாகும்.

ஒருமொழி, பிறமொழிச் சொற்களை எடுத்துச் சேர்த்து வழங்கல் வேண்டுமாயின், அம்மொழி உயர்ந்த நாகரிக வாழ்க்கைக்குப் போதுமான சொற்கள் அமையப்பெறுததோர் ஏழை மொழியாக இருத்தல் வேண்டும். ஆங்கில மொழியானது மிகவும் ஏழை மொழியா யிருத்தலின், அதன்கண் இலத்தீன், கிரீக் முதலிய பிறமொழிச் சொற்களைச் சேர்த்து வழங்கு கின்றனர். ஆங்கிலமொழியிலிருக்கும் கிரீக், இலத்தீன் முதலிய பிறமொழிச் சொற்களை வேறுபிரித் தெடுத்து விட்டால், அதனைத் தனியே வழங்குதலும், அதன்கண் நூல்கள் எழுதுதலும் இயலா. இங்ஙனம் ஆங்கிலம் போன்ற ஏழைமொழிகட்கே பிறமொழிச் சொற்களின்

உதவி இன்றியமையாது வேண்டப்படும். தமிழோ பழைய காலந்தொட்டுப் பிறமொழிச் சொற்களின் உதவியை ஒரு சிறிதும் வேண்டாது தனித்து நின்று மிகவும் அழகாய் நடைபெறுவது. இக்காலத்தும் தமிழ் தனித்து வழங்கவும் எழுதவும் எளிதாயிருக்கின்றது. இந் நாவலந் தீவில் வழங்கும் தமிழ் ஆரியம் முதலான மொழிகளையும், ஐரோப்பா ஆசியாவில் வழங்கும் மொழிகளையும் நுணுக்கமாகவும் விரிவாகவும் நன் காராய்ந்த ஆசிரியர் **கால்ட்வெல் துரைமகனார்,**[1] தாம் ஆங்கிலத்தில் எழுதிய, '**திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம்**'[2] என்னும் நூலில் தனித்தமிழின் சிறப் பைப்பற்றி எழுதியவற்றுள் ஒரு சிறு பகுதியை இங்கே மொழிபெயர்த் தெழுதுகின்றோம்: "வட சொற்களை நீக்கிக்கொள்வது இப்போது தெலுங்கு மொழியால் இயலாதென்பது உண்மைதான்; கன்னடத்திற்கோ இன்னும் மிகுதியாய் இயலாது; மலையாளத்திற்கோ முற்றிலும் இயலாது. இம்மொழிகள் வடமொழியி னின்று ஏராளமான சொற்களைக் கடன்வாங்கி யிருத்த லானும், ஏதோர் உதவிக்கும் வடமொழியினையே எதிர்நோக்கி யிருப்பது அவற்றிற்கு மிகவும் வழக்க மாய் வந்துவிட்டமையாலும், அவைகள் தாம் தனித்து நிற்க முயல்வது சிறிதும் கைகூடாத தொன்றும். ஆனால், திராவிட வழக்குகளுள் மிகவும் பண்படுத்தப் பட்டதாகிய தமிழ் மொழியோ வடசொற்களை அறக் களைந்து விடுவதற்கு வல்லதாவதோடு, வேண்டினால் தான் தனித்து நின்று அதன் உதவியை நாடாமலே ஓங்கி வளரவுங்கூடும்; ஏறக்குறையப் பழைய இலக்கண இலக்கிய நூல்கள் எழுதப்பட்டுள்ள செந்தமிழ் மொழி யில் வட சொற்கள் மிகவும் அருகிக் காணப்படும். வடமொழியிலிருந்து வரும் சொற்களையும், எழுத்துக் களையும் கருத்தோடுங் கவலையோடும் முழுதும்

---

[1] Dr. Caldwell.

[2] The Comparative Grammar of the Dravidian Languages.

விலக்கித் தமிழொலிகளையும், தமிழ்ச் சொற்களையும், தமிழ் முதனிலைகளையும் மட்டுமே வைத்து எழுதப் படுதலினால், நூல்களிலுள்ள செந்தமிழ் வழக்கு மக்கள் பேசும் உரை வழக்குக்கு வேறுபட்டதா யிருக்கின்றது. இவ்வளவு கருத்தாக வடமொழிச் சொற்களை விலக்கும் எண்ணம் தமிழ்கற்ற அறிஞர் உள்ளத்திற் குடிகொண் டிருத்தலினால், தெலுங்கு முதலிய ஏனைத் திராவிட மொழி நூல்கள் வடசொற்களை நிரம்பச் சேர்த்துக் கொள்ளுதற் கேற்பத் தாம் உயர்வாகக் கருதப்படுதல் போலாகாமல், தமிழ் நூல்களானவை எவ்வளவுக்கு வடசொற்களைக் களைந்து தனித்து நடைபெறு கின்றனவோ, அவ்வளவுக்கு அவை உயர்ந்தனவாகவும் இனிமை வாய்ந்தனவாகவும் திருத்த முடையனவாக வும் கருதப்படுகின்றன. மேலும் நாட்டுப் புறங்களி லுள்ளோர் பேசும் தமிழ் மொழியானது வடசொற் கலப்பின்றித் தூயசெந்தமிழ் வழக்கோடு ஒத்ததாகவும் இருக்கின்றது. எந்த நாட்டிலும் அந்நாட்டாருடைய செய்யுட்களும், அந்நாட்டின் குடியானவரின் பேச்சுக் களுமே அந்நாட்டவர் வழங்கும் மொழியின் பழந் தன்மையினைத் தெரிந்துணர்தற்குக் கருவியாகும்.'' இங்ஙனமாகத் தமிழின் உண்மைச் சிறப்பை உள்ளவா றுணர்ந்து நடுநிலை வழாது அதனை அறிவுறுத்திக் காட்டிய கால்ட்வெல் ஆசிரியர் மெய்யறிவுதானு மில்லாமல், நந்தமிழரில் ஒரு சாரார், தமிழ் வடமொழி யினின்றும் உண்டாயதாமெனவும், அஃது ஆரியத்தின் உதவியின்றி நடவாதெனவும் நடுநிலை வழுவிப் பொய்யுரை கூறித் தெய்வத் தமிழைப் புறம்பழித்தல் பெரிதும் நாணத் தகுவதாம். தமிழில், மற்ற மொழி யின் உதவியின்றிப், பேசவும் எழுதவும் போதுமான சொற்கள் நிரம்ப உண்டென்பதை மூவாயிரம் ஆண்டு களுக்கு முன்னர் எழுதப்பட்ட 'தொல்காப்பியம்' முதலிய அரும்பெரு நூல்களிலும், 'திவாகரம்' 'பிங்கலந்தை' முதலியவற்றிலும் எவருங் காணலாம். இவ்வுண்மைகளை உற்று நோக்கா ஒரு சிலரே ''ஒன்றே

யாயினுந் தனித்தமி ழுண்டோ" என்று கூறி நந் தனித்தமிழுக்குக் குறைவு தேட முந்துவர்.

இக்காலத்திற் கிணங்க நந் தமிழ்மொழி வளர்ச்சி யடைய வேண்டுமாயின், ஏராளமான வடசொற்களைத் தமிழிற் சேர்த்து எழுதுதலும், வழங்குதலும் வேண்டு மென்றும், ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்க் கும்போது வடசொற்கள் இன்றியமையாது சேர்க்கப் படல் வேண்டுமென்றும் தமிழ் கற்ற புலவரிற் சிலருங் கூறுகின்றார். அதனை ஆராய்வாம். நம் தமிழில் ஒரு பொருளை யுணர்த்துதற்குப் பல சொற்களும், பல பொருள்களை யுணர்த்த ஒரு சொல்லும் உண்டென் பதைப் 'பிங்கலந்தை' முதலான அரும்பெரு நூல்களி னின்றும் எடுத்துக் காட்டுவாம். இயல்பினை யுணர்த்த 21 சொற்களும், உயர்வினை யுணர்த்த 17 சொற்களும், வலியினை யுணர்த்த 34 சொற்களும், அச்சத்தினை யுணர்த்த 19 சொற்களும், மலையினை யுணர்த்த 28 சொற்களும், இன்னும் இங்ஙனமே பிற பொருள்களை யுணர்த்தப் பலவாகிய சொற்களும் இருக்க, மொழி பெயர்க்கப் போதுமான சொற்கள் தமிழில் இல்லை யென்றும், ஒருபொருளை விளக்கு தற்குச் சொற்கள் மிகுதியாக இல்லை யென்றும் கூறு வது முற்றும் பொருந்தாதன்றோ?

மொழிக்குப் பாஷை யென்றும், மகிழ்ச்சிக்குக் சந்தோஷ மென்றும், அன்புக்குப் பக்தி யென்றும் சொல்வது குற்றமா? என்று கேட்பாரும் உளர். மேற் குறிப்பிட்டபடி, ஒரு பொருளைக் குறித்த பல சொற் களும், பல பொருள் குறித்த ஒரு சொல்லும் நந் தமிழில் அளவின்றி யிருக்க, அவைகளைப் புறம்பே விடுத்து, வல்லோசையுடைய சமஸ்கிருதச் சொற்களை நந் தமிழோடு சேர்த்து வழங்குவது, ஒருவன் தனக்கு அரிதிற் கிடைத்த இன்சுவைப் பண்டங்களை வீசி யெறிந்துவிட்டு, இல்லந்தோறுஞ் சென்று ஊசிய உணவை இரந்துண்பதற்கே ஒப்பாம். மேலும், தமிழ்ச் சொற்க ளிருக்க, அவற்றை விடுத்துப் பிறமொழிச்

சொற்களை எடுத்து வழங்கி வருவோமாயின், தமிழ்ச் சொற்கள் நாளடைவில் வழங்குதலின்றி ஒழியுமன்றோ? இங்ஙனம் பிறமொழிச் சொற்களை வழங்கினமையால் எத்தனையோ அருந்தமிழ்ச் சொற்கள் முன்னமே வழங்காது போயின. நூல்களில் அவை யில்லையானால் அவைகளை நாம் காணுதலே இயலாது போயிருக்கும்.

ருஷியர் தம்மூர்களுக்கு ஜர்மன் மொழிப் பெயர்களை அமைத்திருந்தனர். பிறகு, தமக்கும் ஜர்மனியருக்கும் போர் துவங்கியபோது தாம் பயன்படுத்திய ஜர்மன் மொழிச் சொற்களை அறவே நீக்கித் தம் மொழியினின்றே தமக்கெனப் புதிதாகச் சொற்கள் அமைத்துக்கொண்டனர். இங்ஙனம் ருஷிய நாட்டினர், தமக்குப் போதுமான சொற்கள் இல்லாதிருந்தும் பின் பெரிதும் வருந்தித் தமக்கெனச் சொற்கள் தம்மொழியிலேயே கண்டறிந்திருக்க, நந் தமிழரிற் சிலர், அரிய முழு மாணிக்கங்களாந் தீஞ்சுவைத் தமிழ்ச் சொற்களை விடுத்து, ஓசையினிமை யில்லாச் சம்ஸ்கிருத மொழிச் சொற்களை நந் தனித்தமிழிற் சேர்த்து நந்தமிழின் இனிமையையும் பழமையையும் தாழ்த்த முயல்வதை என்னென்று உரைப்பேம்! இனி, மேற்கூறியவர் கருத்துக் கிணங்க நாம், நமக்குரியவல்லா வடசொற்களை நந் தனித்தமிழோடு சேர்த்து வழங்குவது போலவே, அவ்வக்காலத்துத் தமிழரோடு வந்து பழகும் சீனர், ஜப்பானியர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலர், அராபியர் முதலானவர் மொழிச் சொற்களையும் அதனோடு சேர்த்து வழங்கல் வேண்டுமன்றோ? இங்ஙனம் அவ்வக் காலத்துத் தோன்றும் வடமொழி முதலான நமக்குரிய வல்லாத பிறமொழிச் சொற்களை நந் தனித் தமிழிற் கலந்து வழங்குவோமாயின், தமிழ் முழுதும் தன் இனிய சொற்களை யிழந்து தன் உண்மைநிலை மாறிக் கன்னடம் தெலுங்கு முதலிய மொழிகளினுஞ் சீர்கெட்ட நிலையை எய்துமென்பது திண்ணமன்றோ?

நந் தனித்தமிழைத் தனித்து வழங்கவும் எழுதவும் இயலுமென்பதை நம் முன்னோரான **மாணிக்கவாசகர்**

முதலான ஆசிரியரும், **தாயுமானவர்** முதலிய பெரி யோரும் நன்கு உணர்ந்திருந்தும், தாமியற்றிய பாடல் களில் வடமொழிச் சொற்களைத் தமிழோடு சேர்த்துப் பாடியது என்னையோ வெனின், வடநாடுகளில் இருந்த ஆரியர் அந்நாடு விட்டுப் பெயர்ந்து தமிழ் நாட்டிற் குடிபுகுந்தபின் தமிழரும் ஆரியரும் ஒருமித்து வாழும் நாளில் ஆரியர் வழங்கிய வடமொழிச் சொற்கள் தமிழிலும், தமிழர் வழங்கிய சொற்கள் வடமொழியி லுங் கலந்து நிலைபெறுவ வாயின. ஆரியர் தமிழரோடு மிக நெருங்கிப் பழகாத காலத்து எழுதிய '**தொல்காப் பியம்**,' '**கலித்தொகை**,' '**புறநானூறு**' முதலிய அரிய நூல்களில் வடசொற்கள் ஆயிரத்துக்கு ஒன்றிரண்டு விழுக்காடு ஒரோ ஓரிடத்து அருகிக் கலந்தன. பின், ஆரியர் நெருங்கிப் பழகப் பழகத் தமிழில் வடசொற் கள் சிறிது கூடக் கலந்தன. இக்காலத்துத் தமிழர் ஆங்கிலரோடு கலந்து பழகுவதால் ஆங்கிலச் சொற் களிற் பலவுந் தமிழிற் கலந்து காணப்படுகின்றன. முன்னொருகால் துருக்கர் அரசாண்ட காலத்துத் துலுக்குச் சொற்களிற் சிலவுந் தமிழிற் கலப்பவாயின. தமிழில் வடமொழிச் சொற்கள் மிகுதியாகக் காணப் படுவதுபோல் துலுக்குச் சொற்களும், ஆங்கிலச் சொற்களும் காணப்படாமை யென்னையோ வெனிற் கூறுதும். ஆரியர் நடு ஆசியா[1] என்னுங் குளிர் நாட்டில் வறுமையில் துன்புற்றுப் பின் அதனை விட்டுத் தமிழ்நாடு புகுந்து, அவரைநெருங்கி அணுகி வாழ்ந்தன ராகலின், அவர் சொற்கள் தமிழில் மிகவும் கலந்தன. துருக்கரும், ஆங்கிலரும் அவர்போல் அத்துணை நெருங்கித் தமிழரோடு உறவாடாது விலகி வாழ்கின்ற மையின், அவர் மொழிச் சொற்கள் மிகக் கலவாது ஒரோவிடத்து மிக அருகிக் கலப்பவாயின. தமிழரோடு ஆரியர் கலந்து பழகத் துவங்கிய காலத்து, இருவகுப் பாருஞ் சிறிதும் அழுக்காறின்றி மன ஒருமைப்பாடு உடையராய்த், தமிழர் அவ்வாரியர் சொற்களையும்,

---

[1] Central Asia.

ஆரியர் தமிழர் சொற்களையும் களங்கமின்றி எடுத்தாள்வாராயினர்.

ஆனால், இக் காலத்தில் தம்மை ஆரியராகக் கருதியிருப்பவர் தமிழர்பால் அழுக்காறுடையராய்த் தமிழையும் தமிழரையும் மிகவும் இழித்துப் பேசுவதோடு, தமிழ் ஆரியத்தினின்றும் பிறந்ததா மெனவும் வாய் கூசாது கூறித் தமிழுக்குக் குறைவு தேடுகின்றனர். இங்ஙனம் நந்தமிழரோடு ஒற்றுமையின்றி முரண்பட்டு நம்மை இழிவாகப் பேசும் பிறர் சொற்களை நாம் எடுத்தாள்வது நந் தமிழர்க்கும் தமிழுக்கும் இனி ஒரு பெருங் குறைவாம். இங்ஙனம் நம்மையும் நந் தனித் தமிழையும் ஓயாது இழித்துக் கூறுநிற்கும் பிறரையும் அவர் மொழியினையும் உயர்த்திப் பேசிக்கொண்டு அலையும் தமிழர் சிலரைத் தமிழர் எனக் கூறுதல் பொருந்துமோ?

இனி, 'இந்து சாதனத்தில்' யாழ்ப்பாணத்துத் தமிழர் ஒருவர், தாம் தமிழ் வளர்ச்சியைப்பற்றி எழுதுகையில், ஆங்கில மொழிச் சொற்களைத் தமிழோடு கலந்து எழுதுதல் ஆகாதென்று வற்புறுத்திக் கூறினர். அது நமக்கு மகிழ்ச்சி தருவதேயாயினும், அவர் தாமெழுதுந் தமிழ்க் கட்டுரையில் வட சொற்களைக் கலந்தெழுதுவது நமக்குப் பெருவருத்தந் தருகின்றது. ஆங்கில மொழிச் சொற்களை எடுத்துக் கலந்து, தமிழின் தூய்மையைக் கெடுப்பது தகாதென்று வழக்காடும் இவர் ஆங்கிலத்தைப் போலவே தமிழுக்குப் புறம்பான வடமொழிச் சொற்களை எடுத்து வழங்கித் தமிழின் தூய்மையைக் கெடுப்பது நன்றுமா? அவர் தாம் 'தமிழ் வளர்ச்சி' யென்றெழுதிய கட்டுரையின் முதல் முப்பது சிறு வரிகளுக்குள், பாஷை, மனிதர், இருடிகள், அநேகர், சங்கம், சுத்தி, சரஸ்வதி, அவதாரம், இராஜாக்கள், வித்துவான், நியமம், பிரமாணம், அங்கீகரித்தல் என்னும் வடசொற்களைச் சேர்த்து எழுதியிருக்கின்றார். இன்னுமிங்ஙனமே அவர் தமது கட்டுரையில் நெடுக எடுத்துச்

சேர்த்திருக்கும் வடமொழிச் சொற்கள் இன்னும் பலப்பல. இவ் வடசொற்களுக்கு நேரான செந்தமிழ்ச் சொற்களாகிய மொழி, மக்கள், முனிவர்கள், பலர், கழகம், துப்புரவு, கலைமகள், பிறப்பு, அரசர்கள், புலவன், முறை, மேற்கோள், ஏற்றுக்கொள்ளல் என்பன முறையே இருக்கவும் இவற்றை விடுத்து வடசொற்களை வீணே எடுத்துச் சேர்த்து எழுதுதல் ஆங்கில முணர்ந்தார்க்கு இவர் தாங் கூறும் குற்றத்தில் இவர் தம்மையும் வீழ்விக்கு மன்றோ ?

"அங்ஙன மன்று, வடசொற்களைத் தமிழிற் கலந்து எழுதுவது இக்காலத்தில் வழக்கமா யிருக்கின்றது ; ஆனல், ஆங்கிலச் சொற்களை அங்ஙனம் வழங்குவது வழக்கத்தி லில்லை ; அதனல், அது குற்றமாம்" என் றுரைப்பாராயின், கூறுவாம். தமிழுக்குப் புறம்பான வடசொற்களைத் தமிழிற் கலந்தெழுதுவது பண்டைக் காலத்தில் இல்லாமற் பின்றைக் காலத்தில் உண்டா யிற் றென்பது 'பத்துப் பாட்டு' முதலான பண்டைச் செந்தமிழ் நூல்களையும், 'இராமாயணம்' 'பாரதம்' முதலான பின்றைத் தமிழ் நூல்களையும் ஒப்பிட்டு நோக்குவார்க்கு நன்கு விளங்கும். ஆகவே, பழைய காலத்திலில்லாமல் இடைப்பட்ட காலத்திற் றுவங்கிய வடமொழிக் கலப்பு அக்காலத்துப் புதிதாயிருந்து பின் வரவர வழக்கத்தில் வந்துவிட்டாற் போல, இக் காலத்திற் றுவங்கும் ஆங்கிலச் சொற் கலப்பும், இப்போது புதிதாய்த் தோன்றினலும், தடை செய்யப் படாவிட்டால், இனி, வரவர வழக்கமாய் வந்து விடுமன்றோ ? ஆகவே, புதியதா யிருந்தாலும், பழை யதாயிருந்தாலும் பிறமொழிக் கலப்புத் தமிழ் மொழியை அழித்தலின், அதனைத் தடைசெய்து தமிழைத் தூய்மையாகப் பாதுகாத்து வளர்த்தல் தமிழறிவுடைய ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். ஆங்கிலமொழிக் கலப்பை ஏளனஞ் செய்து அதனை விலக்க முன்வந்த அறிஞர் அங்ஙனமே வடமொழிக் கலப்பையும் ஏளனஞ் செய்து அதனையும்

விலக்கித் தமிழைப் பாதுகாக்க முயலுதலே சிறந்த முறையாம்.

இனி, அவர் ஆரியமொழி தேவர்களுக்குரிய தென்றும், தமிழ் மொழி மக்களுக்குரியதென்றும், அவ்விரு மொழியும் முனிவர்களுக் குரிய தென்றும் எழுதியிருக்கின்றார். இவர் கூறு மிக்கூற்றும் சிறிது ஆராயற்பாலதாம். இவர் கூற்றை உற்று நோக்கின், மக்களிலும் உயர்ந்தோர் முனிவரும், முனிவரினும் உயர்ந்தோர் தேவரும் ஆவரென்பது புலப்படும். அதனால், தாழ்ந்த நிலையிலுள்ள மக்கள் பேசுந் தமிழ் மொழி தாழ்ந்ததென்பதும், மிகவுயர்ந்த நிலையிலுள்ள தேவர்கள் பேசும் ஆரியமொழி மிகவுயர்ந்த தென்பதும் அவர் கருத்தாகும். அவர் கருத்தின்படியே வைத்துக் கொள்வோ மென்றாலும், தேவர்களுக்குரிய வட மொழிச் சொற்களைத் தாழ்ந்த நிலைக்கணுள்ள மக்கள் எடுத்து வழங்குதல் பொருத்தமா?

தேவர்களுக்குரிய அவ்வாரியச் சொற்களை மக்களுள் ஒருவராகிய தாம் தமது கட்டுரையில் எடுத்து வழங்குவது குற்றமன்றோ?

இனித் தேவர்களுக்குத் தாம் ஆரிய மொழி வேண்டுமோ என்பதனை ஒரு சிறிது ஆராய்வாம். மக்களென்போர் அறியாமை யிருளாற் கவரப்பட்ட உள்ளமுடைய ராதலால் அவர் தம்முள் ஒருவர் மற்றொருவர் உள்ளத்தில் நிகழ்வனவற்றை அறிய மாட்டாதவரா யிருக்கின்றார். ஆகவே, அவர் தம் உள்ளத்திற் றோன்றும் எண்ணங்களைப் பிறர்க்குப் புலப்படுத்தவும், பிறருள்ளத்திற் றோன்றும் எண்ணங்களைத் தாந் தெரிந்துகொள்ளவும், சொற்களின் உதவியைப் பெரிதும் வேண்டி நிற்கின்றார். இனி, மிக வுயர்ந்த நிலைக்கணுள்ள தேவர்களோ என்றால், அறியாமை யிருள் நீங்கி அறிவு விளக்கம் பெற்றுத் தத்தம் உள்ளங்களில் நிகழ்வனவற்றைத் தாமாகவே அறிந்துகொள்ளும் ஆற்றலுடையர். அவர்களுள் ஒருவர் உள்ளத்திற் றோன்றிய எண்ணம் பிறர்

உள்ளத்தில் உடனே புலனாக நிற்கும். அங்ஙனம் இயல்பாக விளங்கும் உள்ளமுடைய தேவர்களுக்குச் சொற்களி னுதவி சிறிதும் வேண்டப்படுவதில்லை. அவ்வாறிருக்கத் தேவர்களும் மக்களைப் போலச் சொற்களி னுதவி கொண்டே தம்முள்ளத்தில் நிகழ் வனவற்றை வெளியே புலப்படுத்துவராயின், மக்களுக் குந் தேவர்களுக்கும் வேறுபா டென்னை? அதனால், தேவர்கள் ஆரிய மொழியை மட்டுமே பேசுவரென்பது ஒரு சிறிதும் பொருந்தாது. சிற்றறிவும் சிறுதொழிலு முடையராகிய மக்கள் பொருட்டாகவே மொழிகள் தோன்றினவல்லது, பேரறிவும் பேராற்றலும் உடைய தேவர்கள் பொருட்டல்ல. மக்களுள்ளும் அருந்தவ ஒழுக்கத்தான் மிகுந்து அறியாமை நீங்கப் பெற்றார்க்கு எல்லாவிடத்தும் எக்காலத்தும் நிகழும் நிகழ்ச்சி களெல்லாம் ஒருங்கே தோன்று மென்பதும், அது ‘தவக் காட்சி’யாமென்பதும் ‘சிவஞான சித்தியாரில்’ “சமாதியான் மலங்கள்வாட்டிப், பொருந்திய தேசகால இயல்பகல் பொருள்களெல்லாம், இருந்துணர்கின்ற ஞானம் யோகநற் காண்டலாமே” என்னுந் திருப் பாட்டால் வற்புறுத்தப்படுதல் காண்க. மக்களினும் உயர்ந்த முனிவர்க்கே மொழிகளினுதவி வேண்டப் படாதாயின், அம்முனிவரினும் உயர்ந்த தேவர்க்கு மொழியினுதவி வேண்டப்படுமென்பது எத்துணைப் பொருந்தாததா யிருக்கின்றது! தமிழரையும் அவர் வழங்கும் தமிழ் மொழிகளையும் தாழ்த்தும் பொருட் டாகவே, ஆரியர், தம்மைத் தேவரெனவுந், தாம் பேசும் ஆரிய மொழியைத் தேவமொழி யெனவும் உயர்த்திப் பேசிப் புராணங்களிற் பொய்க்கதை கட்டி விட்டார்கள். அக்கதையின் பொய்த்தன்மை யுணராது நந் தமிழ்ப் புலவரிற் சிலரும் அதனை மெய்யெனக் கொண்டு தம்மையும் தம் அருந்தமிழ் மொழியையும் தாமே இழிவுபடுத்தி ஐயகோ! ஏமாந்து போயினரே! இனியேனும் அவர்கள் அப்பொய்மை யுணர்ந்து தமக்கும் தமது செந்தமிழ் மொழிக்கும் ஆக்கந் தேடுவாராக!

# 6. தமிழைப்பற்றிய வினக்களுக்கு விடை

**1. வினு:** உலகிலுள்ள மக்களெல்லாரும் மாறுதல் அடைந்துகொண்டே செல்வதால் அவர்தம் மொழியுள் ஒன்ருகிய தமிழ்மொழியும் பிறமொழிக் கலப்பால் மாறுதல் அடைதல் இயற்கை என்னலாமோ?

**விடை:** மக்கள் எல்லாரும் பிள்ளையாய்ப் பிறந்த காலந்தொட்டு முதுமைவந்து இறக்குமளவும் தம்மிற்ருமே மாறுதல் அடைந்து வருகின்றனரேயல்லாமல், அவர்களுள் ஆண் பெண்ணுகவாவது, பெண் ஆணுகவாவது மாறுதல் அடையக்காணேம். உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் தத்தம் நிலைமைக்கு ஒத்தவைகளை உட்கொண்டு தமது நிலை கெடாமலே வளர்ந்து திரிபெய்தி வருகின்றன. மக்கள் தம் உடம்புக்கு இசைவான உணவுகளை உட்கொண்டும், பொருத்தமான இடங்களிற் குடியிருந்தும் வரவரத் தம் உடம்பும் உணர்வும் வளர்ந்து திரிபெய்தி வருகின்றனர். புல் மரம் செடி கொடி முதலான ஓரறிவுடைய உயிர்களுங் கூடத் தத்தமக் கேற்ற உணவுப் பொருள்களை உட்கொண்டு, தத்தமக் கிசைவான இடங்களி லிருந்து நாடோறும் மாறுதல் எய்திச் செழுமையாக வளருகின்றன. மக்கள்முதற் புல் மரஞ் செடி கொடி ஈருகவுள்ளவை யெல்லாம் எந்த வகையான மாறுதலை விரும்புகின்றன என்பதை உற்று நோக்குவோமாயின் தமது தன்மை கெடாமல் வரவரப் பெருக்கமுற்று மாறி வளர்தலையே அவையெல்லாம் அல்லும் பகலும் விரும்பி வருகின்றன என்பது நன்ருக விளங்கும். தமக்குப் பொருந்தாத பொருள்களோடு கலந்து தமது நிலைகுலைந்து மாறி இறப்பதை எவ்வகைப்பட்ட உயிரும் விரும்புவதில்லை. தமக்கு இடரான இடத்தையேனும் பொருளையேனுங் கண்டால் எவ்வுயிரும் அவற்றைவிட் டகன்று போய்ப் பிழைக்க முயலுகின்றன. மக்கள் முதலான எவ்வகைப்பட்ட உயிர்

களும் தம் உடம்பிற்குப் பொருந்தாத நச்சுப் பொருள்களையும் தகாத உணவுகளையும் உண்டு இறக்கத் துணியவே மாட்டா. ஆகவே, தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு ஏதுவாகிய மாறுதல் ஒன்றே எல்லாரும் விரும்பத்தக்க தல்லாமல், அது வளர்ச்சி குன்றி மாய்வதற்கு ஏதுவான மாறுதல் அறிவுடையார் எவரும் எந்தக் காலத்தும் விரும்பத்தக்க தன்று. நூற்றுக்கணக்கான வடசொற்களையும் இன்னும் மற்றும் பிறமொழிச் சொற்களையும் தமிழிற் புகுத்தி எழுதுவதால் தூய தனித்தமிழ்ச் சொற்களாகிய 'வழிபாடு' 'திருமுழுக்கு' 'தேவுணா' 'திருவிளக்கு' 'திருவிழா' 'மணம்' 'சோறு' 'கூறை' முதலியனவும், இன்னும் இவைபோற் பல சொற்களும் வழங்காதொழிகின்றன. அதுவுமன்றிப் பிறமொழிக் கலப்பால் முற்காலத்துத் தமிழும் இக்காலத்துத் தமிழும் தம்முள் இருகூறாக வேறுபட்டு, இக்காலத்துத் தமிழ்நடை தன் தூய்மை இழந்து விளங்காததாயும் இனிமையற்றதாயும் இருக்கின்றதென்பது எவரும் அறிவர். இங்ஙனம் பிறமொழிக் கலப்பால் தமிழ் தன் அரிய சொற்களையும் இனிமையையும் இழந்து வரவரக் குன்றி வருதலைக் காணும் அறிவுடையார் அது மேன்மேலும் பிறமொழிக் கலப்பால் ஓங்குகின்றதென்று கூற முன்வருவாரோ? தமிழ் மொழியை நன்கு ஆராய்ந்து நடுநிலை திறம்பாது டாக்டர் கால்ட்வெல் என்ற துரைமகனார் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்புமை இலக்கணம்' என்ற நூலைப் பயில்வோர் தமிழ் மொழியினைப் பற்றிய உண்மைகளை ஐயந் திரிபற அறிவார்கள்.



2. "ஒரு செல்வவானுக்குப் பொருள் மேன்மேலுஞ் சேர்வதால் அவன் பெருஞ்செல்வனாதல் போலத், தமிழ் நிறைந்த சொற்களைத்தான் உடையதாயினும், பிறமொழிச் சொற்களையும் தன்னிடத்துச் சேர்த்துக் கொள்வதால் தான் மேன்மேலும் வளர்ச்சியுறுமெனக் கூறலாகாதோ?"

ஒரு செல்வவான் பெரிதும் முயன்று தன் பொருளையே தான் பெருக்குவனாயின், மேன்மேலும் செல்வனாதல் கூடும். அவன் பிறரிடத்துக் கடன் வாங்கித் தன் பொருளைப் பெருக்க நினைப்பானாகில், அவன் செல்வம் எங்ஙனம் பெருகும்? கடன் தந்தோர் பொருளை இவன் பொருளெனக் கூறல் பொருந்துமோ? அதுபோல், நிறைந்த சொற் செல்வமுடைய தமிழ் தான் பிற மொழிகளினின்றும் சொற்களைக் கடன் வாங்கிக் கொள்வதால், தான் எவ்வாறு வளர்ச்சி யடையும்? இன்னும் அளவிற்கு மிஞ்சிய செல்வ முடையானொருவன் தன் பொருளைச் செலவழியாது, பிறனொருவனிடஞ் சென்று கடன் கேட்பானாயின், அப்பெருஞ் செல்வவானை நோக்கி அறிவுடையார் எள்ளி நகையாடிப் போவர். அதுபோல் தமிழர்கள் தம் மொழியின்கண் அளவற்ற சொற்கள் அமைந் திருத்தலைக் கண்டும், அவைகளைப் பயன்படுத்தாது பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கித் தம் தமிழைப் பெருக்குகின்றோ மென்று கூறுதல் எங்ஙனம் பொருந் தும் கூறுமின்கள்! இயற்கையில் மிகவும் குறை பாடுடைய ஆங்கிலமொழி வழங்கும் ஆங்கில நன் மக்களுங்கூடக், கிரீக்கு இலத்தின் பிரஞ்சு முதலிய பிறமொழிச் சொற்களை ஏராளமாகக் கடன் வாங்கி எழுதுவதால் தூய ஆங்கிலச் சொற்களிற் பல வழங்கா தொழிகின்றன வென்றும், நடையும் பயில்வோர்க்கு விளங்காமற் றன் தூயதன்மை இழந்து போகின்ற தென்றும் அறிந்து மிக வருந்தி உரைக்கின்றனர். **ஆசிரியர் மேக்லீஜான்**[1] என்னும் ஆங்கில நூலாசிரியர் பிறமொழிகளை ஆங்கிலத்திற் கலந்து எழுதுதல் குற்றமா மெனக் காட்டி யிருக்கின்றார். இன்னும் ஆங்கிலம்வல்ல நல்லிசைப் புலவர்களான **செகப்பிரியர்**,[2] **மிலிட்டனார்**,[3] **ஷெல்லி**,[4] **டென்னிசன்**[5] முதலியோர் தம்மால் ஆனமட்டும் முயன்று அம்மொழிச் சொற்கள் விரவாத

---

[1] Prof. Meiklejohn. [2] Shakespeare. [3] Milton.
[4] Shelly. [5] Tennyson.

தூய ஆங்கில நடையிற் பல்லாயிரம் இனிய பாக்கள் பாடியிருப்பதற்காக அவர்களை ஆங்கில அறிஞர்கள் எவ்வளவு புகழ்ந்து பேசுகின்றார்கள்! பிற்காலத்து இருந்த டென்னிசன், தமது காலத்தில் அயன் மொழிக் கலப்பால் வழங்காது மறைந்த தூய ஆங்கிலச் சொற்களை மீண்டும் எடுத்து வழங்கி, அவற்றை அங்ஙனம் வழங்க விட்டமைக்கு அவர் கற்றறிவுடைய ஆங்கில நன்மக்களால் எவ்வளவு பாராட்டப்படுகின்றனர்! ஜான்சன்[1], கிஃபன்[2] என்னும் உரைநூற் புலவர்கள் மற்றைத் துறைகளிற் சிறந்தவர்களாயிருந்தும், கிரீக்கு இலத்தின் முதலான அயன்மொழிச் சொற்களை மிகுதியாக எடுத்துத் தம் உரை நூல்களிற் சேர்த்து எழுதினமைக்காக அவர்களை ஆங்கில நன்மக்கள் இன்றுங் குறைத்துப் பேசுகின்றார்கள்.

தனித்துநின்று இயங்கமாட்டாக் குறைபாடுடைய ஆங்கில மொழியையே அதற்குரியோர் இயன்றமட்டுந் தூயதாய் வழங்குதலிற் கண்ணும் கருத்தும் வைக்க வேண்டுமென்று ஓயாது வற்புறுத்தி வருகின்றார்கள். இஃதிங்ஙனமிருக்க, இக்காலத்துத் தமிழர்களிற் பலர், குறைபாடு ஒரு சிறிதும் இல்லாத தமிழ்மொழி தானே தனித்து நின்று இயங்கவல்லது என்பது உணர்ந்தும், அது தன்னைப் பிறமொழிக் கலப்பால் மாசுபடுத்திப் பழந்தமிழ்ச் சொற்களையும் வழக்கு வீழ்ந்தொழியச் செய்கின்றார்கள். கிரீக், இலத்தீன், இத்தாலியன், பிரஞ்சு முதலிய பிறமொழிச் சொற்களால் ஆங்கிலம் கலப்புற்றதாயினும், அஃது ஆங்கிலம் என்ற பெயராலேயே வழங்கப்படுகின்றது; அதுபோல் சமஸ்கிருதம், ஆங்கிலம், இந்தி, கன்னடம், மலையாளம் முதலிய பிறமொழிச்சொற்களைத் தமிழின்கட் சேர்த்து எழுதினாலும் பேசினாலும் அதனைத் தமிழ்மொழியென்று உலகில் வழங்குதலின் அது குற்றமன்றெனின்; சிறிது பொருளுடையா னொருவன், ஏனையோரிடஞ் சென்று கடனாக ஏராளமான பொருளைப் பெற்றுப்

---

[1] Johnson. [2] Gibbon.

பெருஞ் செல்வனுய் வாழ்தலை நுணுகி ஆராயாதார் அவனையும் பெருஞ் செல்வனென்றே கூறுவர். ஆனல், அவனை அணுகி ஆராய்ந்தார் எவரும் அவனை வறியவனென்று கூறுவரே யல்லாமற் பெருஞ் செல்வனென்று கூறுவரோ? உரைமின்கள்! அதுபோலவே, மிகக் குறைவான சொற்களைத் தன்னிடத்தே உடைய ஆங்கில மொழியானது பிற மொழிகளின் உதவி கொண்டே நடைபெறுகின்றதனுல், அது மிகவும் ஏழ்மையான மொழி யென்றே ஒப்புக்கொண்டு ஆங்கிலருங் கூறி வருந்துகின்ருர்கள். ஆனுற் சிலரோ சமஸ்கிருதம், ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய பிறமொழிச் சொற்களைச் செல்வச் செழுந்தமிழிற் சேர்த்து எழுதினுலும் பேசினுலும் அதனைத் தமிழ் மொழி யென்றே உலகில் வழங்குவர் என்று கூறுகின்றனர். அவர்தம் விருப்பப்படி மேற் கூறிய பிறமொழிச் சொற்களைத் தமிழிற் பொருத்திய இரண்டொரு சொற்ருெடர்கள் எழுதுவாம்.

"ஏ பிட்டா, நீ பசாருக்குப் போயி ஒன் ரூபிக்கு ஐந்து நாளிகேர புரூட்ஸ் வாங்கிக்கிணு இதர் ஆவ்," "ஞாங்களிக்கி அத்தவாளம் சாப்பிடணும்," "ப்ளீஸ் ஜானகி இந்தப் பென்சிலை மெண்ட் பண்ணித் தா".

"ப்ரத்யட்சமாகத் தோணுகிற சர்வ ஜகத்தையும் மித்யா எனச் சொல்லும் ஏகாத்மவாதிகள் தமக்குப் ப்ரமக்ஞானம் லபித்துவிட்டது என்பர்." இப்படிப் பல மொழிச் சொற்களையுங் கலந்தெழுதுந் தமிழுந் தமிழ்தான் என்பது அவர்க்குக் கருத்துப் போலும்! 'ஸ்ரீ ருத்ரம்' என்னும் நூலை மொழிபெயர்த்தவர் பின் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிற தொடர்மொழியைப் போலவே நெடுக எழுதியிருக்கின்ருர். அவைகளுள் ஒரு சொற்ருெடரை இங்கே எழுதுவாம்.

"ஒன்றிற்குத் தாத்பர்யம் சக்கியார்த்தத்திலிருக்குமே ஒழிய லக்ஷியார்த்தத்திலிருக்க முடியாதென்று கூறமுடியுமா?" இங்ஙனமெல்லாம் தமிழிற் பிறமொழிகளைச் சேர்த்து எழுதுவதால் தமிழ் எவ்

வகையில் வளர்ச்சி யடைகின்றதென்பதைப் பகுத்துணர்ந்து சொல்வது நலமாயிருக்கும். பிறமொழிக் கலப்பால் இக்காலத்துத் தமிழ்நடை தன் இனிமையையும் தூய்மையையும் பழமையையுங் குன்றி யிருப்பதை எவரே உணராதார்!

3. தமிழ்மொழி ஒன்றே தெலுங்கு மொழியாக மாறியதென்று எடுத்துக்காட்டோடு யாம் கூறியதை மறுத்தாரும் உளர். அதனை ஆராய்வாம். தமிழர்கள் தெற்கே குமரிமுனையி லிருந்து பெலுசித்தானம் வரையில் பரவி யிருந்ததாக **டாக்டர் கால்ட்வெல்,**[1] **டாக்டர் கிரியர்சன்**[2] முதலிய ஆங்கில ஆசிரியர்கள் கூறுகின்றார்கள். தமிழர்கள் பலர் வடநாட்டுப் பக்கங்களிற் குடியேறினபோது, தம் தமிழ்மொழியைப் பாதுகாவாது அதன்கண் வட சொற்கள் ஏராளமாக வந்து கலக்க இடந் தந்தமையினாலேயே தமிழ் ஒன்றே தெலுங்காகத் திரிந்தது. இஃது எங்ஙன மெனிற் கூறுதும்.

ஒரு மொழி மற்றொரு மொழிக்கு இன முடையதோ அன்றோ என்று தெரியவேண்டுமாயின், அதற்குச் சில அடையாளங்கள் அறிவுடையோரான் காட்டப்பட்டிருக்கின்றன. மிகவும் பழமையான காலத்தில் ஓரிடத்திலிருந்த மக்கள், தம் உடம்பிலுள்ள உறுப்புக்களையும், தமக்கு வேண்டிய உணவுப் பண்டங்களையும், தாம் புழங்கின ஏனங்களையும், தமக்கு உரியவர்களையும், தமக்குத் தெரிந்த சிற்றுயிர்கள் மரங்கள் முதலியவைகளையும் குறிப்பிடுவதற்கு முதன்முதல் வழங்கின சொற்களே அந்த மக்களுக்கு உண்மையில் முற்றும் உரியவைகளாகும். இங்ஙனமே, இந்நில உலகத்தின் மற்றொரு பகுதியி லிருந்த மற்றைய ஒரு வகுப்பினர் வழங்கிய சொற்களும் ஒரு மொழியாகி அவர் தமக்கே உரியதாயிருக்கும். இங்ஙனம், இருவேறு வகைப்பட்ட இருவகை மக்களும் முதன்முதற் பேசிய சொற்களை

---

[1] Dr. Caldwell. [2] Dr. Grierson.

ஒப்பிட்டுப் பார்த்தால் அவை ஒன்றைப்போ லொன்று இராமல் வேறுபட்டிருத்தலைக் கண்டு கொள்ளலாம். ஒரு மொழியைப் பேசிய மக்களே பின்னொரு காலத்தில் தாமிருந்த இடத்தைவிட்டு வேறு பல இடங்களுக்குச் சென்று உயிர் வாழ்வார்களானால், அவர்களுடைய மொழியானது அவர்கள் புதிதாய்ச் சென்ற ஊர்களில் உள்ள மொழிகளோடு கலக்கும். அப்படிக் கலந்தாலும் அந்த மொழியின் முதற்பிறந்த சொற்களை எடுத்து ஆராய்வோமானால், அவர்கள் முதன்முதல் இருந்த இடத்தில் இப்போது இருக்கும் அவர்களின் இனத்தார் வழங்கும் மொழியோடு அது முழுதும் ஒத்திருத்தலைக் கண்டுகொள்ளலாம். இவ் வுண்மைகளை **மாக்ஸ் முல்லர்,**[1] **டாக்டர் கால்ட்வெல்** முதலிய ஆசிரியர்கள் எழுதிய மொழிநூல்களிற் காணலாம். தமிழர்களில் ஒரு பகுதியார் தெலுங்கு நாட்டிலும், மற்றொரு பகுதியார் மலையாளக்கரையிலும், மற்றொரு பகுதியார் கன்னட நாட்டிலும், மற்றொரு பகுதியார் நீலகிரியிலும், மற்றொரு பகுதியார் பம்பாய் மாகாணத்திலும், இன்னும் ஒரு பகுதியார் பெலுசித்தானம், பஞ்சாப், வங்காளம் முதலிய இடங்களிலும் போய்க் குடியேறினார்கள். இக்காலத்தைப்போல எளிதிற் போக்குவரவு செய்தற்குரிய புகைவண்டி முதலியன இல்லாமையால் அங்கங்கே குடியேறினவர்கள் ஒருவரையொருவர் காணப்பெறாது உயிர்வாழ்ந்தனர். அதனால் அவர்கள் நாகரிகமிலராய்த் தமிழ் மொழியைப் பாதுகாவாமலும், நூல்கள் எழுதாமலும் விட்டமையினாலே, அவர்கள் வழங்கிய தமிழ்ச் சொற்களும் நாளடைவில் திரிபடைந்து, தெலுங்கு, கன்னடம் மலையாளம், பிராகுவி, பாலி, துளுவு, தோடா முதலான மொழிகளாய்விட்டன. ஒவ்வொரு மொழி வழங்கும் ஒவ்வொரு வகுப்பாரும் தம் மொழியைத் திருத்தமாக நூல்களில் எழுதிவையா விட்டால், அம் மொழிகளானவை அவ்வக்காலத்துத் தோன்றும் பிற

[1] Max Muller.

மொழிக் கலப்பால் திரிபெய்திப், பின் பயில்வோர்க்குப் பயன் தராது போம் என்பதைக் குறித்துத் தெளிவாக 'நாகரிகமும் மொழிவளர்ச்சியும்' என்ற கட்டுரையில் எழுதி யிருக்கின்றேம். இக்காலத்திலேயுங் கூடச் சென்னை, தஞ்சை, திருநெல்வேலி, மதுரை யாழ்ப்பாணம் முதலிய ஊர்களிற் பேசப்படும் தமிழ் சிறிது சிறிது வேறுபட்டிருத்தல் எவர்க்குந் தெரிந்ததே. புகைவண்டி முதலான போக்கு வரவுக்குரிய கருவிகளில்லாவிட்டால் இந்நாட்டவர்கள் வழங்கும் சொற்களுங்கூட நாளடைவில் தனித்தனி மொழிகளாதல் திண்ணம். ஆனுற், கற்றவர்களாற் பண்டுதொட்டு எழுதிவைக்கப்படும் நூல்களின் உதவிகொண்டே தமிழ் எக்காலத்தும் மாறி அழிந்துபோகாத நிலைமையை அடைந்து தமிழர்க்கெல்லாம் பயன்பட்டு வருகின்றது.

தமிழ் ஒன்றில்மட்டும் மிகப் பழைய காலத்தில் எழுதப்பட்ட நூல்கள் இருக்கின்றன. தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய தமிழ்திரிந்த மொழிகளில் எழுநூறு ஆண்டுகளுக்கு மேற்பட்ட நூல்களும் இல்லை. கல்வெட்டுகளும் இல்லை. எழுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வெட்டுகளெல்லாம் தமிழ் மொழியிலேயே யெங்கும் காணப்படுகின்றன. அதனுல் தமிழே இவ் விந்திய நாட்டுக்கு முதன் மொழி என்பதும், அதன் திரிபான தெலுங்கு முதலான மற்ற மொழிகளெல்லாம் எண்ணூறு ஆண்டுகளுக்குள்ளாகத் தோன்றினவேயாம் என்பதும் வெள்ளிடைமலை போல் விளங்குகின்றன. இவ்வுண்மையை **டாக்டர் கால்ட்வெல்** நன்ருக ஆராய்ந்து காட்டி யிருக்கின்ருர்.

தெலுங்கில் முதன்முதல் நூலெழுதிய **நன்னய பட்டர்** பன்னிரண்டாவது நூற்ருண்டில் இருந்தவர். மலையாளத்தில் முதன்முதல் நூலெழுதிய **எழுத்தச்சன்** முதலியோரும் பிற்காலத்தவரே யாவர். இதனுல் தெலுங்கில் பழைய நூல்கள் இல்லை யென்பதும், அவைகள் கடல் கொள்ளப்படவில்லை யென்பதும்

விளங்கும். மேலும் தெலுங்கர்கள் கங்கையாற்றங் கரையடுத்த உள் நாடுகளில் இருந்தவர்க ளென்று 'கிரேக்கர்' கூறுவதால் அவர்களுடைய நூல்களை ஒரு சான்றுமின்றிக் கடல் கொண்டன என்று கூறுவார் கூற்றுப் பொருந்தாது.

தெலுங்கு மொழியில் இரண்டாயிரம் ஆண்டு களுக்குமுன் இலக்கண இலக்கிய நூல்கள் எழுதப் பட்டிருந்தன என்றும் பின்னொரு காலத்தில் அந் நூல்கள் கடலில் அமிழ்ந்தி இறந்தன என்றும் கூறுவா ரும் உளர். எந்த அரசன் காலத்தில் எந்தக் கடலில் அவை அமிழ்ந்தி மறைந்து போயின என்பதைத் தக்க சான்றுகளோடு கூறுதவரையில் அவரது கூற்று அறிவுடையோரால் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

யான் தமிழ்ப் பெண்ணாய்ப் பிறந்ததுபற்றி அத னிடத்து மிகுந்த பற்றுக்கொண்டு தமிழே உயர்ந்த தென்று ஒரே பிடியாய்க் கூறுகின்றேன் என்றார் சிலர். இஃது ஒரு சிறிதும் பொருந்தாது. தமிழ்மொழி இவ்விவ் ஏதுவால் உயர்ந்த தென்று ஒரு சான்றும் கூறாமல், உலகிலுள்ள எல்லா மொழிகளினும் தமிழே உயர்ந்தது, தமிழே உயர்ந்தது என்று ஓயாமல் திரும் பத்திரும்பக் கூறுவேனாகில் அவர்கள் என்னைப் பொய்ப் பற்று உடையவ ளென்று கூறலாம். யான் மேலெழு திய கட்டுரையில் தக்க சான்றுகள் காட்டி யிருக் கின்றேனாதலால் அவ்வாறு சொல்வது அறிவுடை மைக்கு அழகன்று.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்ற **தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார்** அருட் குறட்பாவின்படி யான் பேசுவதிலும் எழுதுவதிலும் உள்ள பொருள்களை நடுநிலை பிறழாமல், ஆராய்ந்து இவை பிழையானவை, இவை பொருத்தமானவை என்று கொள்ளல் வேண்டுமே ஒழிய யான் வீண் பற்றுள்ளவளென்று கூறல் சிறிதும் அடாது. உலகில்

நாம் தமிழ் மக்களாய்ப் பிறந்ததற்கு அடையாளமாக நம்மைப் பற்றியும் நம் மொழியைப்பற்றியும் நம் கொள்கையைப் பற்றியும் நன்முக ஆராய்ந்துகொள்ளல் இன்றியமையாததொன்றும். நம் தமிழ்மக்கள் பெரும்பாலாரிடத்து இவ்வாராய்ச்சி மிகவும் குறைவாக இருப்பதை நோக்கி ஆங்கில மக்கள் நம்மை இகழ்ந்து பேசுகின்றார்கள். நம் தமிழ் மொழியின் உண்மைகளையும், தமிழரின் உயர்ந்த நாகரிகத்தையும், தமிழ்க் கொள்கைமாட்சியினையும் நம்மின் வேறான ஆங்கில அறிஞர்கள் நமக்கு ஆராய்ந்து காட்ட நாம் சும்மாயிருப்பது மன்றி, நாமே நம் தமிழைக் குறை கூறுவதும், அதனைக் கெடுக்கப் பார்ப்பதும் எவ்வளவு தீவினைச் செயல்களா யிருக்கின்றன! நாம் நம் அறிவை விளக்கி அறியாமையினின்றும் நீங்கப்பெற்று உலகத்திற் பலப் பல நன்மைகள் செய்யும்பொருட்டே கல்வி கற்கின்றோம் என்க.

---

## 7. தமிழில் வடமொழி கலத்தல் ஆகாது

தமிழ் மொழியில் வடசொற்களைக் கொண்டு வந்து கட்டாயம் சேர்த்தல் வேண்டு மென்றும், தமிழையும் வடமொழியையும் நாம் நம் இரண்டு கண்களைப்போல் நினைத்தல் வேண்டுமென்றும், உயிரோடிருக்கும் மொழியாகிய தமிழிற் பிறமொழிகள் கலப்பது இயற்கை என்றும் சிலர் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் ஏதுவின்றிக் கூறுகின்றார்கள்; இவைகளை ஆராய்வாம்.

தமிழ்மொழிக்கு வடமொழிக் கலப்பு எதற்காகக் கட்டாயம் வேண்டும்? தமிழ் ஏதேனும் குறைபாடுடைய மொழியா? தமிழிலோ போதுமான சொற்கள் நிறைந்து கிடக்கின்றன. எல்லா உறுப்புக்களும் செவ்விதின் அமையப் பெற்று எழில் மிக்கு

விளங்குகின்ற ஒரு நங்கையின் கைகால் முதலிய உறுப்புக்களை வெட்டிப் புறத்தே எறிந்துவிட்டு, அவையிருந்த இடங்களில் வேறு குரங்கின் கைகளையும் கால்களையும் பொருந்த வைத்தால் அந் நங்கையின் உடலழகு மறைவதோடு அவள் தன் அழகிய உறுப்புக் களையும் பெற இயலாது வருந்துவள்! அதுபோல், பண்டை அறிவுடையோராற் செவ்விதின் அமைக்கப் பட்ட தமிழ் மொழியின் உறுப்புக்களாகிய பல பழந் தமிழ்ச் சொற்களை இல்லாமல் ஒழித்து, வேறு வட சொற்களை அதனிற் சேர்ப்பதால் அது தன் இனிமையும் பெருமையும் இழந்து போமன்றோ? வடமொழிக் கலப்பின்றி முற்காலத்தில் எழுதப்பட்ட தமிழ் நூல் களின் தூய செந்தமிழ் நடைப் போக்கின் இன்சுவை யினையும் பொருள் ஆழத்தினையும் உற்றுநோக்கி மகிழாத அறிஞர் யார்? 'திருக்குறள்' ஒன்றை நோக் கினும் யாம் கூறும் உண்மை விளங்கும்; திறக்குறளில் உணர்த்தப்படாத பொருள்கள் இல்லை. அப்பொருள் கட்கெல்லாந் தூய தனித்தமிழ்ச் சொற்கள் இருக் கின்றன அல்லவோ? அங்ஙனம் எல்லாப் பொருள் களையு முணர்த்தும் எல்லாச் சொற்களும் தமிழில் இருக்கவும், தமிழைக் குறைபாடுடைய மொழி என்பவர் பழந்தமிழ் நூல்களைத் தினைத்துணையும் அறியாதவர்களென்பது புலனாகின்றதன்றோ? ஏராள மான சமஸ்கிருதச் சொற்களைச் சேர்த்துப் பொருள் ஆழமின்றி எழுதப்படும் இக்காலத்துத் தமிழ் நூல் களைக் கண்ணுற் காணவும் அறிஞர் வருந்துகின்றனர்! சமஸ்கிருதக் கலப்பால் ஐந்நூறு ஆண்டுகளாக நந் தமிழ்மொழி சீர்கெட்டு நிற்கும் நிலையைக் கண்டு மனம் புழுங்காத் தமிழரைத் தமிழர் என்று அறிவுடையோர் அழைப்பரோ? ஒருபோதும் அழையார். தமிழுக்குக் கேடு சூழ்பவர்கள் தமிழரேயன்றி வேறுமொழிக் குரியாரல்லர். தமிழ் கற்பித்துக்கொண்டு அதனால் வரும் வருவாயும் பெற்று வாழும் ஆராய்ச்சி அறி வில்லா இக்காலத்துத் தமிழ்ப் புலவர்களிற் சிலரே

தமிழைக் குறைகூறித் திரிகின்றனர்! இங்ஙனமாகத் தம்மை வளர்க்கும் தாய்மொழியைக் குறைகூறித் திரியும் அவர்களைத் தமிழ்ப்புலவர்கள் என்றழைத்தலை விடத் தமிழ்ப் பகைஞர் என்று அழைத்தலே பொருந்தும். தமிழின் சொற் செல்வமும், புதுப் பொருள்களை வழங்குதற்குத் தமிழினின்றே சொற்கள் படைக்கும் வகையும் 'தனித் தமிழ்ப் பாதுகாப்பு' என்னும் கட்டுரையில் விரித்து விளக்கினேமாகையால் அதனையே மீண்டும் விரித்துப் பேசவில்லை.

இனித், தமிழையும் வடமொழியையும் நம் இரண்டு கண்கள்போற் பாதுகாத்தல் வேண்டுமென் பதனைச் சிறிது ஆராய்வாம். சமஸ்கிருத மொழியைக் கண்போற் பார்ப்பதற்கு அளவில்லாப் பார்ப்பனர்கள் முன்னெழுந்து விட்டனர். அதனைக் கண்ணுக்குமேலாகத் தம் உயிர்போன்றும் பாதுகாத்து வருகின்றனர். ஆனால், நந்தமிழர்களிலோ தமிழைக் கண்போல் நினைத்து பாதுகாப்பவர்கள் ஒருசிலரே யாவர். தமிழரிற் பெரும்பாலார் சிறிது பழுதுபட்டிருக்கின்ற தமிழாகிய கண்ணைப் பாதுகாவாவிடினும் விடுக! அக்கண்ணை மேலும் மேலும் வடசொற் கலப்பாகிய இருப்புக் கோல் கொண்டு குத்தி முழுவதும் பாழ்படுத்த முயல் பவர் செயலை என்னென்பேம்! ஐயகோ! இவர்தம் கொடிய முயற்சியை நினைந்து நினைந்து தமிழ்த் தாய் ஓலமிடுகின்றனள்! நாம் நம் இரண்டு கண்களில் ஒன்றைத் தமிழாகவும், மற்றொன்றைச் சமஸ்கிருத மாகவும் வைத்தேனும் ஆராய்ந்து பார்ப்போம். இரண்டு கண்களில் ஒன்று பழுதுபட்டு இறந்துபட்ட பின் அதனை உயிர்ப்பித்துப் பாதுகாத்தல் எங்ஙனங் கூடும்? சிறிது நோய்ப்பட்டு உயிரோடு இருக்கும் மற்றொரு கண்ணைக் கண்ணுங் கருத்துமாகப் பார்த்தல் நல்லது. இறந்துபட்ட கண்ணைப் பாதுகாத்தலால் நாம் அடையும் பயன் ஒன்றும் இல்லை. உயிரோடுள்ள மற்றொரு கண்ணைப் பாதுகாப்போமாயின் அதன் வழியாக உலகிலுள்ள பல பொருள்களையுங் கண்டு

மகிழலாம். அஃதேபோல் மக்களின் சொல் வழக்கில் இல்லாது இறந்தொழிந்த சமஸ்கிருதத்தால் நாம் அடையும் பயன் ஒரு சிறிதும் இல்லை. அதனை உயிர்ப்பித்தல் நம்மால் இயலாததொன்றாம். நீண்டகாலமாக மக்களாற் பேசப்பட்டு இன்றும் தன்னிளமை குன்றாது உயிரோடிருக்கும் மொழியாகிய நந் தமிழை வடசொற் கலப்புக்கு இடந் தராமற் பாதுகாப்போமாயின், அதனால், நாம் அதனைத் திருத்தமாக வழங்கித் திருந்திய அறிவும் திருந்திய செய்கையும் அடைவோம்.

இனி, உயிரோடிருக்கும் மொழியாகிய தமிழோடு வடசொற்கள் கலப்பது இயற்கை. ஆகலின், தமிழோடு வடசொற்கள் கலப்பது இயற்கையாகும் என்பார் கூற்றை ஆராய்வாம்.

ஒரு மொழிக் குரியார் மற்றொரு மொழியாரோடு கலத்தல் ஏற்படுமாயின், ஒரு மொழிச் சொல் மற்றொரு மொழியில் கலக்கும். ஆரியர் தமிழரோடு கலந்தமையின், ஆரியச் சொற்களைத் தமிழர் வழங்கினர். தமிழ்ச் சொற்களை ஆரியரும் வழங்கினர். இப்போது ஆங்கிலர் நம்மோடு நெருங்குவதாற் பல ஆங்கிலச் சொற்களையும் வழங்குகின்றோம். நடுப்பட்ட காலத்தில் தமிழரோடு துருக்கர் சிறிது நெருங்கிப் பழக நேர்ந்தபோது, 'நாஸ்தா,' 'ஜலவாதி,' 'ஜாஸ்தி' முதலான பல இந்துஸ்தானிச் சொற்களையும் தமிழர் வழங்கத் தலைப்பட்டனர். இங்ஙனம் பேச்சு வழக்கிற் பிறமொழிச் சொற்களையும் நாம் வழங்குவது இயற்கைதான். பொதுமக்கள்பால் இவ்வியற்கையைத் தடுத்தல் முடியாததொன்றாம். ஆனால், நாம் பலரிடமும் பேசுகின்ற கலப்புத் தமிழில் நூல் எழுதுவது சிறந்ததா? அல்லது, நமதறிவை ஒரு நிலைப் படுத்தித் தனித்தமிழில் எழுதுவது சிறந்ததா? நாம் பற்பல முயற்சிகளைச் செய்தலானும், நினைத்தவற்றை உடனே தெரிவித்தல் வேண்டுமென்ற எண்ணத்தானும், அறிவை ஒரு நிலைப்படுத்தித் திருத்தமாகப் பேச மனவெழுச்சி இன்மையாலும் சோம்பலுற்ற நாம் முன்வருஞ் சொற்களைப் பின்வைத்தும்,

பின் வருஞ் சொற்களை முன்வைத்தும் பிறமொழிச் சொற்களைக் கலந்தும் பேசிவிடுகின்றோம். ஏற்கெனவே அறியாமை வழிப்பட்டுக் கிடக்கும் நாம் அறிவு பெற வேண்டுவது முதன்மையாகும். ஒன்றும் அறியாமல் அறியாமை இருளிற் கிடந்துழலுகின்ற ஒரு குழவிக்கு அதன் தாயானவள் பையப் பைய எல்லாப் பொருள் களையும், அவைகளின் பெயர்களையும், சுட்டிக் காட்டிக் காட்டி அறிவித்தலான், அக்குழவி அறியாமையினின் றும் விடுபட்டுப் பொருள்கள் பலவற்றையும் அறிந்து அறிவு விளங்கப்பெறுகின்றது. நாம் கல்விகற்பது எதற் காக? சோம்பலை விட்டு முயற்சியையும் அறிவையும் பெறுதற் கன்றோ? நாகரிக மின்றி, அஃதாவது செயற்கை அறிவு வளர்ச்சி யின்றி அழுக்காடை உடுத்து ஊர் ஊராய் அலைந்து இரந்துண்டு உயிர் வாழும் குறவர் வாழ்க்கை இயற்கையாகும். அக்குற வர் நாகரிக வாழ்வு பெற வேண்டின் அவர்கள் யாது செய்தல் வேண்டுமெனிற் கூறுதும். அவர் தமது இயற்கை அறியாமையை மாற்றிச் செயற்கை அறி வாற் குளித்து முழுகித் தூய ஆடை அணிந்து தூய உணவு உண்டு வீடுகள் அமைத்து அவைகளில் வாழ்ந்து கல்வி அறிவைப் பெருக்கி இங்ஙனமாகத் தம்மைத் திருத்திக் கொள்ளுதல் முதன்மையாகும். மக்கள் முதன்முதல் தோன்றிய காலத்து ஆடை யின்றிப், பச்சைக் காய் கனி கிழங்குகளைத் தின்று கொண்டு மரங்களின்மேல் உறங்கிக் காலங்கழிப்பது அவர்கட்கு இயற்கையா யிருந்தது. ஆனால், அவர் வழியராய்த் தோன்றிய நாமோ செயற்கை அறிவாற் றிருந்தித் தூய அழகிய நடை உடை எண்ணங்கள் உடையராய் அறுசுவை உணவு உண்டும், மாடமாளி கைகளில் வாழ்ந்தும் வருகின்றோம். இன்னும், நாம் பருகும் தண்ணீரில் நச்சுப் புழுக்கள் நிறைந்திருக்கின் றன. இஃது இயற்கையிலுள்ளது. இவ்வியற்கைநீர் நம் உடம்புக்கு ஒவ்வாமை கண்டு அறிவுடையோர் செயற்கை அறிவால், அக்குளிர்ந்த நீரை நன்றாகக்

காய்ச்சி அந் நச்சுப்புழுக்கள் இறந்தபின், வடிகட்டி உட்கொள்ளுகிருர்கள். நாம் கருத்தும் முயற்சியும் இன்றி வாய்க்கு வந்தவாறு பேசுவதால் பிறமொழிச் சொற்கள் தமிழிற் கலந்துவிடுகின்றன. அறிவும் முயற்சியும் இல்லா இவ்வியற்கை நம் தமிழ்மொழிக்குத் தீமை உண்டுபண்ணுதலால், நாம் கருத்தோடு மிக முயன்று பிறமொழிச் சொற்களாகிய நச்சுப் புழுக்களைத் தமிழாகிய தண்ணீரினின்றும் வடிகட்டித், தெளிந்த தீந்தமிழ்ப் புனலைப் பருகுதற்குக் கடமைப் பட் டிருக்கின்ரும். இவ்வாறன்றி, இயற்கையில் உள்ளபடியாகவே தான் தமிழைப் பலமொழிச் சொற்களோடுங் கலந்து நஞ்சாக்கிப் பயன்படுத்துவேமெனின், நச்சுயிர் நிறைந்த நீரை இயற்கையிலுள்ளபடியேயெடுத்துப் பருகுவோர் அதனுல் தம் உயிரை இழத்தல் போலத், தூயதல்லாக் கலப்புத் தமிழைப் பயன்படுத்துவோரும் தமிழராகிய தம் பண்டை உயர்நிலை கெட்டுச் சில நூற்ருண்டுகளில் தமிழர் என்னும் ஒரு வகுப்பாரே இல ரென்னும்படி மறைந்து ஒழிவர். ஆதலாற், பழமை தொட்டு நாகரிகத்திற் சிறந்த தமிழ் நன்மக்கள் வழியிற் ரேன்றிய நம்மனோர் தமது சிறப்பையும் நாகரிகத்தையும் நிலைநாட்டி, அவற்றைப் பிறரும் பின்பற்றுமாறு செய்வார்களாளுல் அவர்கள் தமக்கும் பிறர்க்கும் பயன்பட்டவராய்ப் புகழ் ஓங்கி வாழ்வர்.

---

## 8. சென்னைப் பல்கலைக்கழகக் கட்டாயக்கல்வி

தமிழ் வழங்கும் இத்தென்னுடெங்கும் உள்ள ஆண், பெண் என்னும் இருபாலாரும் தம் தாய்மொழியாகிய தமிழை ஏழாவது வகுப்பு வரையில் கற்றுப் பின் சம்ஸ்கிருத மொழியையே பயிலல் வேண்டுமென்று ஒருவர் எழுதியிருக்கிருர்.

தமிழ் நாடெங்கும் உள்ள தமிழர்கள் தமிழை ஏழாவது வகுப்பு வரையில் பயின்ற அளவானே

அதில் எழுதப்பட்டிருக்கும் அரிய பெரிய **'தொல்காப்பியம்,' 'புறநானூறு,' 'சிலப்பதிகாரம்,' 'திருக்குறள்'** முதலிய ஆன்றோர் நூல்களைக் கற்க ஆற்றலுடையவராவரோ? அல்லது தமிழைப் பிழையறத் திருத்தமாகப் பேசல் இயலுமோ? பலர் செய்யும் இடையூறுகளாலும் தன்னிலை குறைந்துவரும் தமிழை ஒரு சிலர் கூடக் கல்லாது விடுவராயின், தமிழ் நூல்கள் உலகில் பரவுவ தெங்ஙனம்? தமிழ் நாட்டார், இறந்துபட்ட சமஸ்கிருத மொழியைக் கற்பதனால் அடையும் பயன் என்னை? அம்மொழியில் எவ்வளவு கற்றுத் தேர்ந்தாலும், தம் தாய் தந்தையரோடும், மனைவி மக்களோடும், நண்பர்களோடும் அம்மொழியிற் பேசி மகிழல் இயலுமா? அல்லது அவர்கட்கு இனிய கடிதங்கள் எழுதல் முடியுமா? இன்னிசையோடு இறைவனைப் பாடி நைந்துருகி அவனருளைப் பெறல் இயலுமா? தக்க சான்றுகளோடு ஆராயப்புகின், இறைவனை நேரே கண்டு உள்ளம் நெக்கு நெக்குருகிக் கசிந்துபாடி அருள் பெற்ற பெரியோர்கள் நந் தமிழ்மொழியிலே அன்றிச் சமஸ்கிருத மொழியில் உளரோ? பகுத்தறிந்து கூறுமின்கள்! உலகமெங்கணும் சமஸ்கிருத மொழியையே கட்டாயக் கல்வியாக வைத்தல் வேண்டுமென்று கூக்குரலிடுபவர்கள், அங்ஙனம் அம் மொழியைக் கட்டாயக் கல்வியாக வைப்பதனால் உண்டாகும் பயன்களைக் கூறாமல் விடுவது அறிவுடையோரால் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. ஒவ்வொரு மொழி வழங்குவோரும் தத்தம் தாய்மொழியைப் பாதுகாத்தாலொழிய அவர்கள் ஒருவகையிலும் மேலோங்குதல் இயலாது. தத்தம் பொருளை மேன்மேலும் பெருக்குவோரே உண்மையில் செல்வராவர். பிறர் பொருளைக் கடனாகக் கொண்டே செல்வராக எண்ணுவோர் ஒருவராலும் செல்வமுடையவ ராகமாட்டார். தெலுங்கு நாடுகளில் இப்போது [1]ஆந்திர யூனிவர்சிட்டி என்ற பல்கலைக் கழகம் ஏற்படுத்தி அதில் தெலுங்கு மொழி

---

[1] Andhra University.

யைக் கட்டாயக் கல்வியாக வைத்துக் கற்கத் தேர்ச்சி யடைய ஏற்பாடு செய்து வருகின்றூர்கள். இவ்வாறு செய்யும் இவர்களே முயற்சியும் அறிவும் உடையவ ராவர். ஏனெனில், குழந்தைகள் முதற்கொண்டு முதி யோர் வரைக்கும் தெலுங்கையே தாய்மொழியாக வழங்கும் அந்நாட்டில் ஒருவராலும் பேச இயலாத சமஸ்கிருத மொழியைக் கட்டாயக் கல்வியாக வைத் தால், தெலுங்கர் முன்னேற்றத்திற்குரிய நூல்கள் அழிந்துபோவதோடு, அம்மொழியில் தம்மவரோடு பேசுதலும், கடிதமெழுதுதலும், மற்றும் அளவளாவு தலும் கூடாமற் போகுமல்லவோ? இறந்துபட்ட உடலைப் புதுப்பித்து ஒழுங்குபடுத்தல் எவராலும் இயலாததுபோல், உலக வழக்கிலில்லாது இறந்துபட்ட சமஸ்கிருதத்தை ஒழுங்குபடுத்தி உலகவழக்கிற் கொண்டுவரல் ஒருவராலும் முடியாததொன்றும். 'மலையாளத்திலும்' [1] கேரள யூனிவர்சிட்டி என்ற பல்கலைக் கழகம் ஏற்படுத்தி, மலையாள மொழியையும் நன்கு பயில முயற்சிசெய்து வருகின்றனர். இங்ஙனம் தமிழரல்லாத ஒவ்வொரு மொழி பேசுவாரும் தத்தம் மொழிகளையே முதன்மையாகக் கற்றுத் தேர்ந்து மேலோங்கல் வேண்டுமென்று பெரு முயற்சி செய்து வர, அவ் வறிவுடையோர்களைப் பார்த்தாயினும் அறிவுபெறாது ஒரு முயற்சியும் இல்லாமல் தமிழை இகழ்ந்து பேசிக்கொண்டு காலங்கழிக்கும் தமிழர் பெரும்பாலாரைத் தமிழரென்று அழைக்கலாமோ? தமிழிற்குக் கேடு சூழும் 'புறத்தார்' என்று கூற லாமோ? கூறுமின்கள்! முன்னே மலையாளத்தி லிருந்த தமிழர்கள் தமிழ் மொழியைப் பாதுகாவாது, தமிழில் வடமொழிச் சொற்கள் ஏராளமாகக் கலக்க இடம் தந்தமையினாலேயே இப்போது தமிழே 'மலை யாளம்' என்ற பெயரோடு வேறு மொழியாய் வழங்கு கின்றது. இங்ஙனமே தெலுங்கு, கன்னடம் முதலான மொழிகளும் திரிபெய்தின. எடுத்துக்காட்டாக மலை

[1] Kerala University.

யாளத்தை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே ஆண்ட 'சேரமான் பெருமாள் நாயனார்' தமிழரே. அவர் காலத்திருந்த 'சுந்தரமூர்த்தி அடிகளும்' அவர்க்கு நட்பினராகி அவரிடம் அடிக்கடி சென்றனர். பன்னிரண்டாம் நூற்றாண்டிலிருந்து அஃதாவது எழுநூறு ஆண்டுகளாகத்தான் மலையாளத்திலிருந்த தமிழர்கள் தமிழைப் பாதுகாவாது கைந்நெகிழ விட்டனராதலின், இப்போது அது தனி மொழிபோன்று வழங்குகின்றது. இவ்வுண்மையைச் சீனிவாச ஐயங்கார் அவர்கள், எம்.ஏ., தாமெழுதிய [1] தமிழாராய்ச்சிகள் என்ற நூலின்கண் மிக நுணுகி ஆராய்ந்து எழுதி யிருக்கின்றார். நிற்க.

இன்னும் சிலர், உலகத்திலுள்ள எல்லா மொழிகட்கும் சமஸ்கிருதமே பொதுமொழி என்று கூறுகின்றார்கள். 'கன்னடம்,' 'தெலுங்கு,' 'மலையாளம்,' 'தமிழ்' முதலான ஒரு சில மொழிகளிற் சமஸ்கிருதம் கலந்திருப்பது கண்டு, உலகில் உள்ள மொழிகட்கெல்லாம் சமஸ்கிருதம் பொதுமொழி யென்று கூறுபவர்கள், ஈபுரு, அராபி, ஜப்பான், சைன, ஜர்மன், பிரான்சு, பிரித்தானியா முதலான நாடுகளிலுள்ள மொழிகட்கும் அது பொது வென்று கூறத் துணிவரா? கடவுள் எல்லா உலகங்கட்கும் பொதுவாயிருப்பதுபோல், சமஸ்கிருதம் உலகிலுள்ள எல்லா மொழிகட்கும் பொதுவாக இருந்தாலன்றோ அது தன்னைப் பொது மொழி யென்று கூறலாம்? அங்ஙனமில்லாது, முன்னொரு காலத்தில் வடநாட்டிலிருந்த ஒரு சிறு பகுதியார்க்கே உரித்தா யிருந்ததாயும், ஏனையோர்க்குப் புதியதாயிருப்பதாயும் உள்ள சமஸ்கிருதத்தை ஆராய்வோர் எவர் தாம் அதனை உலகத்திற்குப் பொது மொழி என்பர்? கூறுமின்கள்! அற்றன்று. தமிழிலும், தெலுங்கிலும், கன்னடத்திலும், மலையாளத்திலும் சமஸ்கிருதச் சொற்கள் கலந்திருப்பதுபற்றி, இவைகட்குச் சமஸ்கிருதம் பொதுமொழியாம் என்ன

[1] Tamil Studies.

லாகாதோ எனின், தமிழ்திரிந்த மொழிகளே தெலுங்கு, கன்னடம், மலேயாளம் முதலியனவாகும். இவ்வாறு தெலுங்கு, கன்னடம், மலேயாளம் முதலான மொழிகள், தாம் தமிழே என்பதறியாமல் ஒன்ருே டொன்று மாறுபட்டுத் தமிழோடு பகைக்குமாறு செய்தது வடமொழிச் சொற்களின் கலப்பேயாகும். பலர்க்கும் இசைய ஒழுகி எல்லாரையும் ஒன்றுபடுத்தி அமைதியையும் நாகரிகத்தையும் உண்டாக்குவதையன்ருே பொது என்று அழைத்தல் வேண்டும்? அங்ஙனமின்றித் தனது கலப்பால் பலர்க்குள்ளும் பகையை உண்டாக்கி மாறுபடுத்துவது பொதுவாகுமா? வடமொழிக் கலப்பாலன்ருே குலவேறுபாடுகளும், பொய்க்கதைகளும், சமய வேற்றுபாடுகளும், நானே கடவுளென்று கூறும் மாயாவாதமும் வந்து நந் தமிழ் நாட்டில் நிலேபெற்றன. இப்போது, தெலுங்கு, கன்னடம் முதலான மொழிகள் தமிழோடு மாறுபட்டு இருக்கச்செய்து அவற்றைக் கீழ்விடுத்துத் தான் தன்னந் தனியே நின்று உயர நினேக்கும் சமஸ்கிருத மொழி இவைகட்கு எங்ஙனம் பொதுமொழி யாகும்? தெலுங்கு நாட்டார்க்கும், கன்னட நாட்டார்க்கும், மலேயாள நாட்டார்க்கும் வேருகிய சமஸ்கிருதம் எவ்வழியில் உறவும், பொதுவும் ஆகும்? இஃதொக்குமென்று கூறுபவர்கள் ஐரோப்பாவிலுள்ள வெள்ளேக் காரர்கட்கும், துலுக்கர்கட்கும், சைனவிலிருக்கும் சீனர்களுக்கும், ஜப்பானிலுள்ள ஜப்பானியர்கட்கும், தமிழ்நாட்டில் உள்ள தமிழர்க்கும், தெலுங்கு நாட்டிலுள்ள தெலுங்கர்க்கும், சமஸ்கிருதக் கலப்பால் உறவும் ஒற்றுமையும் உண்டாகுமென்று கூறுவரோ? தமிழோடு ஏனேக் கன்னடம், தெலுங்கு, மலேயாளம் முதலிய மொழிகள் உறவுடையனவாதல், அம்மொழிகளில் முதன்முதற் பிறந்த சொற்களே ஒன்ருேடொன்று வைத்து ஒப்பிட்டுப்பார்த்தால் நன்கு விளங்கும். ஆதலின், ஒன்றற்கொன்று இனமாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம் முதலிய மொழிகளே

ஒன்று சேர்த்து ஒன்றன் உதவியால் மற்றொன்று வளர்த்தலே விரும்பத்தக்கதாகும்.

ஆராய்ந்து பார்த்தால் ஆங்கிலந்தான் உலகத்திலுள்ள எல்லா மொழிகட்கும் பொதுமொழியாக இருக்கின்றது. சைனா, ஜப்பான், ஜர்மன், பிரான்சு முதலிய வேற்று நாடுகளிலும், தென்னாடு, வடநாடு, மேனாடு முதலான நம் இந்திய நாடுகளிலும் ஆங்கிலம் விரும்பிக் கற்கப்படுகின்றது. தென்னாட்டாராகிய நாம் நம் தாய்மொழியாகிய தமிழுக்கு அடுத்த நிலையில் பொதுமொழியாகிய ஆங்கிலம் கற்றல் மிகவும் நல்லது. உலகம் எங்குஞ் சுற்றினாலும் ஆங்கிலம் கற்றோர் ஆங்காங்கு இருத்தலின், நாம் ஆங்கிலம் ஒன்றனே பிறரோடு பேசுதலும், அளவளாவுதலும் செய்தல் கூடும். எல்லா மொழிகளிலுமுள்ள உயர்ந்த நூல்களெல்லாம் ஆங்கிலத்தில் மிக அழகானநடையில் கற்றறிந்தோரால் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன. இப்போது ஆங்கிலத்திலிருக்கும் நூல்களைப்போல் வேறு எம்மொழிகளிலும் காண்டல் இயலாது. மேலும் ஆங்கிலம் அரசியல் மொழியாகவும் இருக்கின்றது. ஆதலின் நம் தமிழ் நாட்டிற்குப் பொது மொழியாகக் கற்கப்பட வேண்டுவது ஆங்கிலம் ஒன்றுதான் என்பதை அறிவுடையோர் எளிதில் ஒப்புக்கொள்வார்கள். சமஸ்கிருதத்தில் அளவில்லாக் கட்டுக்கதைகள் உண்டு. பெரும் பொருள் செலவழித்து நீண்டகாலம் சமஸ்கிருதமொழி கற்றும் அதனால் வரும் பயன் மிகச் சிறிதே. இது மலைகல்லி யெலிபிடிப்பதனை ஒக்கும். ஆகவே, சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலக்கல்வியைக் **கட்டாயப் பொதுமொழிக் கல்வியாகவும்**, தமிழைக் **கட்டாயத் தாய்மொழிக் கல்வியாகவும்** வைத்தல் வேண்டுமென்பதே இக்கட்டுரையின் முடிவாகும். சமஸ்கிருதக் கல்வி கற்றற்கேற்ற வசதிகள் உள்ளோர் மட்டும் தம் தாய்மொழிகளோடு அதனைக் கற்கலாம். மற்றை எல்லோரும் அதனைக் கற்கவேண்டுமென்பதுதான் பொருத்தமாகும்.

# 9. நாவலந் தீவின் பழைய குடிகள்

பண்டைக் காலத்தில் இந்நாவலந்தீவில் இருந்த பழைய குடிகள் பலரைப்பற்றி ஒருவர் எழுதியதனை அழுந்திப் பயின்றதில் அதன்கண் பல ஐயப்பாடுகள் என் உள்ளத்தில் நிகழா நிற்கின்றன. கற்றறிவிற் சிறந்தோர் அவ்வையப்பாடுகளை நீக்கித் தெளிவான விடைகள் எழுதி உதவுவார்களாயின் அவை எனக்கே யன்றி எல்லார்க்கும் பெரும் பயன் தருவதாகும்.

1. இப்போது வடமொழியில் எழுதப்பட்டிருக்கும் நூல்களெல்லாம் ஆரியர்களாலேயே எழுதப் பட்டவைதாமா? இக்காலத்தில் ஆங்கில மொழிக்கு உரியரல்லாதாரும், ஆங்கில மொழியை நிரம்பக் கற்று ஆங்கிலேயரைப் போலவே, ஆங்கிலத்தில் சிறந்த பல நூல்கள் எழுதுகின்றார்கள். அதனால், ஆங்கில மொழி யில் இருக்கும் நூல்களெல்லாம் ஆங்கிலேயர்களே எழுதினார்களென்று சொல்வதற்கிடமில்லை. அதைப் போல, ஆரிய மொழியில் எழுதப்பட்டிருக்கும் நூல் களெல்லாம் ஆரியரல்லாதாராலும் எழுதப்பட்டிருக் குமோ? அல்லது ஆரியராலேயே முற்றும் எழுதப் பட்டிருக்குமோ? என ஓர் ஐயம் நிகழா நிற்கின்றது.

2. ஆரிய நூல்களெல்லாம் ஆரியர்களாலேயே எழுதப்பட்டிருக்குமானால் அவர்கள் தம் இனத்தவ ரல்லாத ஏனையோரைக் குறித்துக் கூறுவனவெல்லாம் உண்மையே என்று எடுப்பது பொருத்தமாகுமா? இக்காலத்தில் ஆங்கிலேயர் இவ்விந்திய நாட்டாரை நாகரிக மில்லாதவரென்று பழித்துக் கூறுநிற்க, நம் இந்திய நாட்டாரும் ஆங்கிலேயரை நாகரிகமில்லாதவ ரென்று அங்ஙனமே இழித்துக் கூறுகின்றார்கள். ஆதலால், பழைய நூலாகிய '**திவாகர**'த்தில் ஆரியர் மிலேச்சர் என்று சொல்லப்படுகின்றார்கள். இங்ஙனம், தமிழர் ஆரியரை மிலேச்சர் என்று இழித்துக் கூறு வதைப்போலவே ஆரியரும் தமிழர் முதலான ஏனை வகுப்பினரைத் 'தாசர்' என்றும், 'அரக்கர்' என்றும்

இழித்துக் கூறியிருக்கலாமோ என்று ஓர் ஐயப்பாடு நிகழா நிற்கின்றது. இவ்விரு வகுப்பார் கூற்றுள் இஃது உண்மையெனக் காட்டுதற்குப் பொதுச் சான்றென்னை ?

3. மக்களுள் நல்லறிவும், நல்லாராய்ச்சியும், கல்விப் புலமையும், திருந்திய ஒழுக்கமும் நாளேற நாளேறப் படிப்படியாய் வருதலைக் காண்கின்றோம். அங்ஙனம் வருமிடத்தும் ஒரு வகுப்பாருள் ஒரு சிலரே அங்ஙனம் மேன்மையுற்றுவர, அவ்வகுப்பாரில் மற்றைப் பெரும்பாலர் அங்ஙனம் மேன்மையடையாமல் நாகரிகம் அற்றவர்களாகவே இருந்து வருதலையுங் காண்கின்றேம். இங்ஙனம் ஒரு வகுப்பாரிலேயே ஒரு சிலர் நாகரிகமுற்றும், மற்றைப் பலர் நாகரிகமின்றியும் வாழ்ந்து வருதல்பற்றி அவ்விருபாலரையும் இருவேறு வகுப்பினராகக் கூறுவது பொருந்துமா ? எடுத்துக்காட்டாக, வேளாளரில் ஒரு சிலர் கற்றவராயும், நாகரிகம் வாய்ந்தவராயும், அருளொழுக்கம் உடையவராயும் இருக்க, மற்றைப் பெரும்பாலார் கல்லாதவராயும், நாகரிகமற்றவராயும், அருளொழுக்கத்திற் குறைந்தவராயும் இருக்கின்றனர். அதனால், அவ்விருபாலாரையும் இருவேறு வகுப்பினராகக் கூறலாமோ ? அதுபோல மிகப் பழைய காலத்தில் இந்தியாவின் வடநாடுகளில் முதலிற் புகுந்து குடியேறிய ஆரியர்கள் நாகரிகமற்றவர்களாய்ப் பல பிரிவினராய்ப் பிரிந்து பல பெயர்களை வைத்துக் கொண்டிருக்க, அவர்கட்குப் பல நூற்றுண்டுகளின் பின்னே வந்த ஆரியர் சிறிது நாகரிகமும் ஒற்றுமையும் உடையராய்த் தமக்கு முன்வந்து குடியேறிய அப் பழைய ஆரியர்களைத் தம்மின் வேறாகக் கருதி அவரை யிகழ்ந்துரைத்ததாய் இருத்தல் கூடாதா ?

4. ஆரியர் இந்தியாவுக்கு வருமுன் இந்தியா எங்கும் பரவியிருந்தவர் தமிழர் என்று மொழி நூலாராய்ச்சியில் வல்ல ஆங்கிலப் புலவர்கள் கூறுகின்றார்கள். அஃது உண்மையாயின், அப்போதிருந்த

தமிழரின் வாழ்க்கை நிலையும் வழக்க ஒழுக்க இயல்புகளும் என்னை?

5. நாகரிகம் என்பது யாது? பழைய தமிழர்கள் நாகரிகமில்லாதவர்களா? நாகரிகமுள்ளவர்களா? நாகரிகமில்லாதவர்களாயின் எங்தெந்த வகையில் நாகரிகம் இல்லாதவர்கள்? நாகரிகம் உள்ளவர்களாயின் எங்தெந்த வகையில் நாகரிகம் உள்ளவர்கள்?

6. மிகப் பழைய காலத்திலேயே தமிழில் செங்கோன்தரைச் செலவு,' 'தொல்காப்பியம்,' பன்னிரு படலம்' முதலியவற்றைப் போன்ற அரிய நூல்கள் ஆரிய மொழியில் உண்டா? அவை எவ்வெவை? இனி ஆரியம் தமிழல்லாத மொழிகளிலும் அத்தகைய பழைய நூல்கள் உண்டா? உண்டேல் எவ்வெம் மொழியில் எவ்வெங் நூல்கள் உள்ளன?

7. தொல்காப்பிய மியற்றிய ஆசிரியரையும் சிலர் ஆரியப் பார்ப்பனரென்றும், ஆரியரென்றும் கூறுகின்றார்கள். அதற்குப் பொதுச் சான்றென்னை?

8. தமிழ்நாட்டிலுள்ள பார்ப்பனர்கள் தமிழரா? ஆரியரா? வடநாட்டிலுள்ள பார்ப்பனர் சிற்றுயிர்களின் ஊனை உணவாக உட்கொள்வது போலத் தமிழ் நாட்டிலுள்ள பார்ப்பனர்கள் ஊனுணவு கொள்ளாததென்னை? ஆரிய மொழியிலுள்ள 'சதபதபிராமணம்,' 'சாங்காயன போதாயன கற்பசூத்திரங்கள்' முதலியவற்றில் மாடு, ஆடு, குதிரை, மீன் முதலியவற்றைக் கொன்று அவற்றின் ஊனை ஆரியப் பார்ப்பனர்கள் பண்டைக் காலத்திலேயே அருந்தி வந்தனரென்பது சொல்லப்படுகிறது. அதற்கொத்தபடியே இஞ்ஞான்றும் வடநாடுகளிலுள்ள பார்ப்பனர் ஊன் உணவு உட்கொண்டு வருகின்றார்கள். தமிழ்நாட்டிலுள்ள பார்ப்பனரும் ஆரியரேயாயின், மேற்காட்டிய தம் ஆரிய நூல்களிற் சொல்லியபடியும், வடநாட்டில் தம்மினத்தவராயுள்ள பார்ப்பனர் செய்கிறபடியும் தாமும் ஊனுணவு கொள்ளல் வேண்டுமன்றோ? அங்ஙனம்

கொள்ளாதிருப்பதென்னே? ஊனுணவு கொள்வது நாகரிகமா? அதனை யொழிப்பது நாகரிகமா? அதனை யன்புகூர்ந்து விளக்கல் வேண்டும்.

9. பண்டைக் காலத்தில் இந்தியாவுக்குப் புறம்பேயுள்ள நாடுகளிலிருந்து இந்தியாவுக்குள் வந்து குடியேறிய ஆரியர்கள் எவ்வகையில் நாகரிகமுடையவராயிருந்தனர்? அவர்கள் தம்முடன் கொண்டுவந்து தமக்கு முன்னே இங்கிருந்த தமிழர் முதலான ஏனை வகுப்பினர்க்குக் கற்பித்த நாகரிகம் என்னை? நாடு நகரங்களை ஒழுங்குபெற அமைத்துப் படைக்கலம் பயிலுதலினும், போர் இயற்றுதலினும், வல்ல அரச வாழ்க்கையிற் சிறந்து விளங்கிய பண்டைத் தமிழ் மக்களை, அவ்வொழுங்குகள் இல்லாமலும், உண்ணச் சோறும் உடுக்கக் கூறையும் கிடையாமலும் அவற்றைத் தேடிக்கொண்டு பல பிரிவினராய்ப் பல சிறு கூட்டத்தினராய் இந்நாவலந் தீவினுட் புகுந்த பண்டை ஆரியர் போரில் வென்றார் எனவும், அவர் தம்மால் துரத்தப்பட்ட தமிழ் மக்களே தென்னாட்டிற் புகுந்து குடியேறினார் எனவும் சிலர் கூறுகின்றனர். நாகரிக வாழ்க்கையிலும் எல்லா வலிமையிலும் மிக்கிருந்த பண்டைத் தமிழரை அந்நாகரிகமும், அவ்வலிமையும் இல்லாமல் ஒன்றிப் பிழைக்கவந்த ஆரியச் சிறு கூட்டத்தார் வென்றுவிட்டார் என்பது எங்ஙனம் பொருந்தும்? இஞ்ஞான்றும் நாகரிக வாழ்க்கையிலும், அதன் வாயிலாக வரும் எல்லா வலிமையிலும் சிறந்து விளங்கும் ஆங்கில நன்மைகளை அவையில்லாமற் காடுகளில் அலைந்து திரியும் காட்டுமிராண்டிச் சிறு கூட்டத்தார் வென்றுவிட்டார்களென்று எவரேனும் சொன்னால் அதனை நாம் நம்புதல் கூடுமோ? இந்நாவலந் தீவைப் பற்றிச் சிலர் எழுதியிருக்கும் வரலாற்று நூல்களில் ஆரியர் தமிழர்களை வென்று துரத்தினார்கள் என்று எழுதப்பட்டிருப்பதனாலேயே அஃது உண்மையாய் விடுமா? வரலாறு என்னும் பெயரை வைத்துக்கொண்டு எவர் எவ்வளவு பிழையான செய்திகளை எழுதினாலும்

அவற்றை எல்லாம் நம்புதல் வேண்டுமா? ஆரியர் தமிழரை வென்று துரத்தினர் என்பதற்குத் தக்க சான்றுகள் காட்டினாலன்றி அவை உண்மை வரலாற்று நிகழ்ச்சிகளென்று கொள்ளப்படலாமா? வடநாட்டின்கண் வந்து குடியேறிய ஆரியருள் எவரும் பண்டைக் காலந்தொட்டுப் பின்றைக்காலம் வரையும் அரசராயிருந்து செங்கோல் செலுத்தினவரல்லர். துவாரையை அரசாண்ட கண்ணபிரானும், அவனுதவியைப் பெற்ற பாண்டவர் ஐவரும், அவரால் வெல்லப்பட்ட துரியோதனன் முதலியவரும், அவ்விரு வகுப்பார்க்கும் துணைவந்த அரசர்களும், அயோத்தியை அரசாண்ட இராமனும், அவனால் வெல்லப்பட்ட இராவணனும், அஜாதசத்ரு, ஜனகன் முதலியவரும், விம்பிசாரன், அசோகன், சந்திரகுப்தன், விக்கிரமாதித்தன் முதலியோரும், தமிழ்நாட்டில் அரசாண்ட சேர சோழ பாண்டியரும், அவர் வழியில் வந்த அரசர் பல்லோரும் ஆரியப் பார்ப்பனர்க்கு முற்றும் மாறாய் நின்று க்ஷத்திரியர் எனப் பெயர்பெற்ற தமிழரேயாவர். ஒரு காலத்திற் பரசுராமன் உதவியைப் பெற்று இத் தமிழ் அரசர்களை வேரோடும் அழிக்க ஆரியர்கள் பெரிதும் முயன்று பார்த்தும் அஃது அவர்கட்குக் கைகூடவில்லை. அரச வகுப்பினனான இராமனாலேயே அப்பரசுராமன் வலியடக்கப்பட்டான். இங்ஙனம் தொன்றுதொட்டுத் தமிழரச வகுப்பினரே வடநாட்டினும் தென்றமிழ் நாட்டினும் எல்லாச் சிறப்புக்களினும் ஓங்கியிருந்தனராகலின், அவரை அண்டிப் பிழைக்கவந்த ஆரியச் சிறு கூட்டத்தார் அவரை வென்றாரெனலும், வென்று துரத்தினார் எனலும் யாங்ஙனம் பொருந்தும்?

**10.** இந்தியாவில் வந்து குடியேறிய ஆரியர்க்கு எழுதத் தெரியா தென்றும், அதனால் அவர்கள் தமக்குத் தெரிந்த உரைகளையும் பாட்டுக்களையும் நெட்டுருச் செய்து நினைவில் வைத்துக் கொண்டார்களென்றும், அதனால் அவர்களுடைய நூல்களுக்குக்

காதாற் கேட்கப்படுவது என்பதன் பொருளில் 'சுருதி' என்னும் பெயரும், நினைவில் வைக்கப்படுவது என்பதன் பொருளில் 'ஸ்மிருதி' என்னும் பெயரும் வழங்கி வந்தன வென்றும், அக்காலத்திலிருந்த தமிழர்கள் எழுத்தெழுதவும் கணக்குப் போடவும் வல்லவர்களாயிருந்தார்களென்றும், தமிழர்க்குப் பழைய நூலாகிய தொல்காப்பியத்தில் எழுத்துக்கள் எழுதும் முறைகள் சொல்லப்பட்டிருப்பதே அதற்குச் சான்றாகு மென்றும், ஆகவே, தமிழரே ஆரியர்க்கு எழுத்தெழுதும் முறையினையும், கணக்குப் போடும் முறையினையும் கற்பித்துக் கொடுத்தன ரென்றும் வரலாற்று ஆராய்ச்சி நூல்வல்லார் சொல்லுகின்றார்கள். இவையெல்லாம் உண்மைதாமா? மற்றை நாட்டவர்களெல்லாம் விலங்கினங்களைப் போல் இருந்த பண்டைநாளில் எழுதத் தெரிந்ததும் கணக்குப் போடத் தெரிந்ததும் நாகரிகமா? அவை யிரண்டும் தெரியாமல் தாம் நெட்டுருப் பண்ணிப்பண்ணி மறந்தும் பிறழ்ந்தும் போவது நாகரிகமா? இருக்கு வேதத்தி (மறையி) லுள்ள மந்திரங்களை (மறை மொழிகளை) இயற்றிய ஆரியர்கள் தமக்கு முன்னே வடநாட்டிலிருந்த ஏனை வகுப்பாரைக் குறித்துப் பேசுகையில் அவ்வேனை வகுப்பினர் கோட்டைகள் கட்டி நகர வாழ்க்கையில் வலிமைபெற்று வாழ்ந்தனரென்றும், தாம் அங்ஙனம் இல்லாமல் வறியராய் வலிவின்றி இருந்தன ரென்றும் கூறுகின்றார்கள். அஃது உண்மையாயின் நகர வாழ்க்கையுடையராய் உயர்ந்த கட்டிடங்களில் வலிமை பெற்று வாழ்வது நாகரிகமா? இருக்க இடமும் உண்ண உணவும் இன்றி ஊர் ஊராய்த் திரிந்தலைவது நாகரிகமா?

'சாந்தோக்கியம்,' 'பிருகதாரணியம்' முதலிய பழைய உபநிடதங்களில் ஆரியப் பார்ப்பனர் அஜாத சத்ரு முதலான ஏனை வகுப்பினர்க்குரிய அரசர்பாற் சென்று உயர்ந்த மெய்ப்பொருள்களைக் கேட்டுத் தெளிந்தா ரென்றும், அங்ஙனம் அவற்றை அவர்கட்கு

அவ்வரசர்கள் அறிவித்த பிறகு, "இம்மெய்ப் பொருள்களை ஆரியப் பிராமணர் எவரும் இதற்குமுன் அறியார். இவை எம்மவர்க்கே உரியனவா யிருந்தன; இவற்றை முதன்முதல் யாமே உமக்கு அறிவுறுத்தினேம்" என்று அவ்வரசர்கள் கூறினார்களென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன வென அறிவுடையோர் கூறுகின்றார்கள். அஃது உண்மையாயின், ஆரியர் பிறர்க்கு மெய்ப் பொருள்களை அறிவுறுத்தினார் களென்று கொள்வது யாங்ஙனம்? இவற்றிற்கெல்லாம் தக்க மெய்ச்சான்றுகளோடு தெளிவான விடைகள் அன்புகூர்ந்து விரைவில் எழுதும்படி அறிவுடை யோரைக் கேட்டுக் கொள்கின்றேன்.

---

## 10. பெண்மக்களின் அறிவும் ஆண்மையும்

"மக்கள் தாமே ஆறறிவு உயிரே"

—தொல்காப்பியனார்.

மக்களெனப்படுவார் ஆண்பாலரும் பெண் பாலரும் ஆவர். இவ்விரு வகுப்பாரையும் அறிவினால் ஒன்றுபடுத்தி மக்கள் என்னும் ஒரு பொதுப் பெயர் தந்தார் ஆசிரியர் தொல்காப்பியனார். நல்லது இது, தீயது இது என்று பகுத்துணரும் ஒரு சிறந்த உணர்வு அஃதாவது மன அறிவு ஆண் பெண் என்னும் இரு திறத்தார்க்கும் இயற்கையில் அமைந்து கிடக்கின்றது. இவ் அறிவு ஆண் பெண் என்னு மிருவர்க்கும் பொது வாகும். அறிவு எல்லார்க்கும் பொது என்பது விளங்குதற்காகத்,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு."

என்று திருவள்ளுவர் கூறியதில் மாந்தர் கற்கும் அள வுக்கு ஏற்ப அவர்க்கு அறிவு மிகும் என்பது பெறப்

படுமேயன்றி, அறிவு ஆண்மக்கட்கு மிகுந்துள தென்றேனும், பெண்மக்கட்குக் குறைந்துள தென்றேனும் ஒரு குறிப்பு அதிற் பெறப்படுமாறில்லை. இன்னும், அறிவிற் சிறந்த **ஔவையாரும்** 'தாங்கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு" என்று பொதுப்படக் கூறுகின்றார்.

'சமஸ்கிருத' நூல்களிலெல்லாம் பெண்மக்கள் மிகவும் தாழ்த்தப்பட் டிருக்கின்றார்கள். 'காசி காண்டம்' 'மனுஸ்மிருதி' முதலான நூல்களிற் பெண்மக்கள் விலங்கினும் கடைப்பட்டவர்களாய்க் கருதப் பட்டிருக்கின்றனர். இவர்கட்கென ஓர் உரிமையும் தரப்படவில்லை. ஆண் மக்கள் எப்படிப்பட்ட தீய இயல்புடையரா யிருப்பினும் அவர்தாம் உயர்ந்தவர், பெண்மக்கள் எவ்வளவு உயர்ந்தவரா யிருப்பினும் அவர்கள் அத்தீயவர்கட்கு அடிமைகளேயாவர் என்பது முறைதவறி எழுதப்பட்டிருக்கின்றது.

ஆனால், நம் பண்டைத் தனித்தமிழ் நூல்களிலோ ஒன்றிலேனும் பெண்பாலாரைக் குறைத்துக் கூறும் ஒரு சொல்லேனும் ஒரு சொற்றொடரேனும் மருந்துக்கும் அகப்படா. '**தொல்காப்பியம்**,' '**இறையனாரகப் பொருள்**,' '**திருச்சிற்றம்பலக் கோவையார்**,' முதலான ஒப்புயர்வற்ற நூல்களிற் பெண்மக்கள் தலைவியர் என வைத்துக் கூறப்படுதலும், பெண்மணிகளில் நுண்ணறிவுடைய புலவர் பலர் சொற்சுவை பொருட்சுவை நிறைத்துப் பாடிய பாக்கள் '**புறநானூறு**,' '**கலித்தொகை**' முதலான அரும்பெரு நூல்களில் கோக்கப் பட்டிருத்தலும், பயின்றறியா ஆண்பாலாரிற் பலரே, எழுநூறாண்டுகளாகச் சமஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்த்த தமிழ் நூல்களிலும், அவை தம்மைப் பின்பற்றி எழுதிய தமிழ் நூல்களிலும் பெண்மக்களைக் குறைத்துப் பேசும் முறை பிறழ்ந்த உரைகளையே கடைப்பிடியாகக் கொண்டு, தத்தமக்குத் தோன்றிய வாறெல்லாம் பெண்மக்களை மிக இழித்துப் பேசித், தமது இழிப்புரைக்குத் துணையாக,

" நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்தே "

என்று யாரோ கட்டிவிட்ட ஒரு விடுதிச் செய்யுளையும் எடுத்துக்காட்டித் திரிகின்றனர். இச்செய்யுளியற்றிய ஆண்மகனார், தம் செய்யுளின்கணுள்ள 'பேதைமை' என்ற சொல்லிற்குப் பொருள் அறியாமை என்று கொண்டார். மற்று **ஆசிரியர் நக்கீரனாரோ** பேதைமை என்பது "கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை" என்று 'இறையனா ரகப்பொருள்' உரையில் எழுதியிருக்கின்றார். பேதைமை என்று சொல்லப்படுவது சான்றோரால் அறிவுறுத்தப்பட்ட அரும் பெரும் பொருள்களைத் தம் உள்ளத்தே அடக்கி வைத்து அவை தம்மை அறியார் போன்று ஒழுகி, வேண்டும்போது வெளிப்படுத்தும் மகளிரின் இயற்கையாகும். தம் தாய் தந்தையர், கணவர், பிள்ளைகள், உடன்பிறந்தார், சுற்றத்தார் என்னும் இவர்கள் திருத்தமான வழியில் ஒழுகி அறிவுடையரா யிருக்கும் போது மகளிர் தம் அறிவை வெளிக்காட்டாமலும், அங்ஙனமின்றி அவர்கள் பிசகி நடக்கும்போது தம் அறிவை வெளிக்காட்டியும் அவர்களுக்கு நல்லறிவு புகட்டுவர். ஆதலாற் பேதைமை என்பது அறியாமை யாதல் எங்ஙனம்? "பேதைமை என்பது மாதர்க் கணிகலம்" என்ற **ஔவையார்** திருமொழியின் நுட்பமும் உற்று நோக்கற்பாலதாகும். அணிகலன்கள் மகளிரால் எந்நேரமும் அணியத்தக்கன அல்ல; பொதுவான நாட்களில் கழற்றிவைத்துச் சிறப்பு நாட்களிலேயே அவை அணியத்தகுவனவாம். அதுபோல், 'பேதைமை' என்னும் தன்மையும் மகளிரால் வேண்டும்போது கைக்கொள்ளத் தக்கதொன்றாம்.

இனி, முற்காலத்திற் பெண் மக்களெல்லாரும் கல்வி அறிவின்றி விலங்குகளைப் போலிருந்தார்கள்; இப்போதுதான் ஒரு சிலர் கல்வி கற்கின்றார்களென்று பழையகால உண்மையறியாதார் பலர் ஆங்காங்குப் பேசுகின்றனர். இதனை ஒரு சிறிது ஆராய்வாம். முற்

காலத்திருந்த பெண்மக்கள் கல்வியறிவின் மிக்கவராகவே இருந்தார்கள். பண்டைக்காலத்திற்கும் இக்காலத்திற்கும் நடுப்பட்ட காலத்தில் தமிழ் அரசு மாறுபட்டபோதுதான் பெண்பாலாரது கல்வி சுருங்கியது. அப்போது துருக்கர் வந்து தமிழ்நாட்டைக் கைப்பற்றத் துவங்கிச், சண்டையிட்டதனுல் தமிழ் நாடும் தமிழர்களும் பெரிதும் அலேப்புண்டு தம் உரிமையெல்லாம் முற்றும் இழந்தனர். சிறந்த பண்டைத் தமிழ் நாகரிகமும் பையப்பையக் குறைந்தொழிந்தது. "மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவலின்றித் தங்கா" என்று **இளங்கோவடிகள்** கூறியதற் கிணங்க நந்தமிழ்ப் பெண் மக்களெல்லாரும் தத்தம் வீடுகளாகிய சிறைச்சாலேகளில் அடைக்கப்பட்டு அறியாமைக்கு ஒரு புகலிடமாகிக் கல்வியறிவின்றி யிருந்தனர். ஐயகோ! அக்காலந்தொட்டு ஆண்பாலார்க்கு இவர்கள் அடிமைகளானதுமன்றி அவர்கள் கொடுமைக்கும் ஆளாயினுர்கள்! ஆனுல், இக்காலத்திலோ ஆங்கில அரசின்கீழ் வாழும் மாதர்கள் பண்டைத் தமிழ்ப் பெண் மக்களேப்போற் கல்வி நலம் பெறுதற்கு இடம் வாய்த்திருக்கின்றது.

இக்காலத்தோடு ஒப்பவே, இரண்டாயிர ஆண்டுகளுக்கு முன்னே கல்வியிற் றேர்ந்த பெண்மக்கள் அறுபத்தைந்து பெயர்களின் தீஞ்சுவைத் தனிப் பாடல்கள் பழைய தனித்தமிழ் நூல்களிற் காணப் படுகின்றன. அவ்வறிவுடைய பெண்மணிகளில் ஒரு சிலரைக் குறிப்பிட என் மனம் விழைகின்றது. **ஒல்லேயூர் தந்த பூதப்பாண்டியன்** என்னும் ஓர் அரசர் பெருமான் பாண்டி நாட்டை மிக்க திறமையோடு அரசாண்டு வந்தான். இப்பூதப்பாண்டியன் பெரும் புலவனும் ஆண்மையிற் சிறந்தவனுமாவான் என்பது **'அகநானூற்றிலும்' 'புறநானூற்றிலும்'** இவன் செய்த அகவற் பாக்களால் நன்கு விளங்கும். இத்தகைய பாண்டியனுடைய மனேவியாகிய **பெருந்தேவியோ** தன் கணவனேப் போலவே புலமை மிக்கவளும் அறிவிற்

சிறந்தவளுமாவள். தன்னேடொத்த கல்விப் புலமையுடைய தன் இன்னுயிர்த் துணைவியாகிய இப்பெருந்தேவியிடத்து அரசன் எவ்வளவு அன்புடையனுயிருத்தல் வேண்டும்! இவ்விருவர் தம் ஒத்த அன்பையும் புலமையையும் இன்பவாழ்க்கையையும் கூற்றுவன் காணப்பொருனுய்ப் பாண்டியன் உயிரைக் கொள்ளை கொண்டேகினன்; அது கண்டு அரசன்மாட்டுப் பேரன்புவைத்த பெருந்தேவி கொண்ட கொடுந்துயரம் கரைகடந்து செல்வதாயிற்று! பாண்டியனது புகழ் பெற்ற உடம்பானது பெருஞ் சிறப்போடு இடுகாட்டில் வைக்கப்பட்டுத் தீப்பற்றி எரியும்போது, உடன்வந்த பெருந்தேவி தன் ஆருயிர்க் காதலனேடு தீப்பாய்ந்து இறத்தலே தனக்குப் பேரின்பம் தருவதாம் என்று நினைத்துத் தீப்புகுதற்கு எரியை நோக்கி முன்சென்ற போது, அவள் நண்பராகிய 'மதுரைப் பேராலவாயர்' முதலான சான்றேர்கள் அவளைத் தீப்புகாவாறு பன்முறை வேண்டித் தடுத்தனர். அதுகண்டு அத்தேவி அச் சான்றேர்களை நோக்கிப்,

" பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும் "

என்ற அகவற்பாவைத் திடீரெனப் பாடித் தீப் பாய்ந்தனள். நாம் பல ஆண்டுகள் முயன்று கற்றுத்தேர்ந்த பிறகுதான் செய்யுட்கள் இயற்றல் இயலும். பெருந்தேவியோ தான் நினைத்தபோது உடனே செய்யுளியற்றும் ஆற்றல் வரப் பெற்றிருந்தமையின், இவள் பெரிதும் கல்வியிற் றேர்ந்து செய்யுள் அமைப்பதில் நன்கு பழகினவள் என்பது தானே விளங்கும். இவ்வரசி தான் பெருஞ் செல்வ வாழ்க்கையில் அமர்ந்திருந்தபோதும் சோம்பலுருது வருந்திப் பல நூல்களைக் கற்றுத் தான் நினைத்தபோதெல்லாம் செய்யுளியற்றத்தக்க அறிவுடையளா யிருந்தனள்.

இன்னும் ஒன்று இங்கே நுணுகி உன்னிக்கற்பாலது. முற்காலத்திற், கணவன் இறந்தால், அவன்

உடல் சுடுகாட்டில் எரியும்போது, அவன் சுற்றத்தாரெல்லாம் வலிந்து கொண்டுபோய் அவன் மனைவியையும் உயிருடன் அவனோடு சேர்த்து எரிப்பது நம் நாட்டில் வழக்கமா யிருந்ததென்றும், அத்தீயவழக்கத்தினை அறிவும் இரக்கமும் மிக்க ஓர் ஐரோப்பியர் நிறுத்தினா ரென்றும் பலர் கூறுகின்றார்கள்.

அக்காலத்திற் கணவனுடன் மனைவியை வைத்தெரிப்பது உண்மையாயின், பெருந்தேவி தன் கணவனோடு தீப்புக முற்சென்றபோது, மதுரைப் பேராலவாயார் முதலான சான்றோர்கள் அவளைத் தீப்புகாவாறு வேண்டித் தடுப்பார்களா? மேலும் கணவன்பாற் பேரன்புகொண்ட பெண் மக்கள் சிலர் உலக வாழ்வை விரைவில் நீத்தல் வேண்டிக் கைக்கொள்ளும் 'கைம்மை நோன்பை'ப் பற்றிப் "பல்சான்றீரே பல்சான்றீரே" என்ற பாவில் அத்தேவி தெளிவாகப் பாடியிருக்கின்றாள். ஆகலின், பழைய காலத்திற் கணவனோடு மனைவியை வைத்து எரிக்கும் வழக்கம் இத்தென்றமிழ்நாட்டில் இருந்ததில்லை என்பது அவள் பாடிய பாட்டால் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கா நிற்கும். ஆயினும், இக்கொடிய வழக்கம் ஆரியப் பார்ப்பனர் மலிந்த வடநாட்டில் மட்டுமே இருந்தது உண்மைதான். வடநாட்டுப் பார்ப்பனர் கணவனை யிழந்த மனைவியை அவனது சவத்தோடு உடன்வைத்துக் கட்டி உயிரோடு எரிக்கும் இரக்கமில்லாக் கொடுஞ் செயலைத் தென்றமிழ் நாட்டார் சிறிதும் பின்பற்றவில்லை யென்பதே கருத்திற் பதிக்கற்பாலது.

இனிப் பெண்மக்களின் அறிவு அவர்க்கு இயற்கையேயுள்ள நாணத்தால் ஆடவர் முன்னிலையில் வெளியே புலப்படத்தோன்றாதாயினும்,காலம் வாய்த்தவிடத்து அஃது எவ்வகையிலும் நுணுகிச் செல்லும் இயல்புடையது. 'பெண்மை' என்னும் சொல்லிற்கும் பொருள் "கட்புலனாயதோர் அமைதித்தன்மை" என்றார் உரையாசிரியர் **நச்சினார்க்கினியர்**. விருப்பம்

என்னும் பொருளுடைய 'பெட்பு' என்னும் சொல்லடியாகப் பிறந்ததே 'பெண்மை' என்பதாகும். அறிவு என்னும் தன்மை அமைதியாயிருக்கும் உள்ளத்திலிருந்து வெளிப்புலப்பட்டு உலகில் பல நன்மைகளைக் கண்டறிவது. அறிவு தங்குமிடம் அமைதியான உள்ளமாதலின், அவ்வறிவையே அமைதியின் வடிவாம் 'கலைமகள்' என்னும் தெய்வப் பெண்மணியாக உருவகப்படுத்தினார்கள். இதனால் பெண்மக்கள் தாம் அறிவுக்கு இருப்பிடமானவர்கள் என்பது விளங்கவில்லையா? கலைமகளே ஆண்மக்களெல்லார்க்கும் கல்வி அறிவு தருகின்றனள்.

இன்னும் மிவர்கட்குப் பொருட் செல்வத்தை ஈகின்றவளும் திருமகளேயன்றோ? "தாயொடு சென்று பின் தாதையைக் கூடி" என்று முற்றத் துறந்த **பட்டினத்தடிகள்** கூறியதற்கேற்ப ஆண்மக்கட்கு அருட் செல்வத்தை ஈகின்றவளும் எம் அம்மையேயல்லளோ?

இனிப் பெண்மக்களும் ஆண்மையின் மிக்கவராதலைப் பழைய சான்றுகள் கொண்டே விளக்கிக் காட்டுவாம்.

> "பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
> உருவு நிறுத்த காமவாயி
> னிறையே அருளே உணர்வொடு திருவென
> முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

என்று **ஆசிரியர் தொல்காப்பியனார்** கூறியதனால், ஆண்மைத் தன்மையும் ஆண்பெண் என்னும் இருபாலார்க்கும் உரியதென்பது பெறப்படும். இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னரே, ஆண்மை மிக்க ஒரு தாயானவள், தன் மகன் போர்க்களத்து வெற்றி பெறாது புறங் காட்டி ஓடினான் என்பது கேட்டு மிகவும் மனம்நொந்தவளாய்ப் படுகளத்தில் என் மகன் இறந்துகிடத்தலைக் காணேனாயின், இன்றே அவன் பாலுண்ட என் முலையை அறுத்தெறிவேன் என்று கூறிக் கையில் வாளேந்தியவளாய்ப் போர்க்களஞ் சென்று, குருதி

வெள்ளத்திற் படிந்துகிடந்த பிணங்களைத் தன் வாளாற் பெயர்த்துப் பார்க்கையில், தன் மகன் வேறு வேறாகிச் சிதைந்து இறந்து கிடத்தலைக் கண்டு அவள் அவனைப் பெற்ற காலத்து அடைந்த மகிழ்ச்சியைவிடப் பன்மடங்கு மிக்க மகிழ்ச்சியை எய்தினள். இந் நிகழ்ச்சியைக் கண்டு வியந்து, '**புறநானூற்றில்**' **காக்கை பாடினியார்** என்னும் புலமை மிக்க பெண்மணியார்,

"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படை யழிந்து மாறினனென்று பலர்கூற
மண்டமர்க் குடைந்த னாயின் உண்ட என்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே,"

என்று வியந்து பாடினர்.

இன்னும், ஆண்மை மிக்க தாய் ஒருத்தி போர்க் களத்தில் தன் கொழுநன் நேற்று மாய்ந்தனன்; மறு நாளே தான் மீண்டும் செருப்பறை கேட்டுத் தன் ஒரே மகனை அழைத்து எண்ணெயிட்டு அவன் குடுமியை வாரி, அவன் கையில் வேலை எடுத்துக் கொடுத்துச் செருமுகம் நோக்கிச் செல்க என்று அவனை வழி அனுப்பினள். இந்நிகழ்ச்சியைக் கண்டு வியந்தும் இரங்கியும் **ஒக்கூர் மாசாத்தியார்** என்னும் பெண்மணி யார் '**புறநானூற்றில்**,'

" கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கிவள் கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டுப் பட்டனனே

இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே,"

என்று பாடினர்.

ஆ! அக்காலத்துத் தமிழ்ப் பெண்மக்களின் கல்வித் திறத்தினையும் ஆண்மையினையும் உற்று நோக்கிப் பயில்கையில் அவர்கட்கும் இக்காலத்துப் பெண்மக்கட்கும் உள்ள வேற்றுமை மலைக்கும் கடுகுக்கும் உள்ள வேற்றுமையை ஒத்தல் புலனும். ஆகையாற், பெண் மக்களைப் பொதுவாய் அறிவற்றவர்கள் ஆண்மையற்றவர்கள் என்று கூறி யிகழ்வாருரை பொருந்தாமை கண்டுகொள்க.

---

## 11. உயிர்போன உடம்பை என்செய்வது?

இறந்தவர்களின் உடம்பைப் புதைப்பது நன்றென்றும், தீயில் எரிப்பது நன்ருகா தென்றும் ஒருவர் நம் அருமைத் 'திராவிடன்' இதழில் எழுதியது பாராட்டத்தக்கதே. ஆயினும், நாம் ஒரு கொள்கையை மேற்கொண்டு பேசப்புகுந்தால் அக்கொள்கை மற்றவைகளோடு பொருந்தும் பொருந்தாது என்று விளக்க வேண்டுமே யல்லாமற் பிறர் கொள்கைகளை யேனும் அக்கொள்கைகளையுடைய பிறரையேனும் வைதல் முறையன்று. நாம் ஒரு கொள்கையை மற்றக் கொள்கையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது பல வசைமொழிகளைக் கூற நேர்ந்திடினும் அவைகளை நம்மாலியன்றவளவு விலக்கி எழுதுதலே முறையாகும். அங்ஙனம் எழுதுவதையே எல்லாரும் மனமகிழ்வோடு கற்பர். நம் நாடும் அதனுல் வரவர மேனிலையை யடையும். உடம்பை அடக்கஞ் செய்யும் முறைகளுள்

எது சிறந்ததென்பதைப் பற்றி என் சிற்றறிவிற்பட்ட வற்றைக் கூறப் புகுகின்றேன். உயிர் நீங்கிய உடலைத் தீயில் வைத்தெரிப்பது நன்ரு? மண்ணிற் புதைப்பது நன்ருவென்று ஆராய்ந்தால், தீயிலெரிக்கும் முறையையும் மண்ணிற் புதைக்கும் முறையையும் ஒழுங்காகத் தீமையுண்டாகாதபடி செய்தால் இரண்டும் நன்மையாகவே முடியும்.

மண்ணிற் புதைப்பதைப் பற்றிச் சிறிதாராய்வாம். நாம் ஓர் உயிரினிடத்து வைத்த பற்றிஞல் அவ்வுயிர்க்கு இருப்பிடமான உடலைச் சிறப்பாக அடக்கஞ் செய்ய வேண்டியது கட்டாயமே. ஆனுல் நினைப்பு மட்டும் அங்ஙனங்கொண்டு, முடிவில் ஒரு சிறப்புமில்லாமற் புழு நெளிந்து அழுகி மண்ணின்கீழ்க் கிடக்கப் புதைத்துவிட்டு வரலாமோ? மேலும் அவ்வழுகிய உடலிலிருக்கின்ற நச்சு நீர் மண்ணிலும் அதிலுள்ள தண்ணீரிலுங் கலந்து கிணறுகளிலும் ஊற்றுகளிலும் வந்து சேர்தலின் அந்நச்சு நீரைப் பருகும் மக்கள் பலவகை நோய்களுக்கு இரையாகின்ருர்கள். நாம் உள்ளபடியே உயிரினிடத்துப் பற்றுடையவர்களாயின், மற்றவுயிர்கட்கும் தீங்கு விளையாதவாறு உடம்பைச் செவ்வையாக அடக்கஞ் செய்யும் வழியைத் தெரிந்துகொள்ளல் வேண்டுமன்ரே? பண்டைநாளிற் செவ்வையாக அடக்கஞ் செய்த சில நாட்டினரை ஈண்டுக் குறிப்பிடுகின்றேன். பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன்னே எகுபதி[1] நாட்டிலிருந்தவர்கள் உயிரினிடத்து வைத்த பற்றிஞல், இறந்தவர்களுடம்பைக் கல்லாற் செய்த பெட்டிகளுள் வைத்து, அவ்வுடம்புகள் கெடாவாறு நறுமணப் பொருள்களையும் உடன்சேர்த்துப் பின்னர் அவற்றை மண்ணிற் புதைத்தார்கள். அங்ஙனம் அவர்கள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே கற்பெட்டிகளில் வைத்து மண்ணிற் புதைத்த இறந்தவர்களுடம்பும் அவ்வுடம்பின்மேல் அணிவித்த மெல்லிய ஆடைகளும்

[1] Egypt.

சிறிதுங் கெடாமல் இருந்ததைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் ஆங்கில நன்மக்கள் கண்டுபிடித்திருக்கின்றார்கள். அங்ஙனம் அவர்கள் புதைத்த கல்லறைகளின் மேலும் பிறமிட்ஸ்[1] என்று சொல்லப்படும் மிக உயர்ந்த கொடுமுடிகளும் கட்டி வழிபாடும் செய்து வந்தார்கள். சாலடியர்களும்[2] பெரிய பெரிய தாழிகள் அல்லது சால்களில் இறந்தவர் உடம்புகளை வைத்துப் புதைத்த கல்லறைகளின்மேற் பெரிய கோயில்கள் கட்டியிருக்கின்றார்கள். நம் முன்னோராகிய தமிழரும் இவ்வாறே தாழிகளில் வைத்துப் புதைத்த கல்லறைகளின்மேல் திருக்கோயில்கள் கட்டியிருக்கின்றார்கள். இக்காலத்தும் நம் நாடுகளில் அவ்வழக்கம் அருமையாகக் கையாளப்பட்டு வருகின்றது. இறந்துபோன உடம்பைச் சால்களில் வைத்துச் செவ்வையாய் மூடிப் புதைப்பதால் அவ்வுடம்பு கெட்டுப்போனாலும் அதன் நச்சு நீர் மண்ணிற் கலவாது; அது கலவாமையால், கிணற்று நீர், ஊற்றுநீரை அருந்துவோர்க்கு நோய்கள் அணுகா.

இனிப் பிணங்களைத் தீயிலெரிப்பதைப்பற்றிச் சிறிதாராய்வாம். பிணங்களை எரிப்பதால் உடம்புக்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு முழுதும் அற்றுவிடுகின்றதென்றும், தானிருந்த உடம்பு தீயிலெரிக்கப்பட்டுச் சாம்பராய் மறைந்தபின் அவ்வுடம்பிலிருந்த உயிர் உலகப்பற்று முழுதும் நீங்கிச் செல்கின்றதென்றும், புதைப்பதால், உயிர், தன் உடம்பு இருக்குமிடத்தை அடிக்கடி நாடி வந்து துன்புறுகின்றதென்றும் ஆராய்ச்சி நூல்வல்லார் கூறுகின்றனர். அழுக்கு நிறைந்த பொருள்களைத் தீயிலிட்டால் தீ அவற்றை எரித்துத் தூய்தாக்குதல்போல், நச்சுநீர் நிறைந்த பிணங்களையும் தீயிலெரித்தால் அந்நஞ்செல்லாம் ஆவியாக மாறிப்போகச் சுற்றியுள்ள காற்றுத் துப்புரவாய்விடும். ஆனாற், பிணங்களை யெரிக்கச் செலவு மிகுதி ஆகின்றதென்றும், புதைக்கச் செலவு குறை

[1] Pyramids. [2] Chaldeans.

கின்ற தென்றும் சிலர் கூறுகின்றனர். எரிப்பதற்குச் செலவழியும் பத்துப் பதினைந்து ரூபாய்க்காகப், பிணங்களை மண்ணில் வறிதே அடக்கஞ் செய்து விட்டால், பின் அவைகள் அழுகி அவற்றினின்று முண்டாகும் நச்சுநீர் மண்ணிலும் கிணறுகளிலும் ஆறுகளிலும் கலந்து பலவகையான நோய்களை உலகிற் பரப்புமல்லவோ? மேலும், சால்களில் வைத்துச் செவ்வையாக அடக்கஞ் செய்வதானாலும் அதற்குப் பணம் வேண்டுமன்றோ? ஏழைகட்குப் பிணங்களை யெரிக்கப் பணமில்லாவிட்டாலும் ஊரிலுள்ளோர் களிடம் இரந்து பெற்று அதனை எளிதாக நடத்தலாம். இன்னும், மழை பெய்யும்போது பிணங்கள் பாதி வெந்ததும் வேகாததுமாய் உருண்டு கீழே விழுகின்றன வென்றும், அங்குக் காவல் காப்போரும் ஒதுங்க இடமின்றி அவ்விடத்தினின்றும் ஓடி விடுகின்றார்க ளென்றும் கூறுகின்றனர். நாகபட்டினஞ் சுடுகாட்டில் உள்ளவாறுபோல், மழைகாலத்தில் வரும் பிணங்களை மழையில் நனையாமல் எரிக்கக் கட்டிடங்களை ஒவ்வொரு நாட்டிலுமுள்ளோர் பணந் திரட்டி ஏன் கட்டுதல் கூடாது? முற்காலத்திருந்த எகுபதி நாட்டாரும், சாலடியரும், பழந்தமிழரும் எவ்வளவோ முயன்று பத்தாயிரம் ஆண்டுகள் வரைக்கும் இறந்து போனவர்கள் உடம்பு கெடாதவாறு வைத்திருக்கும் வழிவகைகள் கண்டுபிடித்திருக்கப், பிணங்கள் எரியும் போது நனையாதபடியும் உருண்டு விழாதபடியும் ஒரு கட்டிடம் அமைத்தல் இயலாதா! சுடுகாட்டிற் பிணங்களை யெரிப்பதால் அண்மையி லிருக்கின்ற வீடு களில் உள்ளார்க்கு முடைநாற்றம் வீசுகின்றதென்று சிலர் கூறுகின்றனர். சுடுகாடுகள் ஊர்க்குப் புறம்பே தொலைவில் இருத்தலை உள்ளபடி ஆராய்ந்து காண் பராயின், அங்ஙனந் தடைகூறார். பிணங்களைச் சால் களிலுங் கற்பெட்டிகளிலும் வைத்துக் கட்டிடங்கள் கட்டியமைப்பதற்குப் பெருந் தொகை வேண்டி யிருத்தலினாலும், அங்ஙனஞ் செய்யாமல் வறிதே

பிணங்களை மண்ணிற் புதைத்தலால் அவை யழுகி அவற்றிலுண்டாகும் நச்சுநீர் கிணற்றுநீர் ஊற்றுநீர் களிற் கலந்து பலவகை நோய்களை வருவித்தலினாலும், உடம்பு உள்ளவரையில் அவ்வுடம்பிலிருந்து நீங்கிய உயிர்க்கு அதனிடத்துள்ள பற்று நீங்காமையினாலும் பிணங்களைப் புதைக்கும் வழக்கம் விடுபட்டு அவற்றை எரித்துச் சாம்பராக்கித் தூய்தாக்கும் வழக்கம் பரவி வரலாயிற்று. பிணங்களை எரிப்பதிற் பல சில துன்பங்கள் உண்டாகின்றனவே யென்றால், அத் துன்பங்களை நீக்குதல் எளிதேயாதலால், அதனைச் செய்யாமல், அவற்றுக்காகப் பிணங்களை வறிதே மண்ணிற் புதைக்க வேண்டுமென்றல் மேலும் பல பெருந் தீங்குகளுக்கு இடமாம் என்பதை மேலே விளக்கிக் காட்டினேன். ஆதலால், ஆங்கில நன்மக்கள் மின்னல் நெருப்பைக் கொண்டு பிணங்களை ஓர் இமைப்பொழுதில் எரித்துச் சாம்பராக்குதலைப் பார்த் திருந்தும், சிறியதொரு முயற்சி செய்வதிலும் சோம்ப லுற்று, 'அஃது ஆகாது, இஃது ஆகாது' என்று வாளா வாயினாற் சொல்லிக்கொண்டிருத்தல் நம் மனோர்க்கு நன்றாமோ? எனவே, இக்காலத்திற்கு ஏற்பப் பிணங்களைச் செவ்வையாக எரித்து விடுவதே நன்றென்பது எனது கருத்து.

---

ஓர் உடலிலுள்ள உயிர், கிழிந்த சட்டையாகிய அவ்வுடலை விடுவதற்குமுன் புதிய சட்டையாகிய வேறோர் உடலைத் தேடிக் கொள்கின்றதென்று ஒருவர் நம் அருமைத் திராவிடனில் எழுதி யிருந்தார். ஓர் உடலிலுள்ள உயிர், அவ்வுடலை விட்டு நீங்கிய பின் னரன்றோ பிறிதோர் உடம்பிற்குச் செல்லும்? ஓர் உடலில் ஓர் உயிர் தங்கியிருக்கும்போது அவ்வுடல் எங்ஙனம் கிழிந்த சட்டையாகும்? நாம் தைத்த ஓர் அழகிய துணிச் சட்டை கிழிந்து போனாலுங்கூட அதனைப் பன்முறையும் தைத்துப் போட விரும்பு கின்றோம். பிறகு, அச்சட்டை நாம் மறுபடியும் காண முடியாதவாறு பிறர்க்கோ அல்லது குப்பையிலோ

சென்றால், அப்பழைய சட்டையைப் பற்றிய நினைப்பும் நம்மைவிட்டு மாறிவிடும். இதைப்போலவே, உயிரின் சட்டையாகிய உடம்பு தீயிலெரிக்கப்பட்டுக் கண்ணுக்கு மறைந்துவிடுமாயின், அவ்வுயிர், தானிருந்த உடம்பைக் காண முடியாதாகலின், அஃது எரிந்த இடத்திற்கு வராது என்பது திண்ணம். முற்றுந் துறந்த துறவிகள் மட்டுமே பற்றற்றுத் தம்முடம்பை இலவுலகிற் போட்டுப் போவரேயல்லாமல், மற்றையோர் பற்றற்று இவ்வுடலை இவ்வுலகில் விட்டுச் செல்வாரல்லர்.

அதனாற், பற்றுடையவர்கள் உடம்பைப் புதைத்து வைத்தால் அவ்வுடம்பிலுள்ள பற்றினால் ஆவியாய் நிற்கும் அவர்கள் தமது உடம்பை அணுகி வந்து அலைவர். துறவிகள் தம்முடம்பிலும் பற்று அற்றுச் செல்லுதலால், அவர்கள் அதன்பொருட்டுத் திரும்பி வரார் என்பதனை உணர்ந்தே அவர்களுடம்பை மட்டும் எரித்துவிடாமல் புதைக்கும் வழக்கம் நம் நாட்டின்கண் உளது. மற்றையோர், தமது உடம்பு எவ்வளவு புழுத்து அழிவதாயினும் அதனைவிட்டு நீங்க மாட்டாமல் வருந்துவர்; இதுபற்றியே,

“ புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.”

என்று குமரகுருபர அடிகள் கூறியிருக்கின்றார்.

“ அழுக்கு நிறைந்த பொருள்களைத் தீயிலிட்டால், தீ அவற்றை எரித்துத் தூய்மையாக்குதல்போல், நச்சு நீர் நிறைந்த பிணங்களையும் தீயிலெரித்தால் அந் நஞ்செல்லாம் ஆவியாக மாறிப்போகச் சுற்றியுள்ள காற்றுத் துப்புரவாய்விடும்” என்று யான் எழுதிய இத்தொடர்களில், நச்சு நீர் காற்றாக மாறிப் போகச் சுற்றியுள்ள வெளி துப்புரவாய்விடும் என்று கூறி

னேனேயொழிய அதனுல் உயிர் துப்புரவாய் விடு மென்று கூறவில்லே. ஆனல், மேற்கூறியவர், உடலே எரிப்பதால் உயிர் தூய்மையாகி விடுமென்று யான் எழுதியதாகக் கூறுவது முற்றும் பிழை.

இன்னும், ஆங்கில நன்மக்கள் கைக்கொள்ளும் கொள்கைகளெல்லாம் மாசற்ற கொள்கைகள்தாமா வெனக் கேட்கின்ருர். அங்ஙனம் யான் கூறவில்லே.

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

" எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "

என்ற தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனர் திரு மொழிக்கிணங்க, எவர் எக்கொள்கைகளே யுடையவரா யிருப்பினும், அவர் கூறுவனவற்றிலுள்ள உண்மை கள் பொருந்துவனவாயின், அவைகளே நாம் எடுத்து வழங்குதல் நன்மையே பயக்குமல்லது தீமை பயவாது. ஆங்கில நன்மக்கள் அறிவிஞற் கண்டுபிடித்த தபால், தந்தி, நீராவி வண்டி, அச்சியந்திரம் (அச்சுப்பொறி) முதலியவைகளே நாம் கைப்பற்றிப் பிழைக்கவில்லேயா?

---

## 12. இறந்தோர் வீட்டிற்குச் செல்பவர்களும் அவ்வீட்டினரும்

ஒரு குடும்பத்தில் ஒருவர் இறந்தால், அக் குடும்பத்திலுள்ளார் தாமே தம் துன்பத்தை ஆற்றிக் கொள்ளல் முடியாது. தம் துன்பத்தை ஆற்றுவித்தற் பொருட்டே தம் சுற்றத்தாரையும் பிறரையும் தம் வீட்டுக்கு வரவழைக்கின்றனர். அங்ஙனம் துன்புறு வோரை ஆற்றப் போகின்றவர்களும் அத்துன்பக் குறிகளேக் காட்டத்தக்க விலே குறைந்த ஆடைகளே அணிந்துகொண்டு செல்லல் வேண்டும். நாம் பிறரை

மகிழ்வித்தற் பொருட்டும், அல்லது நம்மை மகிழ் வித்தற் பொருட்டுமே உயர்ந்த ஆடை அணிகலன்களை வழக்கமாக அணிந்து கொள்கின்றோம். நம்மவர்களிற் பெண்பாலார் பலர் திருமண வீட்டுக்குச் செல்லும் போது செய்துகொள்ளும் ஒப்பனையைப்போல் இறந் தோர் வீட்டுக்கும் ஒப்பனை செய்துகொண்டு போகின் றார்கள். அங்ஙனம் அவர்கள் செய்து கொண்டு போவதைக் காண்போர், அவர்கள் திருமண வீட்டிற்குச் செல்கின்றார்களென்றே நினைக்கின்றார்கள். நாம் உயர்ந்த ஆடை அணிகலன்கள் அணிந்து கொண்டு போகும்போது நம் வீட்டில் யாது சிறப்பு என்று பிறர் கேட்கின்றார்களே ஒழிய நம் வீட்டில் யார் இறந்தார்களென்று கேட்கின்றார்களில்லை. இவ் வுலகை யாளும் அறிவின்மிக்க ஆங்கில நன்மக்களோ தமக்கு வேண்டியவர்களில் மிகவும் நோயாயிருப்பவர் களைக் காணச் செல்லும்போதும், உற்றாரைப் பறி கொடுத்துத் துன்புற்றோரை ஆற்றுதற்குப் போகும் போதும், தாமும் அவர்க்காகத் துன்புறுங் குறி காட்டத்தக்க விலை குறைந்த கருநிற ஆடையை அணிந்துகொண்டு செல்கின்றார்கள். தென்னாட்டி லுள்ளவர்களும் இறந்தார் வீடுகட்குப் போகும்போது ஒப்பனையின்றித் துன்பக் குறியோடு செல்கின்றனர்.

மேற்கூறிய நன்மக்கள் செய்யும் இவ்வுயர்ந்த நடைகளைப் பார்த்திருந்தும் இச்சென்னைமா நகரி லுள்ளாரிற் பெரும்பாலார் இறந்தோர் வீடுகளுக்குச் செல்லுங்கால் ஒப்பனை செய்துகொண்டு போதலையே வழக்கமாய்ச் செய்கின்றார்கள். இங்ஙனம் இவர்கள் செய்யும் செய்கை அறிவுடையோரால் நகைக்கற் பாலதா யிருக்கின்றது. பணக்காரர் அல்லாதாருங்கூட இறந்தோர் வீடுகளுக்குப் போகும்போது பிறரிடஞ் சென்று ஏராளமான நகைகளை இரவல் வாங்கி அணிந்துகொண்டு செல்கின்றனர். கடன் வாங்கிய நகைகள் காணமற் போய்விடின், தாம் சிறிதளவாக வருந்தித் தொகுத்த பொருளையும் அக்காணமற்போன

நகைகட்கு ஈடாகக் கொடுத்து வறுமையில் தம் வாழ் நாளைக் கழிக்கின்றதையும் பார்க்கின்றோம் அல்லமோ? பெரும் பணக்காரர்கள் இறந்தோர் வீடுகளுக்குச் செல்லும்போது மிக உயர்ந்த ஆடை அணிகலன்களை அணிந்துகொண்டு செல்கின்றார்களாகலின், துன்பத்தி லிருப்பவர்கள் தமது துன்பத்தோடு அவர்களை வர வேற்கும்பொருட்டு அப்போது தாமும் தம்வீட்டிலிருக் கின்ற ஆடை அணிகலன்களை அணிந்துகொள்கின்றனர். பணமில்லா ஏழைகளும், ஏழைமையோடு நல்லவரா யிருப்பவரும், பணக்காரரா யிருந்தாலும் துன்பத்தில் உயர்ந்தவற்றை அணிய விருப்பமில்லாது செல்பவர் களும், பகட்டில்லாது உடுத்திக்கொண்டு இறந்தோர் வீட்டுக்குப்போனால் அவர்கள் எங்கிருக்கிறார்களென்று கூடப் பார்க்கின்றார்களில்லை யென அறிகின்றேன். துன்ப வீட்டிலுமோ வெளிப்பகட்டைக் கண்டு பாராட்ட வேண்டும்!

இறந்தோர் வீடுகளில் துன்புற்றாரை ஆற்றப் போகின்றோமென்று நினைப்புமட்டுங்கொண்டு முடிவில் தமது வீண் சிறப்பைக் காட்டுதற்கோ துன்ப வீட்டிற்குச் செல்லல் வேண்டும்! அங்ஙனம் செல்பவர் களது வீண் சிறப்பை அவ்விறந்தோர் வீட்டிலுள்ளார் கண்டு பெரிதும் மயங்கித் தமக்குப் பெருமை யுண்டாகும் பொருட்டு நல்ல சமையற்காரர்களை வர வழைத்து அரியபெரிய இனிய உணவுப் பண்டங்களை மிகுந்த பணம் செலவழித்துச் செய்து அவர்கள் நாச் சுவைக்கத் தின்றுபோகக் கொடுத்துப் பிறகு கடனுக் குள்ளாகித் தம் வாழ்நாள் முழுவதும் வறுமையிற் கழிக்கின்றனர். இறந்தோர் வீட்டிற் பகட்டாய்ச் செல்வோர்க்குச் செய்யும் வீண் சிறப்பைக் குறைத்து அவ்வீட்டிலுள்ளார் ஓர் ஏழைக்கேனும் உணவளிக் கிறார்களா? அதுவு மில்லையே! இங்ஙனம் வீணான பகட்டுக்கு வீணாகப் பொருட்செலவு செய்வோர் இறந்து போனவர்பால் தினையளவேனும் அன்புடைய ராவரோ? இறந்துபோனவரை நினைந்து அவர்க்கு

வருந்துவதோடு, அவர் கடவுளின் திருவடியைப் பெற்று மேலுலகத்தில் இன்புற்றிருக்க வேண்டுமென்று உண்மையாக நினைப்பவராயிருந்தால் வாடிய முகத்தோடு இறைவனை வேண்டி ஏழை யெளியவர்கள் பசியை யாற்றி, ஏதொரு பகட்டான நடக்கையும் இன்றி அமைதியாக இருப்பரன்றோ? எவர் சாவார், அவர் வீட்டுக்குச் சென்று நமது ஒப்பனையையும் அழகையும் காட்டுவோம், அங்கே நன்றாய் நாச் சுவைக்கத் தின்றுவருவோம் என்று காத்திருப்பவர்கள் இறந்தவர்பாலும் அவர்க்குரியவர்பாலும் இரக்கமும் அன்பும் உடையராவரோ?

இனி, இறந்தோர் வீட்டிலுள்ளவர்கள் பிணங்களைச் சிறப்பாக அடக்கஞ் செய்ய வேண்டுமென்று நினைந்து இருநூறு ரூபாய் முந்நூறு ரூபாய் செலவழித்து அழகிய பல்லக்குகளில் ஏற்றியும் அப்பிணங்களின்மேல் இட்டு எரித்தற்கேனும் புதைத்தற்கேனும் மிக உயர்ந்த பட்டாடைகளை வாங்கி அணிவித்தும் எடுத்துக் கொண்டுபோய் அவ்வுடம்பும் ஆடைகளும் மண்ணின்கீழ்க் கிடக்கும்படியோ தீயில் எரியும்படியோ விட்டுவிட்டு வருகின்றார்கள். இவர்கள் இங்ஙனமே வீணே செலவழிக்கும் பணங்களை ஏழை எளியவர்கட்கும், தாங் கற்ற கல்வியை உலகத்திற்குப் பயன்படுத்துங் கற்றவர்கட்கும் செலவு செய்தால் எத்துணை நன்மை உண்டாம்! அஃது எவ்வளவு புகழை யுண்டாக்கும்! எவ்வளவு நல்வினையைத் தரும்! பிணங்களுக்கு வீண் சிறப்புகளைச் செய்வது சிறிதும் பயன்படா தென்பது பற்றியே,

> "நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்
> பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
> தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
> கூத்தன் புறப்பட்டக் கால்"

என்று **நாலடியாரினும்** அருளிச்செய்தார். உயிர் துறந்தவர் நற்பிறவிகளிற் செல்லும்படி கடவுளை

வேண்டி ஏழை எளியவர்கள் மனங்குளிர்ந்து களிகூர அவர்கள் பசியாற உணவு கொடுத்து நல்வினையைத் தேடுதலே முறையாகும். இங்ஙனம் ஏராளமாகச் செலவழித்து வறுமையில் துன்புறுகின்ற அவர்களை நோக்கி நீங்கள் ஏன் ஏழையாகிவிட்டீர்கள் என்றால் அதற்கவர்கள்,

"அம்மா, எங்க புருசென் வைக்கலாக இருந்தாரு, அவர் இருந்தப்ப நெனைச்சா ஒரு நகை, நெனைச்சா ஒரு பொடவை கட்டினே. செத்தவங்க வூட்டுக்குப் போனாக்கூட நான் 80, 100 ரூபா சேலை கட்டிக்கிட்டு போரது. இப்போ அவரு செத்துப்பூட்டாரு. அவர் என்னெ பச்சமா வைச்சிருந்தாரேண்ணு அவரெ தூக்கிட்டு போறதற்கு 200 ரூபா பூ பல்லக்குச் செய்யச் சொன்னேன். அவர் மேலே 100 ரூபா துப்டா வாங்கிப் போட்டேன். அவர் கருமாதிக்கு 500 ரூபா செலவழித்தேன். அப்படியெல்லாம் அவருக்குச் செஞ்சி தான் இந்தக் கோலமாய் வீடுவீடாய் போய் வாச முறை செய்கிறேன்" என்று மிகவும் இரங்கத்தக்க அறிவில்லாக் கொச்சைத் தமிழில் சொல்லுகின்றார்கள். ஐயோ! நம் நாட்டுப் பெருந் தொகையினரான பெண் மக்களின் அறியாமையும் வீண் ஆரவாரமும் அவற்றால் அவர்கள் அடையும் வறுமையும், இவர்களின் இந் நிலைமையால் நமது நாடு நாளுக்குநாள் சீர்இழந்து போவதும் நினைக்குந்தோறும் நெஞ்சை நீராய் உருக்கு கின்றன! இவர்கள் இனிமேலாயினும் இத்தகைய வீணான நடைகளை விட்டு நலம் அடைவார்களாக வென்று இறைவனை வேண்டுகின்றேன்.

---

# 13. பெண்பாலார்க்கே கொல்லாமை முதன்மையாம்

" எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே.''

—தாயுமான சுவாமிகள்.

உலகத்தில் ஆண்பாலார் பெண்பாலாரென்னும் இருதிறத்தாரும் ஆடு, கோழி, மீன் முதலான குற்ற மற்ற உயிர்களைக் கொல்லாமலும், அவ்வுயிர்களைக் கொன்றதனால் வரும் இறைச்சியைத் தின்னாமலும் இருப்பார்களாயின் இம்மையிற் புகழையும் அறிவையும், மறுமையில் இறைவனருளையும் அடைவார்கள். இன்னும், ஆடு, கோழி முதலான உயிர்களைக் கொல்கின்றவர்களும், கொன்ற அவ்வுயிர்களின் இறைச்சியை வாங்குகின்றவர்களும் ஆண்பாலார்தாம், ஆயினும், பெண்பாலார் அங்ஙனம் அவர்கள் கொன்றும் வாங்கியும் கொடுக்கும் இரத்தமும் சீழும் பொருந்திய அவ்விறைச்சியைக் காணற்கும், கைகொண்டு ஆய்தற்கும் சிறிதேனும் அருவருப்படையாது, ஆண்பாலார் அவ்விறைச்சியை அருவருத்துத் தள்ளாதபடி அதனுடன் சைவ உணவுப்பொருள்களான உப்புப் புளி மிளகாய் மஞ்சள் முதலான பல்வகை உணவுப் பொருள்களையும் உடன்சேர்த்துச் சுவைப்படுத்தி அவர்கள் உண்ணுதற்கு வைப்பதனால் அன்றோ ஆண்பாலார் அச்சுவையின் மேலீட்டால் அவ்விறைச்சி தின்பதில் மிகுந்த விருப்பமுடையவர்களாகிக் குற்றமற்ற ஆடு கோழி முதலான உயிர்களை மேலும்மேலுங் கொன்று தீவினைக்கு உள்ளாகின்றார்கள். பெண்பாலார் அங்ஙனம் அவர்கள் வாங்கிக் கொடுக்கும் இரத்தமும் சீழும் பொருந்திய அவ்விறைச்சியைக் காணற்கும் கைகொண்டு ஆய்தற்கும் மிகவும் அருவருப்படைந்து, அதனுடன் சேர்க்கும் மேற்கூறிய சைவ உணவுப் பொருள்களை மிகவும் குறைத்து அவர்கள் அவ்விறைச்சியை உட்கொள்ளாதபடி சுவையின்றிச்

சமைத்தும், பல நல்லறிவுரைகளை எடுத்துப் புகட்டியும் வருவார்களாயின், ஆடு கோழி முதலான உயிர்களைக் கொல்லாமலும், கொன்று அவ்வுயிர்களின் இறைச்சியைத் தின்னாமலும், ஆண்பாலாரெல்லாம் விரைவிற் சைவ ஒழுக்கத்தைக் கைப்பற்றுவார்கள் அன்றோ ?

இன்னும் இறைச்சி தின்னும் ஆண்பாலார் சிலர்க்குச் சைவ ஒழுக்கம் பூண்ட மனைவி வாய்ப்பதும் உண்டு. அங்ஙனம் வாய்த்த மனைவி தன் கணவன் இறைச்சி தின்னுவண்ணம் பலமுறை திருத்துவாளாயினும், அவன் திருந்தாத விலங்கின் தன்மையுடையவனுகிச் சைவ ஒழுக்கம் பூண்ட தன் மனைவி இறைச்சி சமைத்து வைக்குமாறு சொல்லி அவளைத் துன்புறுத்துவான். அம்மனைவி, அவ்விலங்கின் தன்மையுடைய தன் கணவற்கு இறைச்சியைச் சுவையின்றிச் சமைத்து வைத்துவிட்டுத், தான் சைவ ஒழுக்கத்தினின்றும் தவருது எல்லாம்வல்ல இறைவனை நோக்கி, 'இறைச்சி தின்னும் என் கணவனைச் சைவ ஒழுக்கத்திற்குத் திருப்பித் தாரும்' என்று வேண்டி வருவாளாயின், இறைவன் அவள் வேண்டுகோட் கிரங்கி அவனை ஊனுண்பதினின்றும் விலக்குவர். இதனை வேறு சில சான்றுகள் கொண்டும் விளக்குவாம்.

திருநாவுக்கரசு அடிகள் சிவபிரானை வழிபடும் சைவகுலத்திற் பிறந்தவர். ஆயினும், அவர் இதனினின்றும் விலகிச் சமணர்கட்குக் குருவா யமர்ந்தனர். அதுகண்டே அடிகளின் தமக்கையாகிய திலகவதி என்பவர் பெரிதும் மனநொந்து தம் தம்பி திருநாவுக்கரசு சைவக் கொள்கையைத் தழுவுமாறு சிவபிரானை அல்லும்பகலும் ஓவாது வேண்டினர். இவ்வேண்டுகோட் கிரங்கிச் சிவபிரான் திருநாவுக்கரசடிகளை ஆட்கொண்டருளினன்.

இன்னும், மதுரை மாநகரைத் தலைநகராக வைத்துப் பாண்டி நாட்டை அரசாண்ட கூன் பாண்டியனும், அவன் மனைவி மங்கையர்க்கரசியும்

சைவகுலத்திற் பிறந்தவர்கள். ஆயினும், பாண்டியன் சமணர் வலையிற் சிக்குண்டு அக்கொள்கையைத் தழுவினான். இதுகண்டு, மங்கையர்க்கரசி தன் அருமைக் கணவன் பாண்டியனிடத்துப் பேரன்புடைய ளாதலின், அவனிடத்து அருவருப்புக் கொள்ளாது, சிவபிரானை மிக்க மன உருக்கத்தோடு வேண்டித் திருஞானசம்பந்தப் பெருமானைக்கொண்டு தன் கணவனையும் குடிமக்களையும் தமிழ்நாட்டையும் சிவ பிரானை வழிபடும் சைவக் கொள்கைக்கு மீண்டுந் திருப்பினர். ஆதலின், பெண்மக்கள், தாம் அறிவோடு செய்யும் செய்கைகளாலும், கடவுளை வணங்கு வதாலும் ஆண்மக்களை மிக எளிதில் நல்வழிக்குத் திருப்புதல் கூடும். ஊனுண்ணு மனைவி, தன் கண வனைத் திருத்துவது சிறிது வருத்தமாயினும், தனக் குட்பட்ட தன் அருமைக் குழந்தைகளை ஊனுணவு கொடாமல் வளர்ப்பது மிக எளிதாகும்.

இனிக், "கற்பெனப்படுவது சொல்திறம்பாமை" என்னும் ஔவைப்பிராட்டியாரின் அருமையான திரு மொழியின் பொருள் நுணுக்கத்தை ஆராய்ந்தறியாது, கணவன் எப்படிப்பட்டவனுயினும், அவன் சொற்படி மனைவி செய்வதே கற்பு என்றும், அவன் சொல்லைத் தவறி நடந்தவிடத்து மனைவியின் கற்பு அழிந்து போமென்றும், கணவன் ஊனுணவை விரும்பி ஊனுண்ணுத தன் மனைவியை நோக்கி, "அதனைச் சமைத்து வை" என்ருல், உடனே அவள் அவன் சொற்படி சமைத்து வைத்தலே கற்பிற்கு அழகாம் என்றும் பலர் கூறுகின்றனர். இதனை நன்கு ஆராய் வாம். 'கற்பு' என்பதனை ஆன்ருேர் எங்ஙனம் விளக்கினர்? கணவன் தன் மனைவியை நோக்கி, "ஆன்ருேராலும் அறிவுடையோராலும் அறிவுறுத்தப் பட்டது இது; நீ இதனைக் கடைப்பிடித் தொழுகு" என்று கூறுதலும், அதுகேட்டு அவன் மனைவி அவன் கற்பித்த நன்முறைகளைத் தவறி நடவாமையுமே கற் பெனப்படும் என்று ஆசிரியர் நக்கீரனர், பேராசிரியர்,

**நச்சினார்க்கினியர்** முதலான உரையாசிரியர்கள் நன்கு விளக்கியிருக்கின்றார்கள். இவர்கள் கருத்துக் கிணங்கவே அறிவிற் சிறந்த **ஔவையாரும்** "கற்பெனப் படுவது சொல்திறம்பாமை" என்றார். எல்லா மதங்களிலும் (கொள்கைகளிலும்) உள்ள பெரியோர்கள் ஊனுண்ணுதல் கூடாதென்றே அறிவுறுத்தி வந்திருக்க, அப்பெரியார் மொழிந்த நற்சொல்வழி நில்லாது ஒருவன் தானே ஊனுண்ணுத தன் மனைவியையும் ஊனைச் சமைத்துத் தர வற்புறுத்துவனாயின், அவன் கூறும் அத்தீய சொற்படி அவள் நடத்தலே கற்பெனப்படு மென்று எந்த நூலிலும் எவரும் குறிப்பிட்டிலர்.

கணவன் சொன்னபடியெல்லாம் மனைவி செய்ய வேண்டு மென்றால், ஒருவன் தன் மனைவியைப் பார்த்துத், "தெருவிற் போகும் ஒருவனை நீ மடிபிடித்திழுத்து, அவனோடு சண்டையிட்டு வா" என்றால், மனைவி அதுபோற் செய்ய உடன்படுவளா? அங்ஙனம் அவள் செய்வளாயின் அது கற்பெனப்படுமா? கூறுமின்கள்! கற்பு என்னுஞ் சொல் **கல்** என்னும் வினைச் சொல்லடியாகப் பிறந்து பிறரிடத்து அறிவுப் பொருள்களைக் கற்பது என்னும் பொருளையுடையது. தன் கணவன் தகுவன கூறுமிடத்து மனைவி அவைகளைக் கடைப்பிடித்தொழுகி நல்லறிவுடையளாதலே உண்மைக் கற்பெனப்படும். கணவன் தகாதன கூறும்போது மனைவி அதனைக் கேளாது அவனைச் சீர்திருத்தி நல்வழிப்படுத்துதலே உயர்ந்த உண்மைக் கற்புடைமையாகும். மனைவி ஊனுண்ணும் தன் கணவனைத் திருத்தி அவன் அஃதுண்ணுவாறு செய்வளாயின், அதனால், ஆயிரக்கணக்கான ஆடு, கோழி, மீன் முதலான வாயற்ற உயிர்கள் உயிர்தப்பிப் பிழைப்பதல்லாமலும், அவைகளைக் கொன்று தின்பதனால் உண்டாகும் தீவினையினின்றும் அவள் கணவன் பிழைப்பனல்லனோ? ஆதலால், ஆன்றோர் கற்பித்த நல்லறிவுரைகளைத் தன் கணவனும் தனக்குக் கற்பிக்கக்

கேட்டு அவற்றின்படி ஒழுகுதலும், நல்லன அல்லா தனவும் பிற உயிர்க்குத் தீங்கு தருவனவுமாகிய முறை களைத் தன் கணவன் கூறியவழி அவற்றின்படி நடவாமல் அவற்றின் தீமையை அவனுக்கு எடுத்துக் காட்டி அவனைச் சீர்திருத்துதலும், அவற்றானும் அவன் சீர்திருந்தாதவழி அவனுக்கு நல்லறிவு தோன்றுமாறு இறைவனை நோக்கி வேண்டுதலுமே பெண்மக்களுக்கு உண்மையில் உரிய உயர்ந்த கற் பொழுக்கமாகும். எல்லா அறங்களினுஞ் சிறந்த கொல்லாமை, புலாலுண்ணாமை என்னும் அறம் உலகிற் பரவி எல்லா உயிர்களும் இன்புறுமாறு செய்வதே பெண்பாலார்க்கு இன்றியமையாத கடமை யாம் என்க.

"கொல்லா விரதம் குவலயம் எல்லாம் ஓங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே"

—தாயுமான அடிகள்

---

## 14. திருக்காளத்திக் காட்சி

உலக இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழு மாறும், இறைவனை வணங்குமாறும் திருக்காளத் திக்குச் சென்றோம். யாங்கள் விரும்பியபடி கோயிலுக் கருகிலுள்ள ஒரு சத்திரத்திற் றங்கினோம். மறுநாட் காலை ஏழு மணிக்கு, ஒன்றன்மேல் ஒன்றாயும், தொடர் பாயும் உள்ள பல மலைகளைச் சென்று கண்டோம். அவற்றுள் ஒன்றின் மேற்போய், அம்மலைச் சூழலின் நடுவே காணப்பட்ட ஓர் அழகிய பள்ளத்தாக்கினைப் பார்த்து, அதில் இறங்கிப் போனோம். அப்பள்ளத் தாக்கின் அழகிய நிலப்பரப்பானது ஏறக்குறைய ஒரு கல் சுற்றளவு உள்ளதாயிருந்தது. அவ்வழகிய நிலப் பகுதியைப் பாதுகாப்பதற்கு அமைத்து வைக்கப்பட்ட மதிற்சுற்றைப்போல அம்மலைச் சூழல்கள் தோன்றின.

அப்பள்ளத்தாக்கின் நடுவே, அழகிய படித்துறைக ளமைந்த ஒரு பெரிய குளமும், பழைய நாளிலே அமைக்கப்பட்டதொன்ருய்க் காணப்பட்டது. அக் குளத்தின் தண்ணீர் பளிங்குபோல் தெளிந்திருந்தது. அதன் நீர்மட்டத்தில் அங்குமிங்கும் படர்ந்து மிளிரும் அழகிய தாமரை இலைகளின்மீது வெண்மையான கொக்குகள் அமர்ந்துகொண்டு, தம்மை உணவுக்காக இரக்கமின்றிச் சுட்டுக் கொல்லும் கொடிய மாந்தர் அங்கு வருவதின்மையால், சிறிதும் அச்சமின்றி மகிழ்ந் திருந்தன. அக்குளத்தின் நடுவே பழமையாகக் கட்டப் பட்ட ஓரழகிய சிறு மண்டபம் இருந்தது. அதன்மேல் காட்டுப் பூஞ்செடிகள் மிக நெருங்கி வளர்ந்திருந் தமையும், அச்செடிகளிற் கொத்துக் கொத்தாகப் பூத்திருந்த பலநிற மலர்களின்மேல் சிறு சிறு தேன் குருவிகள் சரேலெனப் பறந்துவந்து அப்பூக்களின் இனிய தேனைப் பருகிக் கொண்டிருந்தமையும் எங்கள் உள்ளத்தைக் கவர்ந்தன. இன்னும், அம்மண்டபத்தின் மேல்விளிம்புகளிலுள்ள புதைகளில், சாம்பல் நிறம் வாய்ந்த புருக்கள் கூட்டங் கூட்டமாய் இருந்தன. அப்புருக்களிற் சில தாய்ப்புருக்கள், தாம் பொரித்த குஞ்சுகளைப் பாதுகாக்கும்படி தத்தம் கூடுகளினருகே அச்சமின்றி வரிசை வரிசையாக இருந்து காத்துக் கொண்டிருந்தன. அப்போது, ஆண் புருக்கள் வெளியே எங்கெங்கோ சென்று அலைந்து திரிந்து தம் உணவைச் சுருக்கி இரைதேடி, அவ்விரையை மிகவுங் கருத்தோடு அலகில் கௌவிக் கொண்டு விரைந்து வந்து, வாய் திறந்தபடியாய் எதிர்நோக்கும் தம் குழவி கட்குத் தந்து அவைகளின் பசியை ஆற்றின. அங் குள்ள கூடுகள் ஒன்றில் ஒரு தாய்ப் புருவுக்குப் பல குஞ்சுகள் இருந்தன. அவைகள் பெரியனவாக இருந் தமையின் ஆண்புரு வெளியே சென்று கொண்டுவந்து தந்த உணவு அவைகட்குப் போதவில்லை; அதனுற் குஞ்சுகள் இரைச்சலிட, கூட்டினருகே காவலிருந்த தாய்ப் புருவும் விரைந்து தன் கணவனோடு பறந்து

செல்வதைக் கண்டு, யாங்கள் முதலில் வருத்தமுற்றோ மாயினும், சிறிது நேரத்தில் அத்தாய்ப்புறுவும் இரை யெடுத்துவந்து அவற்றின் வாயில் ஊட்டிப் பசி தணித்ததனைப் பார்த்து வியப்பும் அடைந்தோம். அவ்வளவு பகுத்தறிவையும், அன்பையும் அப்பறவை கட்கும் தந்துதவிய எல்லாம்வல்ல இறைவனது அருட் பெருக்கத்தையும் இரக்கத்தையும் நினைந்து நினைந்து உருகினோம்.

இனி, அப்பெரிய குளத்தின் கரையில் நிறைந்து நின்ற மாமரங்களும், நாவல் மரங்களும், விளாமரங் களும் குளிர்ந்த நிழலைத் தந்தன. அந்நிழலிலிருந்து யாங்கள் சிறிது இளைப்பாறிக் கொண்டிருந்தபோது, ஓர் இனிய பறவைக் குரலோசையைக் கேட்டோம். அவ்வோசை எங்கிருந்து வருகின்றதென்பதை அறிய அங்குமிங்கும் மரங்களினூடே உற்றுநோக்கினோம். அப்போது, யாங்கள் அமர்ந்திருந்த பாறையினருகே இருந்த மரத்தின் ஒரு சிறிய கிளையிலிருந்த ஒரு புள்ளிக் குயிலினது ஓசையே அது வென்றறிந்து மகிழ்ந்தோம். பின், மாணிக்கவாசகப் பெருமான் குயிலினங்களைக் கூவிச் சிவபிரானைக் குழைந்து குழைந்து உருகிப் பாடிய குயிற்பத்தையும் பாடினோம்.

அதிற் சில பாக்கள்—

தேன்பழச் சோலை பயிலுஞ்
சிறுகுயிலே யிதுகேள் நீ
வான்பழித் திம்மண் புகுந்து
மனிதரையாட் கொண்டவள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென்
னுணர்வதுவா யவொருத்தன்
மான்பழித் தாண்டமென் னோக்கி
மணாளனைநீ வரக்கூவாய்,
இன்பந் தருவன் குயிலே
யேழுலகும் முழுதாளி

அன்ப னமுதளித் தூறும்ஆ
னந்தன்வான் வந்ததேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்தநற்
பரிமேல் வருவானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே
கோகழிநா தனைக்கூவாய்.

பிறகு, அங்கே எம் எதிரிலிருந்த அவ்வாவியின் நீரைப் பருகியபின், அக்குளத்தின் வெயிலின் ஒளியில் மினுமினு வென்று துள்ளிப் பிறழ்ந்து ஓடும் கயல் மீன்களை ஒரு வேட்டுவப் பெண் கையாற் பிடிக்க முயல்வதைக் கண்டோம். அவள் எவ்வளவோ முயன்றும், ஒருகால் அவை அவள் கையிலகப்பட்டும், பிறிதொருகால் உடம்பின் வழுவழுப்பில் அவள் கைகளினின்றும் வழுவியும் ஓடின.

இக்காட்சிகளை நோக்கியபின் கீழேயுள்ள காளத்தி இறைவர் கோயிலை அடுத்துள்ள ஒரு மலை முகட்டை அடைந்தபோது, அங்கே பரந்த ஒரு மேட்டு நிலத்தின் மேல், மிகப் பழையகாலத்தே, அஃதாவது (2000) இரண்டாயிரமாண்டுகட்கு முன்னரே கட்டப்பட்ட ஒரு சிறு கோயிலும், அக்கோயிலில் இறைவன் ஒளி வடிவினது அடையாளமாக வைக்கப்பட்ட அருட்குறி (சிவலிங்கம்) யும் இருக்கக் கண்டோம். அவ்வருட் குறியைத் திருமுழுக் (அபிஷேகம்) காட்ட குருக்கள் அக்கோயிலுக்கு வருவதில்லை என்பதைப் பின்னர் அறிந்தோம். இதனை முன்னமே அறிந்திருந்தால், முன் குறித்த குளத்தினின்றும் பூவும் நீரும் கொண்டு வந்து, அருட்குறிக்குத் திருமுழுக்காட்டிப் பூவுஞ் சூட்டி யிருக்கலாமே என்று நினைந்து வருந்தினோம். அவ்வழகிய சிறு கோயில் ஒரு பெரிய ஆலமரத்தின்கீழ் அமைந்ததாகும். அக்கோயிலிலுள்ள அன்பினுற் குழைந்து குழைந்து உருகி வழிபட்ட **கண்ணப்ப நாயனரது** மிகப் பழைய திருவுருவம் அமைந்த மற்றொரு சிறு கோயிலும் அதனருகே யிருந்தது. மக்களின் சேர்க்கை யும், அவரது தீச்செயலும் அணுகப்பெறுது, தனித்து

உயர்ந்த ஒரு மலை யுச்சியில் இறைவனது அடையாளத்தையும், அவனை உண்மையன்பால் வழிபட்ட அடியவர் உருவத்தையுங் காண்பது, சொல்ல இயலாத ஓர் அன்பினையும் உருக்கத்தினையும் எம் உள்ளத்தே தோற்றுவித்தது. உயர்ந்தோங்கும் இத்தகைய தனியிடமே கடவுள் உவந்திருத்தற்கு ஏற்றதென்பது எமக்குப் புலனாயிற்று. இறைவனை வணங்கத்தக்க தனியிடத்தைக் கண்டதும் நெஞ்சங் குவிந்து ஆறுதல்பெற்று அவனை வணங்கிப் பாடி வழுத்தினோம். அந்நேரத்தில் யாங்கள் வானுலகத்தில் கடவுளோடு இருப்பதாகவே எண்ணப்பெற்றோம். இவ்வாறு உலக நினைவினின்றுஞ் சிறிது விடுபட்டிருந்தோமாயினும், பின் சிறிது நேரத்திற்கெல்லாம் மறுபடியும் எப்படியோ பையப் பைய உலக நினைவு வரப்பெற்றோமாய்க் **கடவுளையும் கண்ணப்பரையும்** வணங்கிப் பிரிந்து பின் கீழ்நோக்கி இறங்கினோம்.

இவ்வாறு நாங்கள் இறங்கி வரும்போது, அங்கங்கே சிறிதுநேரம் நின்று நின்று, அம்மலையின் கீழ்த் தோன்றும் அரிய காட்சியின் அழகை வியந்து உரையாடினோம்! கீழ் உள்ள பெரிய சிவபிரான் கோயிலானது ஓரழகிய ஆற்றங் கரையின்மீது அமர்ந்து, மேலிருந்து காணும் எமக்குச் சிறிய அளவினதாய்த் தோன்றியது. ஓர் ஊரை உண்டாக்குவதற்கு முன் ஓவியக்காரன் அப்பெரிய ஊரினளவை ஒரு சிறிய கடிதத்தில் வரைந்து காட்டினால், அத்தோற்றமானது எவ்வளவு சிறிதாக நம் கட்புலனுக்குக் காணப்படுமோ அதைப்போலவே அப்பெரிய ஊரும், சிவபெருமான் கோயிலும் சிறுத்து விளங்கின. ஆங்காங்கு அவ்வூருக்குப் புறம்பே பயிரிடப்பட்டிருக்கும் பச்சைப் பசேலென்ற வயல் நிலங்கள் பச்சைப் பட்டாடை விரித்தாற்போல் பகலவன் கதிரொளியால் மினுமினுப்புடன் விளங்கின. பின்னும், அவ்வூரின் கோயிலுக்கு அருகே கதிரவன் ஒளிவிட்டுத் திகழும் **பொன்முகலியாற்றின்** தோற்றமானது ஒரு வெள்ளிக் கம்பிபோல் காணப்

படுவதாயிற்று. இன்னும், அவ்வாற்றின் இடை இடையே நீரைத் தடுத்து மடைகளின் வழியே வயல்கட்கு நீர்பாய்ச்சும் மள்ளர்களும், மற்றொரு பக்கத்தே அறுப்பறுத்த நிலங்களில் மேயும் ஆடுமாடுகளும் சிறு சிறு பாவைகள்போல் தோன்றுவ ஆயின.

இங்ஙனமெல்லாம் இறைவன் அருமையாகப் படைத்த இயற்கைத் தோற்றங்களைப் பார்த்துக் கொண்டே கீழிறங்கி மலையினடிவாரத்திற்கு வந்து சேர்ந்தோம். அம்மலையடிவாரத்தின் பக்கத்தே வேட்டுவர் குடிசைகள் பற்பல இருந்தன. யாங்கள் மலையினின்றும் வந்து களைப்புத் தீரும்பொருட்டு அங்கிருந்த ஒரு மரத்தடியிற் றங்கினோம். அப்போது அங்கிருந்த குடிசைகளி லொன்றிலிருந்து ஆண்மயிலொன்று வெளி வந்து தன் அழகிய தோகையை விரித்து ஆடியது. ஆ! அத்தோகையின் நீலமும் பச்சையும் கலந்த கண்கள் வெயிலொளியில் மினு மினு வென்று மிளிர்ந்தன. யான் பிறந்து அதுகாறும் காணாத அப்புதுமையை இன்னும் நினைவுகூர்ந்து மகிழ்கின்றேன். பின் அடுத்த நாள் விடியற்காலையிலே மலையடிவாரத்திலிருக்கும் பழைய காளத்தியப்பர் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கி அக்கோயிலின் கருங்கற் சுவர்களிலுள்ள நுண்ணிய வேலைப்பாடுகளைக் கண்டு வியப்புற்றோம். பின் சத்திரத்திற்கு வந்து உணவு சமைத்து உண்ட பிறகு, என் பெற்றோர் இளைப்பாற மேல்மெத்தைக்குச் சென்றனர். யான் உறங்குவதற்கு விருப்பமில்லாமல் அச்சத்திரத்தின் பின்புறத்திற் சென்றேன். அங்கே யிருந்த ஒரு பெரிய அரசமரத்தின்மேல் பத்துப் பதினைந்து குரங்குகள் மரக்கிளைகளில் தாவித்தாவி விளையாடிக்கொண் டிருந்தன. இவ்விளையாட்டைப் பார்த்துக்கொண்டிருந்தபோது, அக்குரங்குகள் பரபரப்போடு கீழிறங்கி, எனக்குப் பத்தடித் தொலைவில் நின்றுகொண்டு, கைகளை நீட்டி உணவுப் பண்டங்கள் கேட்டன. உடனே யான் விரைந்து ஓடி ஓர் ஏனத்தில் சோற்றுடன் திரும்பினேன். யான் கொண்டு

வந்ததனை அக்குரங்குகளினருகே சென்று கொடுக்க அஞ்சிச், சோற்றைக் காட்டிக் கூப்பிட்டேன். உடனே, அக்குரங்குகளிற் சில அச்சமின்றிக் கிட்டே வந்து கைநீட்டின. ஆனால், யான் உணவை அவைகளின் கைகளில் தருவதற்கஞ்சிக் கீழே வைத்து அப்புறம் வந்துவிட்டேன். அவை அவ்வுணவை உண்ட பின் மரங்களில் ஏறின. யான் உணவு தருதலைப் பார்த்துக் கொண்டிருந்த தாய்க் குரங்குகளிற் சில, தம் குட்டிகளோடு என் எதிரே ஓடிவந்து தம் கைகளை நீட்டி இரங்கிய முகத்தோடு என் முகத்தை உற்று நோக்கி உணவு கேட்டன. யான் அதன்பின் அச்சம் தெளிந்து அவைகளின் பக்கத்தே போய், அவைகளின் கைகளில் சோற்றை அள்ளி வைத்தேன். அத்தாய்க் குரங்குகள், தாம் முதலில் அச்சோற்றை உண்ணுமல் தத்தம் வயிற்றடியில் பற்றிக்கொண்டிருந்த தத்தம் இளங்குழவிகட்குத் தந்து பிறகு உண்டன. இவ்வாறு மேற்கூறிய அழகிய தோற்றங்களைக் கண்டு களிப்போடு அன்றிரவும் அச்சத்திரத்திலே தங்கி, விடியற்காலையிலே காளத்தித் தங்குநிலை (ரயிலடி)க்குப் போய்ப் புகைவண்டி ஏறி வீடுவந்து சேர்ந்தோம்.

---

## 15. சைவ மாதரும் சைவமும்

சைவம் முழுமுதற் கடவுளாகிய சிவத்தை வழிபடுவது. சிவம் பிறப்பு இறப்பு இல்லாதது, எங்குமுள்ளது; இன்ப வடிவினது. பேரறிவு பேராற்றல் பேரின்பமுடைய அறிவுப் பொருளின் சேர்க்கையினுற்றான் பிறந்திறக்கும் உயிர்கட்குப் பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் உண்டாகல் வேண்டும். அறிஞர் சேர்க்கையால் அறிவும், வலிவுடையார் சேர்க்கையால் வலிவும், அன்புடையார் சேர்க்கையால் அன்பும் இன்பமும் வருதல் கண்கூடு. அதுபோல்

அறிஞர் எல்லாரினும் வலிவுடையார் எல்லாரினும் அன்புடையார் எல்லாரினும் சிறந்த சிவத்தின் துணை நமக்கும் எல்லா உயிர்கட்கும் இன்றியமையாதது. இறைவனுதவியினுலேயே பிறந்தும், இறைவன் செயலினுலேயே மறைந்தும் போகும் நமக்கு வேறு யார் நிலையான துணையாகக்கூடும்? நாம் எல்லோரும் பிறப்பவரும் இறப்பவருமா யிருக்கையில், நாம் ஒருவருக்கொருவர் துணை யாவதெல்லாம் சில நாளோ, சில திங்களோ, சில ஆண்டோ, அதற்குமே யில்லை.

அறிவின் முயற்சியினுற்றுன் உலகமெல்லாம் உலகத்துள்ள செயல்களெல்லாம் நடக்கக் காண்கின்றேம். உயிர்கள் அறியாமையில் அழுந்தி உறங்கியோ மயங்கியோ கிடக்கையில் ஏதொரு முயற்சியும் இல்லை. ஆகவே, இந்நிலவுலகத்தின் நிகழ்ச்சிகளுக்கும், இதற்கும் அப்பாலுள்ள எண்ணிறந்த உலகங்களின் நிகழ்ச்சிகளுக்கும்; இவ்வுலகங்களில் உள்ள புற்பூண்டு முதல் மக்கள் ஈறுன எல்லா உயிர்களின் பிறப்பு வளர்ப்பு இறப்பு முதலான நிகழ்ச்சிகளுக்கும் ஒரு பேரறிவு முதலாய் நின்றன்றே அவை தம்மை நடத்தல் வேண்டும்? கடவுள் இல்லை யென்றும், கடவுளிருந்தாலும் அவரை யறிய வேண்டுவதில்லை யென்றும், அறிந்தாலும் அவரை நினைந்து வணங்கவேண்டுவதில்லை என்றும் சொல்வோர் சொல் எதனை யொத்திருக்கின்றதென்றுல், எனக்குத் தாய் தந்தையர் ஆசிரியர் அன்புடையார் இல்லை. இருந்தாலும் அவரை அறியவேண்டுவதில்லை. அறிந்தாலும் அவரை நினைந்து அவர்பால் அன்புபூண்டு வணங்கவேண்டுவதில்லை, என்று ஒருவன் சொல்வதையே ஒத்திருக்கின்றது. என் அறிவே சிறந்ததென்பவன் தன் தாய் இன்றித் தந்தை இன்றி ஆசிரியர் இன்றிக் கற்றுர் உதவியின்றி அவ்வறிவைப் பெற்றதுண்டோ? வரவர அறிவிற் பெரியராதற்கு, வரவர அறிவிற் சிறந்தார் சேர்க்கையும் அவர் எழுதிய நூற் பயிற்சியும் நமக்குக் கட்டாயமாக வேண்டப்படுதல் போலவே, எல்லா அறிவிலுஞ் சிறந்த பேரறிவு

பேரின்பத்தைப் பெறுதற்கு அவை யெல்லாம் ஒருங்குடைய சிவத்தின் சேர்க்கை இன்றியமையாதென்க.

நம்போற் பிறந்து இருந்து துன்புற்று இறந்து மறுமை யுலகங்களில் அலறித்திரியும் பேய்களைத் தெய்வங்களாக வணங்குவோர், அப்பேய் வடிவைப்பெற்று மறுமையில் அலறித் திரிவார்கள். அமெரிக்காவில் ஒரு கல்லூரியில் விலங்குகளின் அமைப்பை ஆராய்ந்து படித்த ஒரு மாணவன், ஓர் எருமை மாட்டின் அமைப்பிற் கருத்தைச் செலுத்தி அதனை இரவு பகல் நினைந்து வர, அவன் சில நாளில் தன்னை ஓர் எருமை மாடாகவே கருதி அதற்குரிய செயல்களைச் செய்தனன் என்று ஓர் ஆங்கிலப் புலவர் மிகநுணுகி ஆராய்ந்தெழுதிய மன நூலில் எழுதியிருக்கின்றார். ஆகையால், நம் சைவத் தாய்மார்கள் பேய்களைத் தெய்வமாக நினைந்து வணங்குதல் தமக்குந் தம்மைச் சேர்ந்தார்க்கும் பெருந்தீமை செய்வதுடன், தம் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகட்குந் தீமை செய்தவராவார்கள். எல்லா அறிவும், எல்லா ஆற்றலும், எல்லாச் செல்வமும், எல்லா இன்பமும் ஒருங்குடைய சிவத்தையும் அம்மையையும், நம் சைவ ஆசிரியரான மாணிக்க வாசகர், திருஞான சம்பந்தர் முதலாயினாரையும் மிக நினைந்து மிக வணங்கி மிக வாழ்த்தி வணங்குதலே நமக்கும் நம்மைச் சார்ந்தார்க்கும் அளவுபடாத பெரும் பயனைத் தரும்.

மற்றைச் சமயங்களும் மற்றை மொழிகளும் தத்தம் ஆசிரியர் பெயராலும் தத்தம் மக்களின் பெயராலும் தம் மதங்களைப் பௌத்தம், கிறித்தவம், மகமதியம், மத்வம், இராமாநுஜம் என்றும், தம் மொழிகளை ஆரியம், ஆங்கிலம், கிரேக்கம், எபிரேயம், சீனம் என்றும் முறையே வழங்கிவரச் சைவரும் தமிழரும் ஆகிய நாம் மட்டும் இன்ப வடிவினராய் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாயுள்ள சிவத்தின் பெயரால் '**சைவம்**' என்று நமது சமயத்தையும், அச்சிவத்தின் இன்ப இயல்பைத் தன் கண் உடைமையால் இனிமை

யென்னும் பொருளுடைய ‘தமிழ்’ என்னும் பெயரால் நமது தமிழ் மொழியையும் வழங்கி வருகின்றோம். இத்துணைச் சிறந்த தமிழைக் கற்றுச் சிவத்தை வணங்குதலையே நாம் உறுதியாகப் பிடித்தல் வேண்டும். மற்றை மொழிகளைத் தமிழ் கற்ற பிறகு தான் கற்றல்வேண்டும்.

---

*Publication No. 1.*

# TANITTAMIL KATTURAI

BY

**T. Neelambikai Ammayar**

*Can be had of:*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
TIRUNELVELI & MADRAS.

**Price Re. 1.**

யோகி சுத்தானந்த பாரதியாரின்

# கவிக் கனவுகள்

(திருக்காட்சியுடன்)



புதுயுக் நிலையம்
புதுச்சேரி

உ

யோகி சுத்தானந்தபாரதியாரின்

# கவிக் கனவுகள்

( திருக்காட்சியுடன் )

மானிடவாழ்விற்குச் சிறந்த அறிவும் திருவும் அருளும், உணர்வும் தரும் ஆவேசக் கவிகள். இவற்றைப் பாடப்பாட புதிய புதிய காட்சிப் படலங்கள் தோன்றும்

புதுயுக நிலையம்
புதுச்சேரி

# பொருளடக்கம்

II

# பாட்டு

—o—

ஆர்வத் தியால் அன்புள்ளுருகி,
அருவி போல வருவது பாட்டாம்!
குரலும் சுருதியும் கூடிக் குழைந்து,
கமகமுந் தாளமுங் கனிவுறப் பொருந்தி,
பாட்டின் கருத்து பளிச்செ்ன விளங்கக்
கேட்டா ருள்ளங் கிளர்ச்சி கொள்ள,
உணர்ச்சி ததும்ப, உள்ளங் குழைய,
நவரஸ பாவனை நயமுற நாட்டி,
பரவையும், வசந்தப் பறவையும் போலக்
கலையி னுள்ளம் கடவுளைக் காட்ட,
வீடு திருந்த, நாடு சிறக்கவே,
இயல்பா யிசைத்தல் இசையென லாமே!
இன்பப் பொருளே இசையின் பயனும்!

24-11-'47 —சுத்தானந்த பாரதி

# சுத்தானந்தர் பாடல்கள்

கவியோகி சுத்தானந்த பாரதியார் நூல்களை நல்ல முறையில் அவர் பார்வையிலேயே வெளியிட, புதுச்சேரியில், **புதுயுக நிலையம்** மலர்ந்துள்ளது. சுத்தானந்தர் பாடிய பாடல்களையெல்லாம் பதினைந்து பாமலர்த் தொகுதிகளாகப் புதுயுக நிலையம் வெளியிட முற்பட்டுள்ளது — கவிக் கனவுகள், புதுயுகப் பாட்டு, பொதுநலப்பாட்டு, அருளமுதம், சுத்த சன்மார்க்கம், சங்கீர்த்தனம், நடனகீதம், பாரத சக்தி, காவிய நாடகங்கள், கதைச் செய்யுள், இசை நாடகங்கள், மந்திரமலர்கள், தியானமாலை, யோகவிளக்கு, பிரெஞ்சுக்கவிகள், ஆங்கிலக்கவிகள்.

சுத்தானந்தர் தவம்பெற்ற தவம், யோகத்திற்கே வாழ்வை நிலைக்களமாக்கிய புனிதர்; தாம் கண்ட சுத்த சுதந்தர சமத்வயோக வாழ்வை, மனித சமுதாயமும் பெற வேண்டும் என்ற ஆர்வத்தால் அல்லும் பகலும் இதயத் துடிப்பை இலக்கியமாக்கும் கவியோகி என்பதைத் தமிழுலகம் அறியும். அவர் உள்ளமே பாட்டு, பாட்டே உள்ளம். இப் பாமலர்களே அவர் வாழ்வின் சிறப்புச் செல்வம்.

இப்பாமலர்த் தொகுதி சுத்தானந்தரின் அன்புத் தெய்வமான ஸ்ரீ **அரவிந்தசக்திக்கே** அர்ப்பணமாகுக!

"புதிய உலகம்வரப் பாடுவோம்—நாம்
பூரண வாழ்வுபெறப் பாடுவோம்—
நதியைப் போலநல மாக்குவோம்—இந்த
நாட்டில் விண்ணரசை ஊக்குவோம்" (சுபா)

புதுச்சேரி
15—8—47

**புதுயுக நிலையம்**

# பாராட்டுரைகள்

தவத்தால் வந்த மகாகாவிய நடையே ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் வாக்கு.

—**வ. வெ. சு. ஐயர்**

சுவாமி சுத்தானந்த பாரதியார் நடை தனிச்சிறப் புடையது. கவர்ச்சி மிக்கது ; படிப்பவர் மனதை வசப்படுத்து வது.

—**எச். எ. பாப்லி**

அனுபவத்தில் உணர்ந்த உண்மைகளை பாரதியார் பாடும்போது, நம்முடைய ஹிருதயத்தைத் தொட்டுக் கொண்டு மெல்லென்ற தென்றல் தவழ்வதுபோன்ற உணர்ச்சி உண்டாகின்றது. இதனால் பாரதியார் ஓர் வற்றாத **இனிய தமிழ் ஊற்**றென்பது நன்கு புலப்படும். சுவாமி களின் கவிதாசக்திப் பிரவாகமும், எழுத்து வன்மையும், யோகசித்தியும் உலகிற்குப் பெருநல மளிப்பதாகும்.

— மகாமகோபாத்யாய
**டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்.**

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் அருட்கவிவள மும், பலகலைத்திறமும் தமிழ்மொழிப்பற்றும் ஒப்புயர் வற்றன.

—**புலவர்மணி G. சுப்பிரமணியப்பிள்ளை.**

"யோகி சுத்தானந்தரின் உணர்ச்சி ததும்பும் எழுத்து வன்மைவும், கவிதைச் சிறப்பும், கலைப்பண்பும், இலக்கிய ஆழமும், தமிழ் பாஷைக்கு மஹோன்னத மளித்து வருகின்றன."

— மகாகனம் **V. S. ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்.**

சுத்தானந்த பாரதியார் அறிவால், அன்பால், பாட்டால், உரையால் தமிழ் நாட்டைக் கொள்ளைகொண்டவர் ; இயற்கையில் தோய்ந்து, இறை யுண்மையில் உறுதி கொண்ட விரதர் ; ஒருமையில் நிற்கும் பெருமையாளர். கவியோகி சுத்தானந்த முனிவர் வாழ்க!

**—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.**

சுத்தானந்த பாரதியார் நூலை நான் கருத்துடன் படிப்பதுண்டு. அவரைப்போன்று, அற்புத நூல்களை யார் செய்யமுடியும் ? ஒரு நாளைக்கு ஒரு நூல் எழுத வல்லவர்.

**— திரு. சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்.**

**யோகி சுத்தானந்தர்** வால்மீகி போன்ற கவி ; இந்திய மறுமலர்ச்சியின் சுடரொளி. தாகூரைப்போல் அவர் பல துறைகளில் அபாரமான கலைத்தொண்டு செய்திருக்கிறார்.

**திவான்பகதூர் K. S. ராமசாமி சாஸ்திரியார்.**

சுவாமிகளுக்கு வாய்த்துள்ள கவித்திறமை அபாரமானது. உணர்ச்சி உள்ளத்தில் ஒளி விட்டுக் கொண்டிருக்கிறது. சுவாமிகள் கவிதைச் சிறப்பு தமிழின் முதுமைக்கும் இளமைக்கும் ஜீவநாடி போன்றது.

**— திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார், B.A., B.L**

இனிமை, எளிமை, உண்மை—இம் மூன்று குணங்களும் சுவாமிகளுடைய பாடல்களின் உடன்பிறப்புக்களாயுள்ளன. தேசபக்தியும், தமிழன்பும் அப்பாடல்களில் பொங்கித் ததும்புகின்றன. இறைக்குந்தோறும் ஊறுகின்ற மணற்கேணி போன்றவர்கள் சுவாமிகள்.

**—இராவ்சாஹிப் S. வையாபுரிப்பிள்ளை, B. A., B. L.**

## தவயோகி வாழ்க !

கண்டும் கனியும், கரும்பும் கனியமுதும்,
தண்டமிழில் கொண்டுதரும் தண்ணளியான்–மண்டுபுகழ்ப்
பண்டிதன்சுத் தானந்த பாரதிசெய் பாவிருந்தை
உண்டறியார் உண்டோ உரை?

ஆசையின் வேரை அறுத்த அறிஞனையெம்
பூசனைக் கேற்றபெரும் புண்ணியனை—மாசிலா
அன்புருவ மானசுத் தானந்த பாரதியை
மன்புவியில் வழ்த்துமென் வாய்.

கொண்டல் வண்ணா, கோபாலா
  கும்பிட்டுன்னை வேண்டுகிறேன்.
அண்டு மன்பால் தமிழன்னைக் (கு)
  அல்லும் பகலும் அலுப்பின்றித்
தொண்டு செய்யும் தவயோகி
  சுந்தானந்த பாரதியிம்
மண்டலத்தில் என்றென்றும்
  வாழ வரம்நீ வழங்குவையே.

*கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை*

# கவிக் கனவுகள்

## 1. அருணப் புதியநகை

(செஞ்சுருட்டி) (ஆதி)

அருணப் புதியநகை கொஞ்சி—வளர்
அரவிந்தத் தேன் பருகும் வண்டு
வருண வசந்தவன முலவும்—ஜகன்
மாதாவைப் பாடுகின்ற வண்டு.

காணும் இயற்கையுடன் கூடி—கண்
காணுக் கடவுளின்பந் தேடி,
ஆணும் பெண்ணும் விளையாடும்—புவி
யழகை அனுபவிக்கும் வண்டு.

கட்டிக் கனியமுதம் போலே—உள்ளே
கலந்து கலந்தினிக்கும் கனவில்
எட்டிப் பிடிக்கமுடி யாத—விண்ணில்
ஏறித் திரியும் கவி வண்டு.

தாயின் முலைப் பாலைப் போலே—பயிர்
தழைக்க வருமருவி போலே—
சேயின் மழலை மொழி போலே—உள்ளந்
தெளிந்து வருமெனது கலையே..

## 2. இன்பக்கனவு

(இ-ம் சிந்து பைரவி) (ஆதி தாளம்)

இன்பக் கனவிந்த வையம் !—அதில்
 எங்கும் கலைவெள்ளம் பொங்குதையே !—குயில்
அன்பென்று கூவுது கேளாய்—நெஞ்சில்
 ஆசைகொண் டாடுதோர் பொன்மயிலே !—இதைத்
துன்பக் கனவென லாமோ ?—முன்னே
 தோன்றிடும் வாழ்க்கை அமுதமையே—எல்லாம்
பண்பெற்ற காதலின் ஊற்றும்—அதன்
 பாட்டுடன் ஆனந்தக் கூத்திடுவோம் வாரீர் ! (இன்ப)

மங்கலத் தாயின் மடியில்—இந்த
 மாநில மெல்லாந் தவழ்ந்து வளருது;
திங்களை வாவென் றழைக்கும்—அந்தச்
 சேயின் கரத்திலோர் செங்கோல் விளங்குது;
செங்கதிர்க் காலை மலரைக்—கொஞ்சும்
 தென்றலி லேதிரு வாய்மொழி கேட்குது;
தங்க மலைநதிப் பாட்டில்—ஜீவ
 தத்துவக் காவியம் தாவி வருகுது
இன்பக் கனவிந்த வையம் ! (இன்ப)

## 3. வந்து வந்து

(பிலகரி) (ரூபகம்)

(1) வந்து வந்து செல்லும்—இந்த
வானப் பறவையினுள்
விந்தை விந்தைக் கனவை—வைத்த
வித்தகனைப் பணிவாம்.

(2) ஜீவ முரளியினை—அவன்
செங்கையில் ஈந்திடுவோம்
தேவகான முயிர்ப்பான்—புதுத்
தேன் மணத் தென்றலைப் போல்;

(3) புதை குழியி னின்றும்—ஒரு
பூஞ்செடியாய் நகைப்பான்
விதையை நட்டறுப் பான்—உப்பில்
விண்ணமுதம் படைப்பான்.

(4) மாரியின் கண்ணீ ரால்—பசும்
வசந்த மாக்கிடுவான்
காரிரவின் முடிவில்—இளங்
காலையைக் காட்டிடுவான்.

(5) அன்புக் கனி பிழிவோம்—அதில்
ஆத்ம சுகம் பொழிவோம் !
இன்பக் கலைக் குடத்தில்—ஏந்தி
இன்னுயிர்க் கூட்டிடுவோம் !

## 4. வானை வளைத்தவன்

*(மந்தாரி)* *(ரூபகம்)*

வானை வளைத்தவன் யார் ?—மேக
    வர்ணம் அடிப்பவன் யார் ?—விண்
மீனணி கோத்தவன் யார் ?—எங்கும்
    வெண்ணகை செய்பவன் யார் ?

கதிர்மதி உருளும்—நெடுங்
    காலச் சகடையிலே—காற்றுக்
குதிரையைப் பூட்டி—எங்குங்
    கொட்ட மடிப்பவன் யார் ?

தரையின் மார்பினிலே—பயிராய்த்
    தழை பசியவன் யார் ?
வரை முடியினின்றே—அருவியாய்
    வருங் கருணையன் யார் ?

மாதர் மதி முகத்தில்—அழகின்
    மங்கலம் வைத்தவன் யார் ?
காதலினால் உலகை—அமைக்கும்
    கருமச் சிற்பியிங் கார் ?

பஞ்ச பூதங்களையும்—பிசைந்தே
    பலவுருச் சமைத்தான்.
நெஞ்சத் துடிப்புடனே—அவனே
    நீள உயிர்ப்பவனும் !

## 5. குயிலிசை

(காபி) (ஆதி)

மானிட வாழ்வினிலே
வானமு தம்பொழியும்
ஆனந்தப் பண் ணிசைப்பாய்—குயிலே
அன்பான கண்மணியே

தக்கத் தகெனத் திசை
தாளம் தெறித் தொலிக்கக்
குக்கூ எனக் கூவுவாய்—குயிலே
குவலயத் தோட்டத்திலே

மங்கள யாழிசையாய்
வாழ்வுக் கலைகளெல்லாம்
பொங்கும் புதுயுகத்தைக்—குயிலே
போற்றி யழைத்திடுவாய்

காதலர் வாழ்வினிலே
கட்டிக் கரும்புபோன்ற
நாதரச மூட்டுவாய்—குயிலே
நல்ல சுகம் பெறவே

தங்கமும் பச்சையுமாய்த்
தழைத்த வுலகமெல்லாம்
மங்கலம் பொங்கழகே—குயிலே
மலர்ந்து கனியுதடீ.

ஈனப் பொறுமையின்றி
இழிந்த சிறுமையின்றி
ஞானப் பொருளுடனே—குயிலே
நட்புற வாடிடுவோம்

நெஞ்சினில் வஞ்சமின்றி
நேர்மை கடைப்பிடித்தே
அஞ்சாச் சுதந்தரராய்க்—குயிலே
அன்புற வாழ்ந்திடுவோம்.

மதங்களின் கூச்சலின்றி
மவுனச் சுடர் வெளியில்
சுதந்தர மாய்ப் பாடுவோம்—பரி
சுத்தானந்தக் குயிலே.

## 6. மொட்டுக்குள்ளே

(பியாகு) (ஜம்பை)

மொட்டுக் குள்ளே யழகு—சும்மா
மூடிக் கிடக்குதம்மா....கதிர்
பட்டு மலர்ந்துவிட்டால்—அது
பரி மளிக்கு தம்மா !

சிந்தனைக் குள் அழகு—நாளும்
தேங்கிக் கிடக்கு தம்மா—மனப்
பந்தனை யற்றுவிட்டால்—அது
பரந்து தாவுதம்மா !

நெஞ்சுக்குள்ளே யழகு—மிக
நிரம்பித் தோயுதம்மா—அது
கொஞ்சம் திறந்துவிட்டால்—அன்பு
கொட்டிக் குமுறுதம்மா !

பாரினிலே யழகு—கண்
　　பார்வையைக் கொஞ்சுதம்மா—அதன்
போர்வையை நீக்கிவிட்டால்—தெய்வப்
　　பொலிவு காணுதம்மா !

மோனத்தி லேயழகு—சக்தி
　　மூண்டு ததும்பு தம்மா—ஆத்ம
ஞானம் பிறந்துவிட்டால்—அது
　　நல்லொளி யாகுதம்மா !

## 7. பொங்கு திரை

(*கரகரப்பிரியா*) (*ஜம்பை*)

பொங்குதிரைக் கமுதநிலா
　　பொழிவதென்ன மதியே !
பூமியெல்லாம் ஒளிபரவப்
　　பொலிவதென்ன கதிரே !
மங்கலநன் மணம்பரவி
　　மகிழ்வதென்ன மலரே !
தங்கமயக் கனிஎமக்கே
　　தருவதென்ன மரமே !

பாருயிராம் பூங்குழலிற்
　　பாடுவதென் காற்றே !
பசும்பயிரை வளர்த்திடவே
　　பாய்வதென்ன ஊற்றே !
ஆருயிர்ச்சேய் வளர்ப்பதென்னே
　　அன்னைமனத் தன்பே !
அருள்மழையைப் பொழிவதென்னே
　　அளவறியா வானே !

பாடுபட்ட தேன்பிறர்க்கே
படைப்பதென்ன தேனீ !
பணமின்றிப் பாடுவதேன்
பழஞ்சோலைக் குயிலே !
ஏடெழுதி நீடுபுவிக்
கீவதென்ன கவியே !
ஈந்துவக்கும் இன்பமல்லால்
இன்பமில்லை யென்றே.

## 8. சுற்றிலும் சோலை

(நாட்டைக்குறிஞ்சி) (ஆதிதாளம்)

சுற்றிலும் சோலைப் பசுமை—அங்கே
சொக்கழ காகச் சுடர்மனை கட்டி
வெற்றுரை வீண்பொழு தின்றி—கையால்
வேலைசெய் துண்டு, கலைவெறி யேறி
வற்றுத நீரோடைப் பாட்டில்—கவி
வாணியின் பாட்டும் வளாவிட வாழ்வேன்
புற்றரவும் விட மற்றே—அன்புப்
புல்லாங் குழலுக் குருகிடச் செய்வேன்

பசிக்குப் பழங்களை யுண்பேன்—கன்று
பட்சிக ளோடு பரவசம் கொள்வேன்
சசிரவி மீன்கணம் போலே—வெளிச்
சத்த மில்லாது சகத்திற் குழைப்பேன்.
வசந்தக் குயிலோ டிசைப்பேன்—காலை
வாச மலர்களு டன்புன் னகைப்பேன்
நிசியின் மவுன வெளியில்—ஆத்ம
நேயனைக் கூடி நினைப்பை மறப்பேன்.

அஞ்ச வருவதும் உண்டோ ?—நெஞ்சில்
ஆத்ம சமத்துவம் பூத்துக் கனிந்தால்;
பஞ்சபூதச் சட்டை போர்த்த—இந்தப்
பாருயிர் யாவிலும் ஒருயிர் காண்போம்
வெஞ்சமர் கொண்ட பகையும்—ஒரு
வேடிக்கைத் தோழன்போல் ஆட வருவான்
தஞ்சம் பராசக்தி யென்றே—ஒரு
தாயிடம் சேயெனத் தூயராய் வாழ்வோம்.

## 9. தங்கத்தணல் போல்

(அடாணா) (ஆதி)

தங்கத் தணல் போலே—நிலத்
தாரகை வானத்திலே
திங்கள் நகைக்கையிலே—கவித்
தீப் பொரியு தம்மா !

காற்றுடனே நிலவும்—மெல்லக்
கலந்து கொஞ்சையிலே,
ஆற்று மணல் வெளியில்—கவி
ஆடித் திரியு தம்மா !

வெள்ளித் திரை வீசி—இயற்கை
விம்மிக் குதிக்கையிலே—என்னை
அள்ளுங் கவியமுதம்—அங்கே
ஆருய்ப் பெருகுதம்மா !

மின்னல் நடமாடும்—கார்
மேகத்தைக் கண்டு விட்டால்,
வன்னக் கவி மயிலும்—என்
வாழ்வுடன் ஆடுதம்மா !

## 10. காரிருட் கூந்தலினுல்

(செஞ்சுருட்டி) (ஆதிதாளம்)

காரிருட் கூந்தலினுல்—மகா
காளியிவ் வுலகினைக் கவர்ந்து நின்ருள் ;
தாரகைத் திருமணிகள்—எங்கும்
தணல்பெறு மலரெனத் தளுக்கு நிசி ;
வாரிசம் உறங்குநிசி—அல்லி
வனப்புற மணவிருந் தளிக்கு நிசி,
பாரெலாம் அடங்கியபின்—மோனப்
பரவச வெளியினைப் பார்த்தி ருந்தேன்.

விண்சுடர்ப் பவனியிலே—அதில்
விளைந்திடும் ஓமிசை வீணை யிலே
தண்கடல் முரசினிலே—என்னைத்
தழுவித் தழுவிக் கொஞ்சும் தென்றலிலே,
எண்ணத்தை இழந்திருந்தேன்—என்
இதயத்தைத் திறந்தொரு மதி முகத்தாள்
கண்மனங் கவர்ந்துநின்ருள்—அவள்
கனவினில் என்னுயிர் கலந்து நின்றேன்.

செஞ்சுடர் மேனியினுள்—நிறை
திங்களு மின்னலும் திகழ் முகத்தாள்
அஞ்சன மையிருளை—ஓர்
அமுதுகு நகையினுல் அழித்து விட்டாள்.

கஞ்ச மலர்விழியால்—ஞானக்
கதிர்களைப் பொழிந்தாளென் மதியி னிலே
நெஞ்சினைத் தொட்டுவிட்டாள்—என்
நினைப்பினை யாண்டனள் மனப்படியே.

கலையெனும் பெயருடையாள்—உள்ளம்
கனிந்திடப் பொலிந்திடுங் கவினுடையாள்
மலையெழும் அருவியைப்போல்—அன்பர்
மனத்தினிற் கவிதரும் வாணி யிவள்
உலகிவள் சிற்பமடா—நம்
உயிரினை அழகுசெய் இன்பமடா
நிலையிலாக் காலரதம்—இந்த
நேரிழை செலுத்தமுன் னேறு தடா !

கல்லினுக் குயிர்தருவாள்—கவிக்
கனவினுக் கினியசொல் வளமளிப் பாள்.
தொல்புவிக் காட்சி யெல்லாம்—ஒரு
தூரிகை முனையிலே துலக்கிடு வாள் ;
நல்லிசை விருந்தளிப்பாள்—இவள்
நாடக மேடையிஞ் ஞால மெல்லாம்
சொல்லுக்குச் செயலளித்தாள்—என்
சுதந்தரச் சுடரினைத் தூண்டி விட்டாள்.

## 11. புன்னகையுடன்

(கலைவாணி)

(பூர்வ கல்யாணி) (சாபு தாளம்)

புன்னகையுடன் பூப்பறித் திவாள்
　　பூங்கையாற் கண்ணைப் பொத்திச் சிரிப்பாள்
மின்னைப் போல மிளிர்ந்து மறைவாள்
　　மீனைப் போல விழிகள் அசைப்பாள்
பின்வந் தென்பெயர் பேசி யழைப்பாள்
　　பிள்ளை போல்விளை யாட வருவாள்
அன்னை போலெனக் காதர வாவாள்
　　அதிசயம் ! அவ ளார் ?......கலைவாணி.

காலைக் கன்னியின் காந்த நகையில்,
　　கான் மலர்களின் காட்சிப் பொலிவில்,
சோலைப் புள்ளின் சுதந்தரப் பாட்டில்,
　　சுடர் பரவிடுஞ் சூரியக் கண்ணில்,
மாலைச் சாந்த மலர்மணக் காற்றில்,
　　வான் மதியில் வளர்கவி யின்பம்...
பாலைக் கன்று பருகுவ தொப்பப்
　　பருகு விப்பவ ளார் ? கலைவாணி.

இலை விரல்களால் இன்னிசை மீட்டி
　　என்னு ளத்தை யியக்குவள் பாட்டால் ;
மலை யருவியி லேமறை பாடி
வாழ்வி னுட்பொருள் வாய்விட் டுரைப்பாள்.
அலைக் கரத்தினல் ஆர்வ மெழுதி
　　அழித் தழித்துத் திருநடஞ் செய்வாள்
உலகம் என்சொல் விரிவென் றுரைப்பாள்
　　உண்மை; யாரிவள் ? ஓம் கலைவாணி.

## 12. ஏட்டில் எழுதியறியாத

(சிந்து பைரவி) (ஆதி தாளம்)

ஏட்டில் எழுதியறி யாத—என்
எண்ணச் சிகர ஒளி மீதே
பாட்டுப் பறவையுடன் வாழும்—ஒரு
பரமா னந்தஉல குண்டு.

சொல்லும் பொருளுமருள் கூடி—வந்த
சொக்கத் தங்கக்கவி போலே
அல்லும் பகலும் அதன் இயற்கை—தன்னில்
அழகின் அமுதரசம் ஊறும்.

கசந்த பிறவியினி உண்டோ ?—மனக்
கட்டும் கவலைகளும் உண்டோ ?
வசந்தச் சிறகுகொண்டு பறப்பேன்—இன்ப
வானக் கனியைமண்ணில் உதிர்ப்பேன் !

காலச் சுருதியுடன் கூடி—ஒளி
கலந்த அருவியெனப் பாடி,
நீல மணிப்பந்தலின் கீழே—என்றும்
நிருத்தஞ் செய்வதென தின்பம் !

## 13. காதலி வந்தாள்

(கவிக் காதலி)

(இ-ம் : நாதநாமக்ரியை) (ஜம்பை தாளம்)

காதலி வந்தாள்—கவிக்,—காதலி வந்தாள்
சோதி மயமான சுத்த மனத்திலே
நாத வடிவாக நர்த்தனம் செய்தின்பக் (காதலி)

மலர்மணக் காலே—தென்றல்,—மங்கலம் பாட,
கலகலவெனப் புட்கள் கலந்து வரவேற்கச்
சலசலத் தருவிகள் தாவு *மலேமிசை (காதலி)

அருண முகத்தாள்—பதி,—ளுயிரங் கலேயாள்
கருணே யகத்தினள், காந்த விழியினள்
வருணனேக் கெட்டாத வானத் திருமகள் (காதலி)

அழகென்னும் பெயராள்—என்வாழ்வினுக்,
கமுதினும் இனியாள்
பழகும் இயற்கையாம் பாங்கியுடன் கூடி,
இளந்திரு நகைவீசி என்னுள்ளம் பொங்கிடக்
(காதலி)

பூத்தொடுத் தீவாள்—நாணப்,—புன்னகை வாயாள்
தீத்திகழ் வெண்மரைச் செவ்வியள் என்கையைக்
கோத்து விழிமலர்க் கோணத்தாற் பார்த்தனள்
(காதலி)

அன்னப் பெடைபோல்—என்,—அருகே நடப்பாள்
முன்னேக் கதைகளும், பின்னேக் கதைகளும்
என்னே மகிழ்விக்கச் சொன்னவள், என்னவள்
(காதலி)

---

* பொதிகைமலே

## 14. கனவெனும் காதலியே

(நொண்டிச் சிந்து)

கனவெனும் காதலியே—என்
    கவிதைக் கலையுலக நாயகியே,
மனமெனும் தேர் நடத்தி—இந்த
    மண்டலத்தைச்சுற்றியின்பங் கொண்டுவருவோம்.
தினகர னுடன்பொலிவோம்—முழுத்
    திங்கட் படகினிலே சென்று மகிழ்வோம்.
வனமலர் கொய்வதுபோல்—இந்த
    வானமணி கொய்துசுடர் மாலையணிவோம்.

அந்தி மயக்கத்திலே—வானம்
    அணிமணித் தோகைவிரித் தாடையிலே
சிந்தை மயங்குதம்மா—புதுச்
    சித்திர நாடகம் திகழுதம்மா.
இந்த உலக மெல்லாம்—வந்தே
    என்னுடன் குழந்தைபோல் ஆடுதம்மா !
தந்திமித் தோமெனவே—எங்கும்
    தாண்டவம் புரிகிறன் ஆண்டவனே.

ஆற்று மணலினிலே—விளை
    யாடும் அமைதியிலே அறிவுகற்போம்
காற்றினிற் புகுந்திடுவோம்—உயிர்க்
    கணத்தினுக் குயிரெனக் கலந்திருப்போம்.
ஆற்றலை வளர்த்திடுவோம்—கலை
    யழகினில் அழகனை அணைந்திடுவோம்.
வேற்றுமை யில்லையம்மா—நம்
    வேதாந்தக் குடியர செல்லையிலே.

## 15. காட்டு வனப்பினிலே

(உசேனி) (ரூபகம்)

காட்டு வனப்பினிலே—சகியே,
காவியங் கொய்திடுவோம்
பாட்டுகள் பாடிடுவோம்—அங்கே
பாயும் அருவியுடன். (1)

மாசற்ற புன்னகையைப்—புதிய
மலரிற் கண்டுவப்போம்
காசுற்ற மாந்தர்நகை—சுயநலக்
காரிய வேஷமடீ ! (2)

வானம் வளைந்தணையும்—இந்த
வட்ட வுலகத்திலே
தேன்மலர்க் காற்றெனவே—சகியே,
திசைதிசை திரிவோம். (3)

மதி நிலவினிலே—தூய
மவுன நிசியினிலே
பதியன்பி லுதிக்கும்—அருட்
பாசுரங் கேட்டுவப்போம். (4)

அருணச் சோதியிலே—அழகை
அள்ளி யணைந்திடுவோம்—பரங்
கருணை ஆழியிலே—சகியே,
களிப்புடன் குளிப்போம். (5)

## 16. ஆடு ரோஜாவே!

(புன்னாகவராளி) (ரூபகம்)

ஆடு ரோஜாவே—காலை
அழகு ரோஜாவே,
பாடுந் தென்றலுடன்—மணம்
பரவும் ரோஜாவே !

கடிய முள்ளிடையே—நீ
கனிநகை புரிவாய்,
கடிய முட்களெல்லாம்—உன்னைக்
காக்கும் வாட்கணமோ ?

உன்னைக் கிள்ளையிலே—என்
உயிர் நடுங்குதடீ !
வன்மன வுலகம்—அழகை
வாழ வொட்டாதோ !

உரிய காலத்திலே—உனைப்போல்
உவந்து வாழேனோ ?—எல்லார்க்கும்
பிரிய மாகேனோ—ஈகை
பேணி வாழேனோ ?

அகங் குளிருதடீ—என்
அருண ரோஜாம்பா !
முகங் கசங்காதே—செல்ல
முத்தங் கொஞ்சுகிறேன் !

## 17. மேகத்திரையை

(*பிலகரி*) (*திஸ்ரஏகம்*)

மேகத் திரையைப் பிளந்து விரைகின்றாய்—மின்னலே—ஒரு
மோகன மின்சாரங் காட்டி மறைகின்றாய்—மின்னலே !

தாகந் தணியத் தணல்நகை செய்கின்றாய் மின்னலே—என்னைச்
சோகத்தில் ஆழ்த்திநீ சொக்கி மறைவதேன் ? —மின்னலே !

வெளிச்சங் காட்டி இருட்டை வெருட்டுவாய் மின்னலே—உடன்
பளிச்சென் றென்கண் பறித்துக்கொண் டேகுவாய்—மின்னலே !

நில்லு நில்லெனக் கெஞ்சிடுவேன் உன்னை—மின்னலே—இங்கு
நில்லா வுலகியல் வாழ்வெனச் செல்லுவாய்—மின்னலே !

காண வுன்னையென் கண்ணைத் திறக்குமுன்—மின்னலே—நீ
நாணிக் கோணி நடித்தெங்கு செல்கின்றாய் ?—மின்னலே !

சிற்றிடைதுவ ளச் செங்கால் வீசுவாய்—மின்னலே—உன்னைப்
பற்றிக் கொள்வேனென் றோபயந் தோடினாய் ?—மின்னலே !

தடதடவென் றிடிமுர சார்த்திட மின்னலே—நீ
நடன மாடு நயமென்ன சொல்லுவேன்—மின்னலே !

மன்னுல கில்வந் தென்னையணையென்பேன்—மின்னலே—'அடா
என்னைப் போலத்தான் இவ்வுடல் வாழ்' வென்பாய்-மின்னலே !

ஞானவேட்கைகொண் டேயுனை நச்சுவேன்—மின்னலே—'அது
மோனம்' என்று மொழியொன் றெழுதுவாய்—மின்னலே !

## 18. ஓலமிட்டிடுந்த

(காலக்கடல்)

(ஆரபி ராகம்)

ஓலமிட் டிந்த உலகை விழுங்கும்
காலக் கடல்முன் கனவுகள் கண்டேன் !
திரைகள் துள்ளித் திருநடம் புரிந்த
காட்சியைக் கண்டேன் கலைவெறி கொண்டேன் !
காற்றின் பாட்டைக் கேட்டு மகிழ்ந்தேன் !

முரசொலி கேட்டேன் அரசொலி கேட்டேன்.
திரை திரையாகச் சேனை யெழுந்து
முண்டிப் பொருது மோதி வளைந்து
நுரை நுரையாக நொடியி லழிந்தன.
துள்ளின மீன்கள் துள்ளின சங்கம் !

கண்ணியில் இடித்த கப்பலைப் போலே
'ஹா' வெனக் குமுறி ஆழ்ந்தன யாவுமே.
மறி திரை முன்னே மண்மனை கட்டி
ஆடும் சிறுவரின் அமளியைக் கண்டேன் ;
" நானே பெரியவன் நானே உரியவன்

போ நீ வெளியே ; போர்செய் என்னுடன் !
எனதே சமயம், எனதே நாடு ;
உந்தோல் கறுப்பே, எந்தோல் வெளுப்பே
ஆண்டான் யானே அடிமை நீயே
என்றவர் சண்டை யிட்டதென் சொல்வேன் !

பக்கெனச் சிரித்துப் பாய்ந்தொரு பேயலை
விழுங்கி யெல்லாம் வீறிட் டதுவே !
மணல்வீ டில்லை ; மக்களு மில்லை ;
ஆட்டம் ஓய்ந்த அரங்கே கண்டேன்,
" ஏனிக் கொடுமை ?" என்று கூவினேன் !

" நானே காலம், நானே கோலம்,
வாழ்க்கையென் ஆடல் ! வாழும் உயிரெலாம்
என்பசிக் குணவே !" என்று மணலில்
எழுதி யெழுதி இசைத்தது கடலே,
" நீயுமென் உண"வென நீண்ட தோர் அலையே!

## 19. கர்ச்சனைசெய் கடலே

(திந்துபைரவி) (ரூபகம்)

கர்ச்சனை செய் கடலே—சுதந்தரக்
கர்ச்சனை செய் கடலே—ஸமரஸக்
கர்ச்சனை செய் கடலே—வேதாந்தக்
கர்ச்சனை செய் கடலே !
சச்சிதா னந்தப் பரம்பொருள் ஒன்றெனக்
கர்ச்சனை செய் கடலே—உலகிற்குக்
கர்ச்சனை செய் கடலே ! (கர்ச்சனை)

தட்டுத் தடைகளை முட்டியெறிந் தின்பத்
தாண்டவஞ் செய் கடலே—பரவசத்
தாண்டவஞ் செய் கடலே—கைகள்கொட்டித்
தாண்டவஞ் செய் கடலே !
கட்டுகள் விட்டு விடுதலை யாம்வழி
காட்டிடுங் கடலே—கவலையை
ஓட்டிடுங் கடலே—ஞானக்கனல்
மூட்டிடுங் கடலே ! (கர்ச்சனை)

அள்ள அள்ளமணி முத்தும் பவளமும்
அளித்திடுங் கடலே—நவநிதி
தெளித்திடுங் கடலே—என் ஆர்வங்
குளித்திடுங் கடலே !
உள்ள வமைதியில் ஓம்தத்ஸத் ஓமென
ஒலித்திடுங் கடலே—மதியுண்டு
கலித்திடுங் கடலே—மழைமுகில்
பலித்திடுங் கடலே ! (கர்ச்சனே)

நாத வெளியினில் வேதப்பொருள் பாடி
நர்த்தனஞ் செய் கடலே—புயல்கள்
மத்தளங் கொட்டிடவே—மீன்களெல்லாம்
தத்திக் குதித்திடவே...
ஆதி பராசக்தி யுன்னுருக் கொண்டனள்
அருட்பெருங் கடலே—வணக்கம்
அருட்பெருங் கடலே—வாழ்கநீ
அருட்பெருங் கடலே... ! (கர்ச்சனே)

## 20. கதை சொல்லு கடலே

(தீரசங்கராபரணம்) (ஜம்பை)

கதைசொல்லு, கதைசொல்லு கடலே—இந்தக்
காதல் உலகினைக் கட்டித் தழுவி ...
மதியுண்டு களிகொண்ட கடலே—சாவை
மதியாத சுதந்தரச் சுதிசெய்யும் கடலே. (கதை)

வானத்தை எட்டிடத் தாவும்—நின்
வாழ்க்கையிலே ஒரு வாக்கியந் தாராய்.
மோனத்தை ஒளியாகத் தூவி—ஜகன்
மோகன சூரியன் தாகந் தணிப்பாய். (கதை)

பெய்யு மழைமுகி லீட்டம்—உன்
    பேச்சினைச் செய்கையிற் பேசிடுங் கூட்டம்.
பொய்யக மாயத்தை வெல்ல—வீரப்
    போர்முர சார்த்திடும் கார்கட லண்ணு (கதை)

## 21. ஞாலப் புகழ்

(பைரவி) (ரூபகம்)

ஞாலப் புகழ னைத்தும்—அதை
    நாடும் உடல னைத்தும்
காலப் புழுதியிலே—அணுவாய்க்
    கலந்து போகுமடா

புல்லாங்குழலான—வாழ்வைப்
    பூரணன் கையினிலே
பல்லாண் டிசைத்திடவே—தருவாய்
    பாழுந் துயர் மனமே..

பொய்யடைந்தே வருந்தும்—நெஞ்சைப்
    புண்ணியன் அன்பினுக்கே
கையடை யாய்க் கொடுத்தால்—அமிர்த
    கலச மாகுமடா..

அற்ப மனிதவுயிர்—அதனை
    அழகனுக் களித்தால்,
பொற்புறு சிற்பமடா—அந்தப்
    புலவன் கைநயத்தால்..

## 22. படகோட்டும் காதலனே

( காதலி ஜீவாத்மா ; காதலன் பரமாத்மா.)

(வராளி) (ஜம்பை)

காதலி :

படகோட்டுங் காதலனே—என்
பயமோட்ட மாட்டாயோ ?
இடரோட்டத் தப்பிவந்தோம்—இந்த
இருள் வெள்ளந் தாண்டுவமோ ?

போர்வீசும் இக்கரையில்—கொடும்
புயல்வீசும் வெள்ளத்திலே
பார்வீசுந் துன்பமெல்லாம்—சிறு
படகாலே தாண்டுவமோ ?

படகோட்டி :

அஞ்சாதே கண்மணியே—என்
ஆருயிர்ப் பஞ்சரமே !
வெஞ்சினங் கொண்டடிக்கும்—புயல்
விளையாட்டை வென்றிடுவோம்.

போராடும் வெள்ளத்திலும்—ஒரு
புதுப்பாட்டு வீறிடுமே.
காரார் முரசடிக்க—அங்கே
கம்பிமின்னல் ஆடிடுமே !

என்னுள்ளே நீயிருக்க--உன்னை
எமனும் தொடுவானோ !
பொன்னில் மணியெனவே—உள்ளம்
பொருந்தினால் அச்சமுண்டோ ?

காதலி :

பக்கத்தில் நீயிருக்க—இனிப்
பயமொன்றும் இல்லை அத்தான்!
அக்கரை சேர்ந்ததுவும்—நம்
அல்லல் ஒழிந்திடுமோ ?

படகோட்டி :

இருளுங் கரைந்ததுபார்—ஞான
இரவி எழுந்ததுபார் !
அருளின் அழகினைப்போல்—அதோ
அக்கரை மின்னுதுபார் !

துன்பம் வெடித்தெழுந்த—நல்ல
சுகத்தை அனுபவிப்போம் !
அன்புக் கனிகளுண்போம்—வாழ்வை
ஆனந்த மாக்கிடுவோம்.

கவியும் கனவுமென—நாம்
கட்டற்றுச் சுற்றிடுவோம்.
புவியில்விண் இன்பமெல்லாம்—வரும்
பூங்கா வனமிதுவே !

## 23. காலை பூத்தது

(பிலகரி ராகம்)

காலை பூத்தது, கனகம் பூத்தது ;
காவியம் போலே பூவினம் பூத்த ;
பூங்கா லுடனே பூத்தது புள்ளிசை ;
கண்கள் பூத்தன ; பண்கள் பூத்தன ;

நீலக் கடலையும், நீல வானையும்
பார்த்துப் பார்த்துப் பரவச மானேன்.
அமைதியிற் காணும் அழகே யழகாம்
அமைதியைக் கெடுக்கும் அகந்தை வெறிகள்
எழுப்பியென் னுணர்வை மழுப்பிய தென்னே !

— " இந்து சமயமா, இஸ்லா மியமா ?
பைபிளா, தம்ம பாதமா வுண்மை ?
சைவமா, வைணவ சமயமா பெரிது ?"

" சாதி சமயத் தலைவலி யொழிக !
பாரும் கிழக்கே பரிதியை !" என்றேன் :
அலைகளை யெல்லாம் கலையொளி யாக்கிக்
கலகல வென்று கதிரவன் சிரித்தான்.
மவுனச் சிரிப்பின் மர்ம மறியக்
கடலை நோக்கினேன், காற்றைக் கேட்டேன் ;
கடற்காற் றுரைத்த கட்டுரை கேளீர் :—

" விளக்கைக் காட்டிலும் விண்சுடர் பெரிது ;
மீனகந் தன்னிலும் வானகம் பெரிது ;
அலையைக் காட்டிலும் ஆழியே பெரிது ;

பேத புத்தி பிதற்றி யலையும்
சாதி சமய சாத்திர கோத்திரச்
சண்டையைக் காட்டிலும் சாந்தமே பெரிது ;
உரைகளைக் காட்டிலும் உள்ளமே பெரிது ;
தத்துவ நூலினும் சத்தியம் பெரிது ;
மதத்தைக் காட்டிலும் மானிடம் பெரிதே ;

ஒன்றே உண்மை உலகெலாம் அதுவே !"

இம்மொழி கேட்டுத் தம்மொழி இறந்தே
சமயப் பித்தர் சமரச ராஞர்.
" இது நலம் " என்றே கதிரவன் சிரித்தான்.

## 24. ஆட உலகமெல்லாம்

(செஞ்சுருட்டி) (ஆதி)

ஆட உலக மெல்லாம் அளித்தாள்—என்
ஆடல் கண்டு கண்டு களித்தாள்—நான்
வாடக் கண்டு மனஞ் சகியாள்—என்னை
வாஞ்சையுடன் வளர்க்கும் புவியாள்...

தங்கக் கைமலரை நீட்டியே—மனந்
தாங்காத அற்புதங்கள் காட்டினள்
மங்கும் மடமையிரு ளோட்டினள்—ஒரு
மங்கலப் புன்னகையின் பாட்டினல்...

அன்னை அருளமுத வாரியே—என்
அன்பை வளர்க்கும் உபகாரியே—என்னைச்
சின்னக் குழந்தையெனக் கொஞ்சுவாள்—கவித்
தேனைப் பொழிந்தெனது நெஞ்சமே...

## 25. கார்ப்புயலை

(செஞ்சுருட்டி) (திரிபுடை)

கார்ப்புயலை வெட்டுகின்ற கம்பி மின்னல் போலே,
கவலையிரு ளோட்டியென்னைக் கண்பார்த்து நின்றாள்.
யாரென்றே யதிசயித்தேன் ! அழகுமணித் தெய்வம் !
அன்னைசக்தி வாழ்கவென்றே பொன்னடியிற் பணிந்தேன்.

பளபளக்கும் பச்சைவளக் கம்பளத்தின் மீது
பாய்ந்துநட மாடுகின்றாள் பண்ணருவி பாட ;
உளமகிழத் தென்றலிலே இளந்தமிழ்யாழ் மீட்டி,
உருக்குகின்றாள், இன்பவெறி பெருக்குகின்றாள் அன்னை !

ஏராளப் பணக்குவையில் ஏமாந்து நில்லாள் ;
ஏமாற்றுங் காமுகரை எற்றிவிலக் கிடுவாள் ;
பாராளு வோர்க்குமிவள் தாராள மாகாள் ;
பரிசுத்த யோகியரைத் தரிசித்து நிற்பாள் !

## 26. அழகுத் தெய்வத்தை

(காம்போதி) (ஆதி)

அழகுத் தெய்வத்தை வாழ்த்தி வணங்குவோம்,
அழகுச் சோலையில் அன்புறக் கூடுவோம்,
அழகின் இன்பத்தை ஆருயிர்க் கூட்டுவோம்,
அழகை வாழ்வெனும் வீணையில் மீட்டுவோம்.

இய லழகை யிலக்கியம் ஆக்குவோம்,
இயற்கை யுள்ளத்தில் இன்னிசை காணுவோம் ;
இய லுணர்வைச் சிலையில் இலக்குவோம்,
எழுது வோம்பட மாய்இயல் வாழ்க்கையை ;
கயல்விழி, கனிவாய் மலர்க் கைகளால்
கருதும் பாவனை காட்டி நடஞ்செய்வோம் ;
செயல்க ளாயிரஞ் செய்வோங் கலைகளால்,
செகத்தினிற் புதுச் சிற்பிக ளாக்குவோம்.

கலையி னுல்உல கொற்றுமை காணுவோம்,
கலையி னுற்கருத் தைவிரி வாக்குவோம் ;
கலை மகளின் கவின்பெருங் கோயிலில்
கைகள் கோத்துக் களிப்புடன் ஆடுவோம் ;
விலையி லாமல் விரைந்திடுங் காலத்தை
வீண்செய் யாது கலைவினை வேற்றுவோம் ;
நிலையி லாநதி நேரிய வாழ்க்கையை
நீண்ட காவிய மாக்குவந் தோழரே !

## 27. தென்றல் வருகுது

(இரசங்கரபராணம்) (திரிபுடை)

தென்றல் வருகுது தென்றல் வருகுது
தேனுண்ட வண்டொலிக்க,
மன்றல் புரிந்து மலர்களைக் கொஞ்சி
மணந்திட மேனி யெல்லாம்,
அன்றிலும், கிள்ளையும், அன்னமும், பூவையும்
அந்தி வணக்கம் செய்தே,
ஒன்றிநல் அன்புப் பெடையோ டுறங்கிட
ஓராட்டுந் தாயெனவே.

மந்திர வேதங்கள் கீதங்கள் கோயில்
மணிகள் கணீ ரெனவே,
சுந்தர மாதர் குரலும், விரலும்,
சுதியுடன் சொக்கிடவே
தந்திமித் தோமென மத்தளம் யாழைத்
தழுவி முழங் கிடவே,
சந்தம் பொழிந்து தவழ்ந்து வருகுது
சந்தனத் தென்ற லேயே !

வெள்ளி நிலவைத் தழுவி விளையாடி
விம்மி வரும் காற்றே ;
பிள்ளை போல்வந்து மழலைகள் பேசிப்
பிரியம் வளர் காற்றே !
உள்ளங் குளிர வுனைமுத்தங் கொஞ்சிட
வுருவினைக் காட்டாயோ ?
அள்ளிக் கலந்துன்னைப் பாட்டும் மணமும்போல்
ஆடித் திரி யேனோ !

சீவக் குழலிற் சுழன்றிசை பாடித்
திரியும் உயிர்க் காற்றே ;
வாவென்று வான்மழை தன்னை யழைத்து
வளஞ்செய் பசுங் காற்றே !
தாவி யணைத்தென்னை மெய்யின்பந் தந்திடும்
தண்ணிளந் தென்ற லம்மா !
பூவெங்கும் உன்னுடன் போந்து முதல்வன்
புகழைப் புகலேனோ !

## 28. அருவி மழை

அருவி மழையினிலே
ஆட்டி யொரு பாட்டொலிப்பாள்
குருவியிலே பாடியென்னைக்
கொஞ்சி யழைத்திடுவாள்—

மண்ணேறிப் புண்ணேறி
மாசேறி வாடாதே
கண்ணே எனக் கழுவிக்
கனகம்போ லாக்கிடுவாள்.

சாவும் பயந்தோடச்
சக்திக் கனல ளிப்பாள்
யாவும் அவளே
இயற்கையெனும் பேருடையாள்.

## 29. உள்ளங் குளிர வரும்

(வெள்ளித் திங்கள்)

(வசந்தா) (ஆதிதாளம்)

உள்ளங் குளிரவருந் தென்றல்—குழல்
ஊதி இன்பவெறி யூக்கக்
கள்ளவிழ் அந்திமலர் நகைக்க—வண்டு
காதல் காதலென்று முரல

வெள்ளித் திரைகள் உன்னை யணைய—மார்பு
விம்மிப் புரண் டலைந்து கூவ
பிள்ளைச் சிறுகரங்கள் அழைக்க—நெஞ்சிற்
பித்தேற்றுஞ் சந்திரனே வாராய் !

அல்லி விழித்துன் ஒளி பருகக்—கண்
அயர்ந்து தாமரைகள் உறங்க,
சொல்லை விழுங்கும் ஒரு கனவில்—ஆழ்ந்து
ஜோடிப் புள்ளினங்கள் சொக்க ;
எல்லை யற்றவெளி யெங்கும்—ஓம்
என்றோர் இனியகுரல் ஓங்க—அந்தி
முல்லை மலர்ந்து மணம்வீச—விண்
முடிமணி போல்வருக திங்கள் !

ஆடுஞ் சிறுவர் களிதுள்ள—தாயர்
அம்புலி காட்டியமு தூட்ட—அன்பர்
பாடும் பஜனை யிசைபரவ—வெண்
பட்டு நிலா விரிந்தவெளியில்,
கூடும் நண்பர் கதைசொல்ல—மனங்
குளிர மகிழ்ந்து தனி யின்பம்
நாடும் வதுவரர் கொண்டாட—வாராய் !
ஞாலத்திற் கிதஞ் செய்யுமதியே !

மீனூர் மலர்க்குளத்தி னூடே—தவழ்
வெள்ளி யன்னமென வாராய் !
வானக் கடல் கடந்துமெல்லச்—செல்லும்
வன்னத் தோணியென வாராய் !
மோனப் புன்னகையி னுலே—எம்மை
மோகப் படுத்துமுகங் காட்டி,
தேனூத்த செந்தமிழின் அமுதம்—பொழி
திங்கள் வருக நலம்பொங்க !

## 30. நிட்டை செய்யும்

(குந்தல வராளி) (ஜம்பை)

நிட்டை செய்யு மலையினை
    நீண்ட வேதப் பாட்டினுல்
கட்டித் தழுவும் அருவிபோல்
    கருணை தன்னை மருவுவேன்.

மலரிலே மணந்திடும்
    மண வழகன் மேனியை
உலகிலே தழுவினுல்
    உயிர் சிலிர்த்து மகிழுமே...

வானமாய் வளைந்து லகை
    வாரியே யணைந்தவன்
ஊனிலே உயிர்ப்பவன்
    ஒருவன் என இருவனே !

## 31. மானே மரகதமே!

(நிலா விளையாட்டு)

(புன்னாகவராளி) (ரூபகம்)

முதற் கட்சி இரண்டாங் கட்சி

மானே மரகதமே— சோலை—மயிலே இளங்குயிலே !
தேனே திருமகளே— மலர்—செழித்த பசுங்கொடியே !
வெள்ளிப் படகொன்று— வானில்—விளங்குவதைப் பாரடியோ !
புள்ளைப்போ லேபறந்தே—அதிற்—போகோமோ பெண்ணமுதே!
நீள விரிந்ததம்மா— மேலே—நித்திலப் பந்தலைப்பார் !
வாளொத்த கண்ணிமைத்தே—நம்மை-வாவென்னும்
தாரகையே !

விண்ணெல்லாம் பொன்
னெழுத்தாம்— அந்த விரிநூலைக் காணடியோ !
கண்ணுளர் கையெழுத்தாம்—எல்லாம்-காதல் விளக்கமடீ !
தங்கக் குடத்தினிலே— தோழி-தழைத்தோங்கும் பாலமுதைத்
திங்கள் பொழியுதடீ— அது—தெவிட்டாத வெள்ளமடீ !
சொல்லாத புன்னகையால்—நாங்கள்—சொக்கித் தலைகிறுக்க,
முல்லையிலே மணப்பான்—ஆசை—முத்தத்தி லேயிருப்பான்.
வட்ட முழுமதியாம்— அந்த—வைரமணித் தட்டினிலே
வெற்றிலை பாக்குவைத்தே—நம்மை—விரும்பி யழைக்கின்றான்.
மானை வளர்மதியால்— இந்த—வாழ்வுக் கடல்பொங்கி
மோனை யெதுகையில்லாப்-பாட்டை-முழக்குவதைக் கேளடியோ!
கவிதைச் சிறகடித்தே— தோழி—ககனத்தில் ஏறிடுவோம்
புவிமீதில் அங்கிருந்தே நல்ல புதுவாழ்வை நாட்டிடுவோம்.

## 32. இனிய வசந்தக் குழல்

(காம்போதி) (ஆதி)

இனிய வசந்தக் குழல் கேட்டேன் ;
இதயம் விழித்துக் கண் விழித்தேன் ;
கனியும் மலருங் கொண் டெதிரே
காலைக் கன்னி புன் னகைத்தாள் ;

‘புனித மான பொன்னழகே,
பொங்கும் அமுத மங்கலமே,
மனித வாழ்வு மகிழ் வோங்க,
வகை சொல்’ என்று வணங்கி நின்றேன்

வண்டு பாடு மலர் காட்டி,
வளருங் கனியின் பொழில் காட்டி,
புண்ட ரீகப் பொய்கையிலே
போகும் அன்னப் புள் காட்டி,

விண்ட லத்தின் சுடர் காட்டி,
வேகக் காற்றின் விதி காட்டி,
உண்டு வாழும் உயிர் மகிழ
உண்டு வழியென் றெளியாளாள்!

## 33. பொங்குதே புன்னகை

(புன்னகை வெள்ளம்)

(கமாஸ்) (ஆதி)

பொங்குதே புன்னகை வெள்ளம்—வானும்
பூமியுங் கூடிக் குழைந்திடும் போதிலே !
எங்குமே காதல் விருந்தாம்—அதில்
எத்தனை யெத்தனை முத்தழ குத்திரள் !
செங்கதிர்க் காலையின் மார்பில்—எழும்
தீயிற் பிறந்த திருக்களைப் பாரீர் !
திங்க ளிரவினைச் சுற்றி—அங்கே
சிந்திக் கிடப்பன அந்தி மலர்கள் (பொங்)

அன்னந் தவழ்ந்திடும் பொய்கை—அதில்
ஆயிரந் தாமரைக் கண்கள் அடாடா !
பொன்னிறக் காலைக் கதிரால்—அவை
பூரித்துப் பூரித்துப் பொங்கி மகிழும்
புன்னகை யின்பமென் சொல்வேன் !—அந்தப்
பொன்னகைத் தேனைப் புசித்துக் களித்தபின்
இன்னியல் காட்சி யுலகம்—எல்லாம்
இன்ப மயமென நம்பி யிருப்போம் (பொங்)

## 34. ஞானி யுள்ளம்போலே

(வான் விளக்கம்)

(சிம்மேந்திரமத்திமம்) (ஆதி)

ஞானி யுள்ளம் போலே—வியன்
    ஞால மீதெழுந்த—நீல
வான் வளைவைப் பார்த்தேன்—அடடா
    வர்ணச் சேலை கட்டி—சக்தி
நானென் றங்கு நின்ருள்—காலை
    நாண்மலர்கள் சூடிச்—சாந்த
மோன ஞாயி றென்னும்—ஒரு
    முத்துப் பூத்த தையே !

கோடி மீன்க ளெங்கே ?—ஆந்தை
    கூவுங் கங்கு லெங்கே ?—எல்லாம்
ஓடிப் போன தையே—அரு
    ளுண்ட தொண்டர் வினைபோல் !—கண்
மூடித் தூங்கு வாரோ—பூ
    முகை யவிழ்ந்த பின்னும் ?—சுற்றும்
ஆடிப் பாடி வையம்—தொழில்
    அரங்க மாச்சு தையே !

எங்குஞ் சோதி வெள்ளம்—அந்த
    இந்த்ர ஜால நகையால்—புவி
தங்கக் கோயி லாச்சே—சிவ
    சக்திக் கோலம் ஆண்பெண்—சுப
மங்க லஞ்செய் மனையில்—வாழ்வின்
    வளமை யோங்கு தையே—இன்பம்
பொங்கப் பார்த்து நின்றேன்—சுழல்
    பூவின் அற்பு தங்கள் !

## 35. பொன்னுயிர்த்த கதிரோன்

(காம்போதி) (ஆதி)

பொன் னுயிர்த்த கதிரோன்—தணல்
போல மேற்கே சென்றான்—அந்தி
வன்ன மேனி தாங்கி—வாச
மல்லி கை முடித்தே—சக்தி
முன்னர் வந்து நின்றாள்.—நீண்ட
மோக னக்க னவில்—முற்றும்
என்னை யான் மறந்தேன் ;—தென்றல்
எழுப்பக் கண் விழித்தேன் !

மாய மென்ன சொல்வேன் !—கனல்
*வைரங் கோடி சூடி—கருஞ்
சாயச் சேலை கட்டி—சின்னத்
†தங்கக் கிண்ண மேந்தி—சக்தித்
தாயமுத மீந்தாள்—அதைத்
தாங்கி யுண்ட வுடனே—என்றுஞ்
சேய்போ லின்ப முற்றேன்—என்
சிந்தை குளிர்ந்ததையே !

யானைக் கூட்டம் போலே—‡மேகம்
அந்த ரத்தைச் சூழ்ந்தே—நல்ல
மோனை முத்தமிழ் போல்—இடி
முழங்கு கின்ற தையே !—அருட்
சோனை மாரி யூடே—§மின்னல்
சொலித்தென் னுட் புகுந்தே—||பர
வானைக் காட்டும் போதே—நான்
மவுன மானே னையே !

---

* விண்மீன்கள் † மூன்றாம் பிறைச் சந்திரன் ‡ கருணை மேகம் § அருளறிவு || தூரியவிண்.

## 36. தங்க மணியினைப் பாரடி!

(குயிலும், கூண்டுக் கிளியும்)

(ஆனந்த பைரவி) (ஆதி)

கிளி

தங்க மணியினைப் பாரடீ—அடியென்
தங்கக் கொலுசினைப் பாரடீ !
எங்கும் அலையாமல் வாழ்கிறேன்—இவர்
ஈந்த கனிகளை யுண்கிறேன் ;
இங்கெனக் கென்ன குறையடீ—பூனை
ஏறி வராதிந்தக் கூண்டுளே !
எங்கலை கின்ருய், குயிலக்கா—நீயும்
என்ளுே டிருந்திசை பாடடீ !

குயில்

குக்கூகூ குக்கூகூ தங்கைச்சி—சற்றே
கோபப்ப டாதிதைக் கேளடீ !
திக்கெல்லாந் தாவிப் பறந்திட—நீள்
சிறகைக் கொடுத்தவன் மூடனே ?
சொக்குத்தங்கம் எனப் பீத்துருய்—இது
தொத்தடி மைச்சிறை யல்லவோ ?
துக்கமென் மார்பை யடைக்குதே—ஏண்டீ
தோழீநீ கைதியாய்ச் சாகிருய் ?

வன்ன வியற்கை யழகிலே—வாழா
வாழ்வு வனுந்தர மல்லவோ ?
சொன்னக் கனியெனச் சூரியன்—எங்குஞ்
சோதி யமுதம் பொழிகிருன்.

உன்னுட லுக்கவ் வொளியுண்டோ ?—மதி
யூற்றுவெண் பாநில வுண்பையோ ?
அன்னிய மாய வலையிலே—சிக்கி
ஆன்மாவைக் கொல்லாதே தங்கைச்சி !

தீந்தமிழ் போன்ற மணத்தென்றல்—வீசுந்
தேங்கனிச் சோலை யுனக்குண்டோ ?
காந்தரு டன்கூடிக் குஞ்சுகள்—வளர்
காத லினிமை யுனக்குண்டோ ?
சாந்தவிண் ணேறிப் பறந்திடும்—அந்தச்
சந்தோஷ வாழ்க்கை யுனக்குண்டோ ?
மாந்தரை நாமொரு கூண்டிலே—வைத்து
மாங்கனி தந்தால் இருப்பரோ ?

காலையி லேயிரை தேடுவோம்—பசுங்
காடுகளிற் கூடிப் பாடுவோம்—அந்தி
மாலையிலே விளை யாடுவோம்—பின்பு
மங்கல நன்மனை சேருவோம்—அங்கே
கோலக் கவிக்கன வென்னவே—சுகங்
கொண்டு மயங்கித் துயிலுவோம்—இந்த
ஞாலமெல் லாஞ்சிறு நெஞ்சிலே—ஒரு
நாடகக் காட்சிபோற் காணுவோம்.

கிளி

உண்மையி துண்மை குயிலக்கா !—கூண்டை
ஓங்கி யுடைக்குதென் ஆத்திரம்—ஒரு
மண்ணும் பயனின்றி யிப்படி—நான்
மாய மயக்கினில் வாழ்வதோ ?
மண்ணுல கெல்லாமென் வீடடீ—அதில்
வாயுவைப் போலே யுலாவுவேன்
விண்ணை யளந்து மகிழுவேன்—உடன்
விடுதலை, விடுதலை வேண்டினேன்.

## 37. சின்னஞ் சிறுவுடலாம்

(பறவை இன்பம்)

(பைரவி) (ரூபகம்)

சின்னஞ் சிறு வுடலாம்—கூர்ந்த
செங்கனிபோல் அலகாம் ;
வன்னப் பசுஞ் சிறகாம்—இரு
மாயக் கருவிழியாம் ;
சன்னக் குறுங் காலாம்—இந்தச்
சாந்தக் கிளிபோலே
என்னுயிர் வாழாதோ—கவலை
யின்றித் திரியாதோ ?

சோலைக் கனியுண்பேன்—ஈசன்புகழ்
சொல்லிச்சொல்லி மகிழ்வேன் ;
காலை மலருடனே—கொஞ்சுங்
காற்றுடன் கொஞ்சிடுவேன்,
மாலைச் சிவப்பினிலே—ஆகாய
வங்க மெனப் பறப்பேன்,
வேலைக் கடலையுழும்—படகின்
மீது நடந்திடு வேன்.

பஞ்ச மெனக் குண்டோ—வயிற்றுப்
பார மெனக் குண்டோ ?
வஞ்ச மெனக் குண்டோ ?—விசன
வாடை யெனக் குண்டோ ?
அஞ்சாது காதலிப் பேன்—என்
அன்புப் பெடை யுடனே
குஞ்சுக் கிரை கொடுப்பேன்—சுதந்தரக்
கூடு கட்டி வளர்ப்பேன்.

## 38. சிட்டுக்குருவியைப் போல்

(உசேனி) (ரூபகம்)

சிட்டுக் குருவியைப் போல்—ஒரு
சிக்கின்றி வாழேனோ
பட்டு நிலாவினிலே—அன்னத்துடன்
பறந்து செல்லேனோ ?
வட்ட மிடுங் கருடன்—அதனுடன்
வானை யளாவேனோ ?
கட்டுகளை யுதறிக்—குயிலெனக்
காவியம் பாடேனோ ?

கொக்குத் திருக் குலங்கள்—விமானக்
கூட்டமெனப் பறக்கும்—அந்தத்
திக்கினி லென் மனமும்—எதையோ
தேடிப் பறக்குதம்மா !
சக்கர வாகத்தைப் போல்—உப
சாந்த நிலாவினிலே
சொக்கும் பரவ சத்தால்—அருட்
சோதியைப் பாடேனோ !

கொண்ட லாத்தி யுடனே—நாளுங்
கொஞ்சி மகிழேனோ ?
வண்டுடன் ஓமொலித்தே—ஞான
மலரைத் தேடேனோ ?
கண்ட திசையெல்லாம்—உயிர்க்
கண்ணனைக் காணேனோ—மனஞ்
சென்ற திசை யெல்லாம்—பேரின்பத்
தேங்கனி யுண்ணேனோ !

## 39. புள்ளுருக் கொண்டு

(கவிக் குருவி)

(பேஹாக்) (ஆதி)

புள்ளுருக் கொண்டுவந்தேன்—உன்னுடன்
 பொங்கி மகிழ்ந்திடவே
துள்ளு மனச்சிறகால்—வானைத்
 துருவிக் கொண்டுவந்தேன்.

நாதக் கனவினிலே—பிடித்திந்த
 ஞாலத்தைக் கொண்டுவந்தேன்
காதல் பெருகுயிரை—உனக்கே
 காணிக்கையாக வைத்தேன்.

காடு வனமெல்லாம்—சகியே,
 கனி மரங்களெல்லாம்
வீடு நமக்கன்றோ—நமக்கினி
 விசன மேதுக்கடி ?

அந்தர மின்னணுக்கள்—நடனம்
 ஆடிச் சுழன்றிடவே
சுந்தரப் பாட்டொலிப்போம்—ஓங்காரச்
 சுருதி யோடிணைந்தே.

ஆகாச வீதியெல்லாம்—சகியே,
 ஆனந்த வீதியடீ !
தேகச் சுமையறியோம்—கவலையாற்
 சித்தந் தளர்ந்தறியோம்.

கோடி யழகணிகள்—உலகெங்கும்
குலுங்கு கின்றதடீ—இங்கே
கூடிக் குழைந்திடுவோம்—சுயேச்சையாய்க்
கூடுகட்டி வாழ்வோம்.

மேகப் படலத்திலே—தவழும்
மின்னற் கொடியினைப்போல்—உன்
மோகப் படலத்திலே—என்னுளை
மூழ்கித் தவழுதடீ !

## 40. கொட்டு கொட்டு

(அருவிப் பாட்டு)

*(கல்யாணி)* *(திரிபுடை)*

கொட்டு கொட்டு குற்ருலத் தருவியே
கோடி மின்னல் இடியெனக் கூடியே !
கொட்டு கொட்டுவெம் போர்முர சென்னவே
கோடி சிங்கக் குரலெனக் கர்ச்சித்தே !
எட்டுத் திக்கும் எதிரொலி வீறிட
ஈனத் தீமைகள் ஓட்டம் எடுத்திடத்
தட்டுத் தட்டுத் தடாரென வேகமாய்த்
தாவித் தாண்டவஞ் செய்திசை பாடியே! (கொட்டு)

மலையின் உள்ளத்தைப் பாடி வருகின்ருய் ;
வலிய பாறையை வாவி விரைகின்ருய் ;
பொலியுந் தெய்வப் பொருளை யுரைக்கின்ருய்;
பொறிக ளோடமின் சார மளிக்கின்ருய் ;
நிலஞ் செழித்திட நின்னை யளிக்கின்ருய் ;
நித்தி யக்கடல் சேரநீ செல்வழி,
அலை மனத்தை யடக்கி இறைவனை
அறிய நல்லுப தேசமுஞ் செய்கின்ருய் :—(கொட்டு)

திரங் கொண்டு திறம்பட வாழுவாய் ;
திரு வருளைத் தினந்தினஞ் சிந்திப்பாய் ;
காரங் கொண்டுடை கட்டுகள் யாவையும் ;
காலத் தின்வழி கண்டு நடந்திடு !
போர்செய் வோன்கை பொருந்திய வாளெனப்
புரியுந் தொண்டிற் பலாபல னற்றிரு !
பாரி லேபர மன்பணி செய்யெனப்
பாடிப் பாயும் படிகப் படலமே. (கொட்டு)

## 41. உச்சமா மலையினின்றே

(ஆற்றுப்பாட்டு)

உச்சமா மலையினின்றே
ஊறி வந்தேனே !—என்
பச்சைக் குழந்தை பால்குடிக்கப்
பாய்ந்து வந்தேனே !

மேடு பள்ளந்தாவிக் குதித்து
விரைந்து வந்தேனே ;
காடுங் கரையுங் கவலையின்றிக்
கடந்து வந்தேனே.

வெள்ளமாகப் பெருகிப் பெருகி
வேட்கை தீரவே
உள்ள மட்டும் உலகிற்குதவ
உருகி வந்தேனே.

பரம்பொருளைப் பண்ணுடனே
பாடி வந்தேனே !
பரந்த கடலிற் கலந்து மகிழப்
பணிந்து வந்தேனே !

## 42. மலருங்காலை

(அன்பே கடவுள்)

(கானடா) (ஜம்பை)

மலருங் காலைத் தென்றலிலே,
மரைகள் பூத்து மணம்பரவப்
புலரு மிரவிக் கதிரினிலே,
புல்லுண் பசுவின் பாலினிலே,
நிலவுந் திங்கள் ஒளியேற்ற
நிருத்த மாடும் கடலினிலே,
குலவுங் காத லுளத்தினிலே
கொண்டே னன்புப் பரவசமே!

கண்ணே, முத்தே, கனிரசமே,
காதற் கிளியே யெனக்கொஞ்சிப்
பெண்ணும் சக்தி வளர்க்கின்ற
பிள்ளை பேசு மழலையிலும்,
பண்ணார் தொண்டர் பத்தியிலும்,
பண்பர் நேயப் பான்மையிலும்,
விண்ணார் விளக்கின் ஒளியினிலும்
விண்டே னன்பு விளைசுகமே !

கல்லா லடியிற் கனிந்தமொழி,
கண்ணன் குழலி னெழுந்தமொழி,
சொல்லா மோனஞ் சொல்லுமொழி,
சுத்தர் கண்ட சுருதிமொழி,
எல்லாந் துறந்த புத்தனுடன்
ஏசு நாதர் இயம்புமொழி,
அல்லா ரஸூல் அருளுமொழி
அன்பு மொழியென் றறிந்தேனே!

## 43. உள்ளத்தைக் கொள்ளை

(எங்கும் அவன்)

(செஞ்சுருட்டி) (ஆதி)

உள்ளத்தைக் கொள்ளைகொண்டான்—இந்த
உலகமுந் தானென இலகுவித்தான் ;
தெள்ளொளிக் காலையிலே—புட்கள்
சிவவெனச் சிலம்பிடுஞ் சோலையிலே,
ஒள்ளிய கதிரினிலே—சக்தி
ஓமெனத் தவழ்ந்திடும் அருவியிலே,
வெள்ளி நிலாவினிலே—மலர்
விரிப்பென மீனணி வானத்திலே.

முல்லையின் முறுவலிலே—அதை
முத்தமிட் டாடிடுந் தென்றலிலே...
செல்புவிப் பாட்டினிலே—பசுஞ்
செழிப்பினிலே, மாந்தர் உழைப்பினிலே,
நல்லது தீயதிலே—கால
நடப்பினிலே புதுப் படைப்பினிலே,
சொல்வகை மதங்களிலே—தூய
சுடர் நகை புரிவது கடவுளையே.

கடற்கரை மணல்வீடு—நிதங்
கட்டிவிளை யாடுகின்ற குட்டிகளைப்போல்,
உடல்மனை களைக்கட்டி—இங்கே
உயிர்க்குயி ராயவன் ஆடுகின்றான் ;
சடத்தினிற் சித்தவனும்—அவன்
சக்திவிலாச மிச் சகமனைத்தும்.
படமவன் ; பட்டமியற்கை—இந்தப்
பண்பினை யறிந்தவர் இன்புறுவார்.

## 44. எண்ணமாம் தாரகை

(அறிவொளி)

(கேதாரம்) (ஆதி)

எண்ணமாம் தாரகைகள்—மதி
இரவினில் உனைத்தேடி—உயர்
விண்ணகத் தேதிரிந்தும்—ஞான
விளக்கொளி காணவில்லை.

கிழக்கிலுன் புன்சிரிப்பைக்—கண்டு
கிளர்ந்ததென் அன்புவெறி
பழக்கிய குயிலினைப்போல்—உன்னைப்
பாடிய தென் மனமே!

வெள்ளி மலர்க்காலை—விண்
மீனினம் அத்தனையும்
அள்ளி விழுங்கியதும்—என்னுள்
அறிவு மலர்ந்ததம்மா!

பூட்டுடைத் தென்இதயம்—ஒரு
புதியவிண் கண்டதம்மா!
பாட்டுருக் கொண்டதம்மா—இந்தப்
பாருயிர் முற்றிலுமே.

ஆனந்தக் கடல்விரிவில்—பொன்
அலைகளின் அழகிடையே
மோன நகைக்கதிர்கள்—வீசி
முளைத்ததோர் சுடர்மலையே !

அச்சுடர் மலைமுடிவில்—ஏறி
அகிலத்தைப் பார்க்கையிலே,
எச்சமயமும் காணேன்—எங்கும்
என்னையே கண்டுவந்தேன்.

பலபல பெயர் உருக்கள்—ஒரு
பரம்பொருட் போர்வைகளாம்.
உலகெலாம் ஆலயமாம்—அதன்
உயிர்த்தொகை சிவனுருவனும்.

சாமியே உள்மனிதன்—அவன்
சாவினை வென்றவனும்.
பூமியே விண்ணுலகம்—உண்மைப்
பொருளினைக் கண்டவர்க்கே.

## 45. நீலவான்

(உறவும் பொருளும்)

(செஞ்சுருட்டி) (ஆதி)

நீலவான் மழையென் பாட்டன்—காற்று
நீளக் கதைகள்சொல்லும் பாட்டி.
ஞாலமாம் இயற்கை அம்மா—ஒளிர்
ஞாயி றெனக்கறிவுத் தந்தை.
கோலமதி யெனது மாமா—கடல்
குதித்துப் பாடும்என தத்தை.
ஓலமிட் டுயிர்க்குலம் ஆடும்—இந்த
உலக நாடகமென் வாழ்க்கை.

பூனை எனக்கினிய தங்கை—கோபப்
புலியும் வலுமுரட்டுத் தம்பி.
யானை எனதுமுத் தண்ணு—மாந்தர்
யாரும் எனதருமைத் தோழர்.
தானை கொண்டுவரும் பகையும்—என்
சகவினை யாட்டினெதிர்த் தோழன்.
ஞான நூல்களென துள்ளம்—பொது
நன்மை எனக்கினிய சமயம்.

கல்லும் புல்லுமென் படுக்கை—ஓடுங்
காலம் எனதுவிசை வண்டி—எல்லை
இல்லா வையமென தில்லம்—அதில்
எல்லாப் பொருள்களுமென் கூட்டம்—மறை
சொல்லி வருநதியென் வீணை—கனி
சொரியும் சோலைமடைப் பள்ளி—வான
வில்யான் விண்ணிவரும் பாலம்—விண்
மீன்கள் எனதுமணிப் பூண்கள்.

## 46. புத்தப் புது வசந்தம்

(காபி) (திஸ்ரஏகம்)

புத்தப் புது வசந்தம்—சகியே
பூத்துக் கனிந்ததடீ
சித்திரைச் சோலையிலே—கலைத்
தேனுண்டு பாடிடுவோம்—சகியே
மானுடன் ஆடிடுவோம்.

வெள்ளி மலையி னின்றே—பொங்கும்
வெள்ளப் பெருக்கினைப்போல்—சகியே
உள்ளக் குகையினின்றே—பேரின்பந்
துள்ளி வருகுதடீ—அதை
அள்ளிப் பருகிடுவோம் !

அசையும் காற்றினிலே—அருள்மணம்
ஆடீ வருகுதடீ—சகியே
திசை யெல்லாம் பொலிய—அழகுத்
தீப் பறக்கு தடீ—பாட
நாப் பறக்குதடீ !

ஊகத்தைத் தூண்டுதடீ—உலகில்
உண்மைப் பொருள் காணத்
தாகத்தைத் தூண்டுதடீ—தெய்வ
மோகத்தைத் தூண்டுதடீ—சக்தி
வேகத்தைத் தூண்டுதடீ—
புத்தப் புது வசந்தம் !

# 47. கன்னத்திற் கையினை

(காலக் கன்னிகை)

(செஞ்சுருட்டி) (ரூபகம்)

கன்னத்திற் கையினை வைத்தொரு கன்னிகை
காலவெள் ளத்தின் கரையினிலே
வன்னப்பொற் சித்திரப் பாவையைப் போலொரு
வார்த்தையும் இன்றித் தனித்திருந்தாள்...

முக்குணப் போர்கள் அகங்கரித்தே—புயல்
மூண்டு புரண்டுமுன் னேகுதிக்கும் ;
பக்கெனக் கொங்கை குலுங்க நகைத்துப்பின்
பார்வையுள் ளாகப் படிந்திருப்பாள்.

கத்தி யெடுத்துக் குதித்திடும் ஓர் அலை ;
கனன்று செங்கனல் கக்குமொன்று
மத்த மதக்கரி போலொரு பேயலை
வாழும் பயிரினை வாரிச் செல்லும்.

வெள்ளைப் புயலொன்று வீசுதுபார்—அதன்
வேகத்திரை எமன் வாகனமாம் !
கொள்ளையும், சாவும், கொடுமையும், தீமையும்
கொட்ட மடித்துக் குரைப்பதைப்பார் !

நாட்டுவெறி, பகை திட்டுவெறி, சண்டை
மூட்டுவெறி, நசை காட்டுவெறி...
ஓட்டுவெறி, பண மூட்டைவெறி—உயிர்
உண்ணும் அரக்கர்போ ராட்டவெறி !

ஊழி யிடிக்குலம் உறுமி வெங்கனல்
ஊற்றி மனிதரை வாட்டுதம்மா !
ஆழித் திரைகள் இரத்தம் பெருகி
ஹரஹரா என்றங் கலறுதம்மா !

மாந்தர் அகந்தை யிருள்மனக் காட்டினில்
வாழும் விலங்குகள் கட்டறுத்தே . .
சாந்தமும் சீலமும் சத்திய முங்கெடச்
சாவுடன் தாவித் திரிவதைப்பார் !

இந்தப் பயங்கரங் கண்டந்தக் கன்னிகை
எள்ளள வேனும் இரங்காமல்,
அந்தி மலர்போல் அரும்பு நகையுடன்
அமைதி யாகத் தனித்திருந்தாள்.

நாடு வருந்திட, ஞாலம் வருந்திட
நல்லவர் கண்டு நலிகின்றார்.
வீடு வருந்தநீ வெண்ணகை செய்யும்
விநோதமிஃ தென்னெனக் கேட்டுநின்றேன்.

இன்பம் உதிக்குது பார்கிழக்கே !—என்றாள்
இருள் பிளந்தோர் இரவிவந்தான்,
அன்புக் கதிர்களை வீசிவந்தான் ;—உடன்
அசுர மாயங்கள் அற்றனவே.

காலக் கன்னியின் மணவாளன்—அவன்
காக்குங் கடவுளென் றேயறிந்தேன்.
ஞால மெல்லாமவன் லீலையென்போம்—எந்த
நாளும் அவனையே நம்பிடுவோம் !

## 48. எதிர் காலம்

(உசேனி ராகம்) (திஸ்ர ஏக தாளம்)

இளந்திரு நங்கை வந்தாள்—அவள்
என்னுளத்திற் புகுந்தாள்—அங்கே
களங்கமில் லாததொரு—கவிக்
கனவென வாழுகின்ருள்.

கன்னியிவள் பெயரே—எதிர்
காலமென் றேயுரைப்பாம்.
மின்னி மின்னிச் சிரிப்பாள்—ஒரு
வினயக் காரியிவள்.

மண்ணுக்கும் எண்ணெய்க்குமே—இங்கே
மண்டையுடைத்துக்கொள்ளும்
கண்ணற்ற பேராசை—தன்னை,
காறி யுமிழ்ந்திடுவாள்.

வெள்ளை கறுப்பென்றே—சாதி
வேற்றுமை பேசுகின்ற—மனக்
கள்ள மடமைகளை—ஒழிக்கக்
கருணை கொண்டெழுந்தாள்...

உலகெல்லாம் ஓர்நாடாய்—மாந்தர்
ஒன்றிய ஓர்குலமாய்,
நிலவும் அருளுடமை—நாட்ட
நீளக் கனவு கண்டாள்...

ஆகாச குண்டடியால்—பிண
மாகிடும் இன்றுலகில்,
சாகாத அமரநிலை—நாட்டும்,
சத்திய ஜோதியிவள்..

## 49. *காலப் பவனி*

(காபி) (ஆதி)

நீலத் திரையுடன் வானும்—மெல்ல
நீளக் கதைபேசுங் காலை
காலத் திரையிற் கதிரோன்—ஒரு
கனகப் படகென் றெழுந்தான்.
கோல மதியுடன் மீன்கள்—ஊர்
கோலம் முடித்து மறைந்த
ஞால வுயிர்கள் எழுந்தே—வினை
நாடிப் பவனி நடந்த.

தீச்சுவை போன்ற திருவார்—நல்ல
தீரரு டன்அணி சேர்ந்தே
காய்ச்சின பாலொடு தேனும்—பனங்
கற்கண்டும் போலவர் வாழ்ந்தார்...
பாச்செறி யின்பங்க ளுண்டார்—பயிர்
பச்சை வனங்களி னூடே
பூச்செறி வாச வசந்தம்—போலப்
பொங்கிப் பொலிந்து 'நடந்தார்.

எட்டுக் கண்ணும் விட்டெரியக்—கதிர்
ஏறிடுங் கோடை யருந்தல்
கட்டுண்ட பாச வலையில்—விதி
காயும் உருக்குக் கரத்தால்

குட்டிட மிக்க நலிந்தார்—பெருங்
குடும்பச் சுமையைப் பொறுத்தார்.
மட்டில்லாத் துன்பநெருப்பே—இந்த
மானிடவாழ் வென நொந்தார்.

பச்சை பழுத்துதிர் காலம்—கண்
பஞ்சடைத் தேங்கிடுங் காலம்
இச்சைகள் யாவும் இழந்தார்—புல
னின்பத்தை நம்பிய மாந்தர்.
நச்சுங் கடன்சுமை கொண்டார்—மிக
நம்பிய பேரைப் பிரிந்தார் ;
அச்சமும் ஆசைத் துயரும்—பற்றி
'ஆ'வென் றலறி நடந்தார்.

செக்கச் செவேலென மாலை—சாந்தத்
தீயுடன் தென்றலும் வீசச்
சிக்கற்ற சிட்டுக் குருவி—ஆங்கே
ஜிவ்வெனத் தாவிப் பறக்க...
அக்கக்க வென்று கிளிகள்—ஜோடி
யாக மரப்பொந்திற் பேச...
சொக்கும் இயற்கைப் பவனி—வேகச்
சோதி யிழந்திடக் கண்டேன்.

மேற்றிசையில் விடை பெற்றே—சுடர்
மெல்லக் குதித்து மறைய...
காற்றலை யேறுங் கடலிற்—பல
காலக் கனவுகள் கண்டேன்...
கூற்றென மெல்ல வுலகை—இருள்
கூடி விழுங்கிய வேளை
தோற்ற வுயிரின மெல்லாம்—சித்தத்
தொட்டிலில் ஆடிடக் கண்டேன்.

வானெல்லாங் கார்ப்புயற் கூட்டம்...புவி
மைக்குகை தன்னி லுறக்கம்...
நானெனும் ஆணவங் குன்றி—மிக
நாட்பட்டுப் பிய்ந்த துணிபோல்...
ஊனுடற் பாரந் தளர்ந்தே—கம்பை
ஊன்றித் தள்ளாடி மனிதர்—ஒரு
மோனத் திரைக்குட் புகுந்தார்—ஆ, ஆ !
முடிந்தது காலப் பவனி.

எங்கும் உருத்திர பூமி—உல
கெங்குமே ஊழியின் கூத்தே...
மங்கி மறைந்தது காலம்—இனி
வாழ்க்கைக் கிடமில்லை யென்றேன்...
அங்கிளஞ் சேய்களின் கூட்டம்—என்பால்
அன்புடனே வந்து சேர்ந்தார்.
கங்குலை மீண்டுங் கிழித்தே—வரும்
காலப் பவனியைக் கண்டேன்.

## 50. கிழவன் பாட்டு

(சிம்மேந்திரமத்திமம்) (ரூபகம்)

அங்கம் வளைந்தாலும்—என்
ஆண்மை வளைவதுண்டோ ?
தங்கம் வளைந்தாலும்—அதன்
தரங் கெடுவதுண்டோ ?

கோலைப் பிடித்தாலும்—கண்
குறுகிப் பார்த்தாலும்
வாலிபக் காளையடா—எனது
வயதை யாரறிவார் ?

மீசை நரைத்தாலும்—எனது
மேனி திரைத்தாலும்
ஓசைமெலிந்தாலும்—என்
உள்ளம் மெலிந்திடுமோ ?

கிழவ னென் றென்னைக்—குமரிகள்
கேலி செய்தாலும்—என்
அழகை யார றிவார்—என்
ஆசையை யார் அளப்பார் ?

## 51. எல்லையற்ற காதல்

(காபி) (ஆதி)

காதலன்: கடலுக்கும் எல்லையுண்டு—என்
காதலுக்கெல்லை யொன்றில்லையடி—கண்ணே

காதலி: உடலுக்கிங் கெல்லையுண்டு—என்
உள்ளத்திற் கெல்லையொன் றில்லையடா—கண்ணா

காதலன்: ஞான முதிக்குதடீ—நீயும்
நானும் ஒன்றாகிய மோனத்திலே—கண்ணே!

காதலி: வானத்திற் கெல்லையுண்டு—நம்
வாழ்வினுக் கெல்லையொன்றில்லையடா—கண்ணா

காதலன்: காதலர் உள்ளத்திலே—அந்த
காரம்விலக்குமோர் காந்தவிளக்குண்டு !

காதலி: மோதும் புயலிருளை—அது
முத்தமிட் டுண்ணமுன் னேறிடுவோம்—கண்ணா

## 52. கவுதமன் கருணை

வசந்த மாலை. அன்னங்கள் பாடிக்கொண்டே இமாலயத்தை நோக்கிப் பறக்கின்றன. தேவதத்தன் கணை தொடுக்கிறான்: ஒரு பெண் அன்னம் கணைபட்டு இரத்தஞ் சொட்டக் கதறி, அரண்மனைத்தோட்டத்தில், ஒரு ரோஜாப்புதரில் விழுகிறது. கௌதமன் அதைப்பரிவுடன் எடுத்து, இரங்கி மருந்து போட்டு மடியில் வைத்து ஆறுதலளிக்கிறான்.

இது பரதநாட்டியத்திற்காகப் பாடப்பெற்றது.

(உசேனி) (ரூபகம்)

புத்தன் :

வாழைக் குருத்தினைப் போல்—பசு
 மாந்தளிர்க் கொத்தினைப் போல்—இளந்
தாழை மடலினைப் போல்—உடல்
 தாங்கும் பறவை யம்மா.

யாரிக் கணை விடுத்தார்—சற்றும்
 இரக்க மற்ற வரே. .—குருதி
சோர வுனைக் கண்டேன்—உயிரும்
 துடி துடிக்கு தம்மா. .

அம்பெண்ணைக் குத்தி விட்டால்—ஐயோ
 அங்கம் பதறு தம்மா !
துன்புறும் அன்னத் தங்காய்—மெல்லத்
 தொட்டால் அழ வாயோ ?

அருந் துணைவ னடி—நானுன்
அன்புத் தோழனடி—அன்னமே
மருந்து போடு கிறேன்—என்
மடியிலே உறங்காய்.

(தேவதத்தன் வருதல்).

(செஞ்சுருட்டி) (ரூபகம்)

தேவதத்தன் :

பட்டிப் பெண் பறவை—என்
பாணத்தி னல் அல்லவோ ?
சுட்டவ னுக் குரிமை—கௌதமா
சும்மா கொடுத் திடடா..

கௌதமன் :

இரக்க மில்லாமல்—அடடா
ஏழைப் பறவை யின்மேல்,
சரத்தை விட்ட னையே—இதன்
சங்கடம் பாரா யோ ?

ஆதர வுள்ள பட்சி—என்
அன்புப் பறவையடா..
காத கனுக் கில்லை—உயிர்
காத்தவ னுக்குரிமை.

*இச்சமயம் ஒரு முனிவர் அங்கே வரவே இருவரும்* **அவ** *ரிடம் முறையிடுதல்*.

வாரும் பெரிய வரே—எங்கள்
வழக்கைக் கேட்டருளும்,
பாரும் இந்தப் பறவை—இதனைப்
பரிவுடன் காத்தேன்.

சாதுப் பறவை யினை—இவன்
சாகக் கணை தொடுத்தான்.
காதக னுக்கிதுவோ—முனியே
காத்தவ னுக்கிதுவோ ?

முனிவர் :

கோரக் கொலை புரிவோன்—இவனுக்குக்
கொடுக்க நீதியில்லை . .
ஈரக் கருணை கொண்டாய்—உனக்கே
இந்தப் பறவை யப்பா.

கௌதமன் :

அந்தணனே வணக்கம்—இதன்புண்
ஆறிநன் ருனதுமே—இதை
வந்த வழி விடுத்தே—சுயேச்சையாய்
வாழி என மகிழ்வேன் . .

முனிவர் :

மரண வேதனையை—ஐய நீ
மாற்றினை வாழியவே
கருணை யென்பது நீ—சித்தார்த்த
கண்மணி வாழியவே . .

தேவதத்தன் :

மன்னிக்க வேண்டு மப்பா—நீ யென்
மனசை மாற்றி விட்டாய்.
இன்னுயிர் யாவினையும்—இனிநான்
என்னுயி ராய் மதிப்பேன்.

*காட்சி முடிவு.*

## 53. யசோதரையும், சித்தார்த்தனும்

(மாண்டு) (திஸ்ரஏகம்)

சித்தார்த்தன் :

வாடி யுதிர்ந்த மலரைக் கண்டும்
வாழ்வை நம்பவோ—கண்ணே,
கோடி யுயிரைச் சாவு நாளும்
கொண்டு போகுதே !

யசோதரை :

உதிர்ந்த பூக்கள் உரம தாகும் ;
உதிக்கும் புதுமலர்—கண்ணா,
முதிர்ந்த கனிகள் வீழ்ந்து விதைகள்
முளைப்ப தியற்கையே.

சித்தார்த்தன் :

எழுந்த பரிதி ஏறி வானில்
இரத்த வெள்ளமாய்—அங்கே
விழுந்து கங்குல் விரவக் கண்டும்
விழியை நம்பவோ—கண்ணே,
விதியை நம்பவோ ?

யசோதரை :

இரவும் பகலும் சுழலும் பூவின்
இயற்கை யாவதே—கண்ணா,
வரவும் போக்கும் வரவும் உயிர்க்கு
வளமை யாவதே—வாழ்வின்
வழக்க மாவதே.

சித்தார்த்தன் :

வந்து செல்லும் மின்னல் போன்ற
வாழ்வை நம்பிடேன்—கண்ணே,
இந்து போலத் தேயும் உலகின்
இன்பம் வேண்டிலேன்—அதன்
துன்பம் வேண்டிலேன்.

யசோதரை :

இன்ப மென்றால் இன்ப மாகும் ;
இனிய வாழ்க்கையே—சதா
துன்ப மென்றால் துன்ப மாகும்
தொல்லு லகமே.
கொஞ்சுங் கிளிகள், குதிக்கும்மயில்கள்
கூவுங் குயிலினம்,
கஞ்ச மலரில் ஒதுங்கும் அன்னம்
களிப்பதைக் காணீர்—ஆற்றின்
கானத்தைக் கேளீர் !

சித்தார்த்தன் :

பாட்ட டங்கிப் புட்க ளெல்லாம்
படுத்து றங்கிடும்—ஆற்றின்
ஓட்டம் வாழ்வின் ஓட்டந் தன்னை
ஓங்கிப் பாடுதே—உள்ளம்
உண்மை தேடுதே... !

யசோதரை :

தென்றலும் நிலாவும் இந்தத்
தேன் பொழிலிலே—கண்ணா,
மன்றல் புரிந்து மகிழு மியற்கை
வளமை காணுமே.

சித்தார்த்தன் :

காற்றின் ஓட்டம், ஆற்றி னேட்டம்
கலந்தென் காதிலே—கண்ணே,
நேற்றி ருந்த தில்லை இன்று...
நிசமி தென்னுமே.

யசோதரை :

அக்கக் காவென் றே கிளிகள்
அழைப்பதைக் கேளீர் !

சித்தார்த்தன் :

துக்கம் வந்தென் உள்ளந் தன்னைத்
துளைப்பதைக் காணாய்—உண்மை
அழைப்பதைக் கேளாய் !

## 54. என்ன பயங்கரலீலை !

[போர், விமானகுண்டு, அணுகுண்டு, பூகம்பம் முதலியவற்றால் நேரும் பயங்கரக் கொலைகளை இப்பாட்டு வர்ணிக்கிறது.]

(*புன்னாகவராளி*) (*ஜம்பை*)

என்ன பயங்கர லீலை—அம்மா
என்ன பயங்கர லீலை !
கன்னங் கரேலென் றிருட்டு—நெடுங்
கம்பி மின்னல்கள் கதங்கொண்டு வெட்டப்
பின்னும் மதக்கரிக் கூட்டம்—போலப்
பேரிடி வானத்தில் மேகத்தின் ஓட்டம் ;
தின்னும் புலிக்குகை தானோ—இன்று
திக்குத் திசைகள் திடுக்கிடல் ஏனோ ? (என்ன)

கட்டக் கடகட வென்றே—இடி
கர்ச்சித்துத் தந்தி யடித்தது சென்றே,
தட்டத் தடதட வென்றே—மழைத்
தாளம் அடித்துப் பொழிந்தது கொண்டல் !
மட்ட மடமட வென்றே—நீள்
மரங்கள் மனைகள் சரிந்தன ஒன்றாய்,
பட்டப் படபட வென்றே—யிந்தப்
பாருயிர் நெஞ்சம் பதைத்தழு மந்தோ ! (என்ன)

வெறிகொள் எரிமலை போலே—எமன்
வேட்டை விமான விசையினைக் கண்டால்
பொறிபுலன் புந்தி நடுங்கும்—கோடிப்
போரில் வெடித்த புகைக்குலஞ் சூழ,
நெறிக ளெல்லாந் தடுமாறி—மாந்தர்
நிற்க நிலையற்றுத் தக்குத்தடாரென
அறிவிழந் தெங்கும் விழுவார்—ஐயோ
அண்டம் வெடிக்கும் அணு வெடியம்மா! (என்ன)

நோயெனச் செல்வங் குவித்தே,—ஏழை
நொண்டி முடங்கள் ‘ஒருபிடி’ யென்றால்
நாயினைச் சூவிடுஞ் செல்வர்—ஒரு
நாளைக்கு நூறுபொய் கட்டும் வழக்கர்
தேயத் துரோகங்கள் செய்தே—நன்கு
தின்று கொழுத்ததி காரஞ்செய் வண்டர்
பேய்மதக் காம வெறியில்—குலப்
பெண்களின் கற்பைக் கெடுக்கும் வெறியர் (என்ன)

ஞாலத்தை யாளுவோம் என்றே—பிறர்
நாட்டை நடுக்கி நசுக்கும் செருக்கர்
மாலொத்த கம்பீர வீரர்—மாதர்
மையல் மடியேவை குண்டமென் றாழ்வார்,

சீலத் திருநெறி யாளர்—மதச்
    சிக்கில் அகப்பட்டுப் பக்குவங் காணர்,
காலச் சினக் கடைவாயில்—சற்று
    கண்ணைச் சிமிட்டுமுன் காணமற் போனர்! (என்ன)

அழிக்கும் அரக்கரை மொத்தி—அந்தோ
    அகந்தை நிணத்தைப் பிதுக்கிக் குவிப்பாய் ;
பழிக்குப் பழிவாங்கு கின்ருய்—அம்மா
    பாவ மறியாப் பலரையேன் கொன்ருய் ?
செழித்து வளரும் உலகைத்—தாயே
    தீயாகச் சீறிப் புடைத்து வருத்தி
அழித்தல் உனக்கழ காமோ ?—அம்மா
    ஆரறி வாருன் அதிசய லீலை ? (என்ன)

தாய்முலை யுண்ணுங் குழந்தை—ஆசைத்
    தாரத்தை வாரித் தழுவிய காளை
தேயத்தைக் காத்திடுந் தொண்டர்—தொழில்
    செய்து பிழைக்கும் எளியர், வறியர்
போய துயிரென் றலறி—நொடிப்
    போதினிற் சத்தம் அடங்கிப் புதைந்தார்.
ஏயவர் சிற்றுயிர் தாங்கி—ஐயோ
    இன்னற் படுவதை என்னென் றுரைப்பேன்! (என்ன)

உண்ண வுடுக்கவொன் றில்லை—ஆங்கே
    உட்காரக் கூட வுறைவிடம் இல்லை ;
தண்ணீருந் தாகத்திற் கில்லை—தம்மைத்
    தாங்கும் உறவினர் நீங்கிய தொல்லை
புண்ணில் எரியெனப் பாயச்—சீறிப்
    பொங்கும் அனலிற் புழுவெனப் பட்டார்
எண்ணு முன்னே ஒரு பேரூர்—முற்றும்
    இப்படிப் பாழ்சுடு காடான தென்னே ! (என்ன)

சின்னக் குழந்தையின் கண்ணீர்—ஏழை
திக்கற் றழும்பரி தாபச்செங் கண்ணீர்,
இன்னிள மென்முலே மார்பில்—மாதர்
இன்னல்கள் விம்மி யடித்தழுங் கண்ணீர்,
வன்மை யில்லாத கிழவர்—தங்கள்
மைந்தரைச் சாகக் கொடுத்தழுங் கண்ணீர்
குன்றின் அருவியைப் போலே—ஐயா
கொட்டு திரத்தக் கொடுங்கன லேயோ ! (என்ன)

சாவின் முரசம் அதிர—காளி
ஸம்ஹாரப் பாட்டைத் தணல்பெறப் பாட,
ஆவென் றணுக்கனல் வெள்ளம்—ஊரை
அள்ளி விழுங்கிடுந் துள்ளிப் பரவி.
பூவினிற் காணும் பொருள்கள்—எல்லாம்
புதைகுழி மூடும் புழுதியாமென்றே
தாவிப் பிணக்குவை மீதே—ஊழி
தந்திமித் தோமெனத் தாண்டவம் ஆடும்.(என்ன)

வையக வாழ்விந்த வாறே—இங்கு
மன்னனும் ஆண்டியும் மண்ணின் விலேயே !
பையினிற் காற்றுள்ள மட்டும்—நல்ல
பக்தி வைராக்கியச் சித்தங்கொண் டன்பாய்
செய்யத் தகும்பணி செய்வீர்—ஒரு
தெய்வ பராசக்தி யுண்டென்று நம்பி
பொய்யகம் போட்டி பொருமை—யின்றிப்
பூதலக் கோயிலில் தீதற வாழ்வோம் ! (என்ன)

பின்னர்,

உருவிய வாட்படைக் கஞ்சோம் !—சூழும்
ஊழி நெருப்பையும் ஊதி யெறிவோம் !
கருங்கடல் விம்மிக் குமுறும்—புயற்
காற்றையுந் தென்றற் கடுமையென் றேற்போம் !

வருந்திச்செல் காலவெள் ளத்தில்—சற்றும்
மனங் கலங்காத மலையென் றிருப்போம் !
உருத்திர லீலைக்கும் அஞ்சோம் !—அஞ்சோம் ! !
உலக மயக்கின் உதட்டையுங் கொஞ்சோம்! (என்ன)

சத்தியங் கொண்டு நடப்போர்—வருஞ்
சாவையுங் காலால் உதைத்திட வல்லார்
மெத்த வுறுதிகொள் வீரர்—இந்த
மேதினி மோகினி மெத்தென வைக்கும்
முத்தத்திற் சித்தங் கலங்கார்—வாழ்வின்
முள்ளிற்கும் அஞ்சார் விழித்திருப் பார்எனச்
சக்தி பயங்கர லீலை—செய்து
சாற்றினள் காட்டினள் மாற்றினள் மாயம்! (என்ன)

## 55. பகை நடுங்கிடவே

(செஞ்சுருட்டி) (ரூபகம்)

பகை நடுங்கிடவே—மனிதா
பலம்பெற வேண்டும்
சிகை எழும் சுடரை—விட்டில்
சிறிப் புடைத்திடுமோ ?

ஆந்தைச் சினத்தாலே—பகல்
அஞ்சிப் பதுங்கிடுமோ ?
ஓந்திகள் கேலி செய்தால்—அதன்
ஒளி மழுங்கிடுமோ ?

பாம்பு படமெடுத்தால்—வானப்
பருந்து பயப்படுமோ ?
வீம்புத் திருவாளர்—வசையம்பு
வீரரைக் கூறிடுமோ ?

புயலடித்தாலும்—மலை
புரண்டு வீழ்ந்திடுமோ ?
இயலழியாமல்—பகையை
எதிர்த்து வென்றிடுவோம்.

சூரியப் பந்துருட்டிக்—காலம்
சுழன்று விளை யாடும்
பாரில் எதிர்க் கட்சி—என்றே
பகைவரைப் பொருவோம் !

விதை முளைத்தெழுந்தே—கனி
விளைந் துதிர்வது போல்
முதிய பூவியல்பாம்—இது
முக்குணக் கூத்தாட்டம் !

## 56. *காற்றடித்தால்*

காற்றடித்தால் வெள்ளிமலை கலங்கி டுமோ ?
கதிருண்டாற் கடல்வெள்ளம் குறைந்திடுமோ ?
போற்றுவதுந் தூற்று வதும்—அண்ணமாரே
பொய்யுலக வழக்கந்தான் அண்ணமாரே...
ஆற்ற லுள்ள நல்லறிஞர்—அண்ணமாரே
அணுவுங் கலக்கமுறார்—அண்ணமாரே...
கூற்றையுதை சேவடியைக் கும்பிடுமன்பர்—தம்மைக்
கும்பிட்டு விலகிடுங் கோரவினையே...

நூறுதலைப் பகையின்றிப் பாரதமுண்டோ ?
நொண்டிச்சனி யின்றிநளன் காதையுமுண்டோ ?
கூறுசெய்யத் தசமுகக் கொடிய ரின்றிக்
கோதண்ட ராமனிசை கூறுவதுண்டோ ?
மாறுசெய்யும் கம்ஸனின்றி மாதவனுண்டோ ?
மாரனின்றி நெற்றிவிழி மாண்பறிவமோ ?
வேறுபட்ட சூரபத்மன் வீண்செருக் கின்றி
வீரவடி வேலனுக்கு வேலையுமுண்டோ?

## 57. நாடகம்

நாடகமாடு வோம் வாரீர்—இந்த
நவரச வுலகெனு மேடையிலே—பல
வேடங்கள் போட்டுக் கொண்டே—இரு
வினையில் வளரும் கதையறிந்தே—நல்ல (நாட)

முக்குண மாகிய பெண்ணும்—வீறு
முற்றி யறிவு முதிர்ந்திடும் ஆணும்
பக்குவ மாக நடித்தே—கலைப்
பண்பினுல் ஒன்றினைக் கண்டு பிடித்தே—(நாட)

## 58. வீழ்ந்த கொம்பு

(எதுகுலகாம்போதி) (ஆதி)

நேற்றுன் பூத்த பசுமுகப் புன்னகை
நீள மாந்தினள் என்கவிக் காதலி.
தோற்ற மான வுலகம் பராசக்தி
சொரூப மென்னவுன் சூழலிற் காட்டினை.
வீற்றி ருந்துன் னமுத நிழலிலே
விண்ணின் பத்தின் விளக்கமி தாமென்பேன்.
காற்று னக்கொரு கூற்றென வந்ததே
கனி குலுங்கிக் கவின்பெறுங் கொம்பரே !

மஞ்சள் குங்கும மிட்டு மனையொளிர்
மங்கலத் திரு நாத னிழந்ததும்,
'வஞ்சமோ தெய்வ மே' என்று வீறிட்டு
மண்ணில் வீழ்ந்து மழுங்குங் கொடுமைபோல்,
கொஞ்சுங் கிள்ளை, குயிலினங் காதலிற்
கூடிப் பாடிக் குலாவி மகிழ்ந்திட
வஞ்ச மற்று வளர்ந்தபைங் கொம்பரே !
வாயு வுன்னை வதைத்ததென் வஞ்சமே !

மாசி வந்தது ; மாமரம் பூத்தது ;
மண மணக்குது தென்றலின் முத்தமே ;
ஆசி கூறின புள்ளினம் ; சித்திரை
அரத னக்கனி காணுவம் என்றெல்லாம்
ஆசை கண்ட கனவுகள் யாவையும்
அடியு டன்படக் கென்று முறிந்திட
மோச மாகவுன் ஆயுளை மூய்த்ததே
மூர்க்கக் காற்று முருகிளங் கொம்பரே !

வான ளாவி வளர்ந்து மலர்ந்துதிர்
வாழ்வெ னும்பெரு மாமரந் தன்னிலே,
மானி டம்ஒரு மாபெருங் கொம்பதில்,
வாடி நாளும் உதிர்வன பச்சிலை ;
தேன் மலர்களாய்ச் சிற்சில மண்ணுகும் ;
திரண்ட நற்கனி யாவன சிற்சில ;
ஏனி தென்றிடிற் சொல்லிட வாயில்லோம் ;
எல்லாங் *காத்தவ ராயரின் கூத்துக்காண்!

என்று நானெண்ணி யேங்கி யிருக்கையில்,
" எழுக தோழ இளைவது மேனினி ?
' இன்றி ருந்தவர் நாளையில் லை' யெ ன்றுய்
இறந்தவர் பிறக் கும்வினை யெண்ணிலாய் ;
ஒன்று போயிடின் மற்றென்று தோன்றிடும் ;
ஒடிந்த கொம்பிங்கு மீண்டுந் தளிர்த்திடும் ;
கன்றுந் தாயும்போல் வாழும் உலகியல்
கலக்கம்ஏ" னெனக் காகம் கரைந்ததால்.

புத்த னுக்கும் அரியதோர் புத்தியைப்
புகட்டிற் றிக்கரும் புள்ளென் றுவந்தனன் ;
சத்தியம் இது ; சங்கடம் ஏனினி ?
சகத்தின் வாழ்விற் இருவகை வாயிலாம் ;

---
* முக்யப் பிராணன்

செத்த பாட்டியோர் சேயென மீளுவாள் ;
　　செடிமண் ணாகிச் செடியை வளர்த்திடும் ;
மெத்தக் கீழ்க்கன்று மேவிடும் வாழைக்கே ;
　　வீழ்வும் வாழ்வும் விசித்திர நாடகம்.

ஓட வோடப்பின் ஊற்றுப் பெருகிடும் ;
　　உதிர்ந் துதிர்ந்து மலர்ந்திடும் வாழ்க்கையே ;
வாட வாட வளரும் இலைகளே ;
　　மாநிலம் ஒரு போக்கு வரவுகாண் ;
வேடக் காலனும், † வேத முதல்வனும்
　　விரும்பிப் பாத்திரம் சோடித்து வேகமாய்
ஆடச் செய்திடு நாடகம் வாழ்வென்றே
　　அறிந்த வர்துய ரற்றுள் ளமர்வரே.

## 59. *காதலிலே*

காதலிலே கொடி வளரும்
　　கனவினிலே பூத்தேன் ;
காளையரின் மார் பினிலே
　　கவர்ச்சியுடன் வளர் ந்தேன் ;
மாத ரிளம் புன்னகை செய்
　　மதி முகத்திற் கனிந்தேன் ;
மாநிலத்தில் வாழ்க் கையென
　　மங்கலமாயப் பொலிந்தேன்.

ஆகாயத் திரையினிலே
　　அருண நகை எழுதி,
மேகமுடன் மின் னெழுதி
　　வெள்ளி மழை எழுதி,
ஊகமுடன் உலகினிலே
　　உயிரெழுதி உயிர்கள்
உண்டு யிர்க்கும் பயிரெழுதும்
　　உலகம்மை நானே !

---

† *பிரம்மா*.

## 60. ஏசுநாதர் முறையீடு

(பேஹாக்) (ஆதி)

பரம பிதாவே, பரம பிதாவே !
பார்படும் பாட்டினை யாருக்குச் சொல்வேன் !
நரபலி நரபலி நரபலி யெங்கும் !
நாகரி கப்பெயர் நாவினி லேதான்.
அரசுகள் உதிர்ந்தன ஆடியிற் புளிபோல் ;
அணுவெடி வெடித்திடும் அண்டஞ் சிதற
முரசுகள் போர்வெறி முழக்கிவிண் ணேறும் ;
மூலைக்கு மூலை பிணக்குவை சேரும். (பரம)

கருணையும் பொறுமையும் பழங்கதை யென்பார்
கடவுளும் சமயமுங் கள்மயக் கென்பார் ;
தருமத்தின் வீரர்க்குத் தடியடி யீவார் ;
தானெனும் ஆணவம் தலைகொண்டு போவார் ;
கரும்புகை கவர்ந்தது காற்றுடன் கதிரை ;
கதியற்றுப் பதியற்றுக் கலங்கினர் எளியோர் ;
இரும்புக்கை கொண்டிடர் இழைத்தனன் சாத்தான்
இரக்கம்வைத்துலகினைக் காத்தருள் இறைவா !
(பரம)

## 61. கலையை

உலகைக் கலை யாக்க வேண்டும்—இன்ப
உயிரினை ஊற்றாக்க வேண்டும்
கலையைக் கனவாக்க வேண்டும்—அந்தக்
கனவைச் செயலாக்க வேண்டும்.
மலையை மனையாக்க வேண்டும்—அந்த
மனையினிற் சுதந்தரம் வேண்டும்.
அலையை மழையாக்கும் வான்போல்—இங்கே
அன்பினை வாழ்வாக்க வேண்டும்.

## 62. நீ

(சிந்துபைரவி) (ஆதி)

சின்னஞ் சிறுவயதி லென்னை—நீ
சீராட்டித் தாலாட்டி வளர்த்தாய்.
அன்னையாய் நின்றமுத மளித்தாய்—நீ
அன்புக் கதைகள்பல சொன்னாய்.
கன்னிக் கலைமகளாய் வந்தாய்—என்
காதல் முழுதுங்கொள்ளை கொண்டாய்.
வன்னக் கவிமலர்க ளீந்தாய்—என்
வாழ்க்கை முழுதுமுனக் கீந்தேன்.

காலைப் பரிதிமுக முனதே—அதைக்
கண்டுமெய்ம் மறந்து நிற்பேன்...
மாலை முல்லைநகை யுனதே—அதை
மருவுங் காற்றுனது பாட்டே...
சோலைக் கிளியுனது பேச்சே—ரசஞ்
சொட்டுங் கனியுனது கனிவே...
வேலைத் திரையுனது முரசே—மலை
விழும் அருவியுனது மறையே !

வானம் வளைந்தநில மெல்லாம்—நீ
வாழும் பெரியதிருக் கோயில்.
ஞானம் விழித்த மன மெல்லாம்—நீ
நாளு மிருக்குமலர்த் தவிசே...
மோனம் விழித்தநிசி யெல்லாம்—உன்னை
முன்னே காணுஞ் சுபவேளை...
யானும் எனதுடமை யாவும்—நீ
ஈந்த பொதுவுடமை யாமே...

## 63. நவமணி

(பைரவி) (ரூபகம்)

மின்னுங் குணமணிகள்—மனிதா,
மேன்மையுறத் தேர்ந்தே
பொன்னுன வாழ்க்கையிலே—மனிதா,
பொலிந்திடப் பதிப்பாய்.

ஆருக்கும் அஞ்சாமல்—மனிதா,
அறங்களைப் புரியும்
வீரக்கனல் வயிரம்—மனிதா,
விளங்குக முடிமேல் !

மாணிசை மார்பினிலே—மனிதா,
மாசற்ற மெய்யன்பாம்
ஆணிமுத் தாரத்தினை—மனிதா,
அருளிற் கோத்தணிவாய்...

நீங்கறும் பக்தியினுல்—இறைவனை
நேயமுறக் கலக்கும்
ஓங்கிய காதலென்னும்—பவளத்தை
உள்ளத்தி லேயணிவாய்...

காணக் காணக்களிப்பாம்—இயற்கையிற்
காணுந் திருவழகாம்
மாணிக்க மாலையினை—அணிவாய்,
மாணிக்க வாசகம் போல்.

உரமுள்ள தோளில்——மனிதா,
ஒப்புர வின்பமென்னும்
மரகத வலயம்—அணிவாய்
மாநிலம் போற்றிடவே...

தீமைகளை விலக்கும்—விரதத்
திண்மையி லேவிளைந்த
கோமேத கத்தினையே—மனிதா,
கோமுடி யாயணிவாய்...

தைரிய லட்சுமியின்—அருளைத்
தந்து நலம்புரியும்
வைடூரி யத்தினையே—மனிதா,
மலர்க்கர மணிவாய்.

நால்வகை மெய்ப் பொருளை—நிறைவாய்
நல்கிடுங் கல்வியென்னும்
நீல மணித்திரளை—மனிதா,
நெற்றியி லேயணிவாய்...

அருங்கலைத் தொழில்கள்—பெருகும்
ஆற்ற லளிக்கின்ற
புருட ராகத்தினை மனிதா
பூண்டு தலைநிமிர்வாய்.

## 64. குகை

(சிந்துபைரவி) (ஆதி)

செங்கன லென்னச் சிரித்துப் பகலவன்
மேற்றிசை சென்றதுவும்,
கங்குலின் மீன்மலர்க் கூந்த லவிழ்ந்தது ;
காணும் பசும் பொலிவு
மங்கி மறைந்தது ; வானம் வளைத்ததோர்
மாயக் குகையினிலே
எங்கு மலையாமல் இங்கென துள்ளம்
இருந்தபடி யிருந்தேன்.

காணும் உலகமோர் இந்திர ஜாலம்போற்
காணமற் போனதம்மா !
நாணும் புதுமணப் பெண்போலென் ஆணவம்
நாணிக் குனிந்ததம்மா !
வேணும் வேணுமின்னும் என்றென்னைத் தின்றிடும்
வேட்கை தணிந்ததம்மா...
நானுமென் ஆருயிர் நாதனும் ஒன்றிய
நள்ளிரவுக் குகையில்.

## 65. கவியும், காலனும்

(உசேனி) (ரூபகம்)

கனவினில் உதிர்ந்த—நல்ல
கவிமலர் மாலை ;
வனமலர் களைப்போல்—இது
வாடி மறைவதில்லை.

மானிட வாழ்வினின்றே—தொடுத்த
மணமலர் மாலை ;
தேனிறை நாண்மலர்போல்—நிறந்
திரிந்து போவதில்லை.

கவிமலர் மாலை—சூடக்
காதலனைத் தேடிப்
புவியெல்லாந் திரிந்தேன்—எவரும்
பொருட் படுத்தவில்லை.

ஓசைமலர் மாலை—தூய
உள்ளத்தி லேபூத்த
ஆசை மணமாலை—இதை
அணிய யாரு மில்லை.

புகழெனுஞ் சிறுக்கி—வந்து
பொக்கெனவே நகைத்தாள் ;
இகழ்ந்தென்னை வெறுத்தார்—அவள்
இனத்தின் யாவருமே.

கண்ணீருடன் கலக்கி—இந்தக்
கவலை மாலையினை
மண்ணி லெறிந்துவிட்டேன்—என்
மன்னனும் வந்துவிட்டான்.

காலன் :

கலங்கி நில்லாதே—இதோ
காதலன் வந்துவிட்டேன்—கவி
அலங்கலை யணிவேன்—உனக்கும்
அமர வாழ்வளிப்பேன்.

அள்ளிக் கலந்துசெல்வேன்—உன்னை
ஆசைக் கவிப்பெண்ணே—உடனே
துள்ளி வளைந்துலகம்—உன்னைத்
தோத்திரம் செய்வதைப்பார் !

காதல னோடுசென்றேன்—கண்
காணாத விண்ணகமே
மேதினியைக் கண்டேன்—அடாடா
விந்தை யென்ன சொல்வேன் !

ஆவி போனவுடல்—அதை
அலங்க ரிக்கின்றார்.
ஓவியந் தீட்டுகின்றார்—கண்ணீர்
ஓடப் புகழுகின்றார்.

பாட்டுப் பாடுகின்றார்—படத்துடன்
பவனி செல்லுகின்றார்
கூட்டங் கூடுகின்றார்—என்னவோ
கும்மாளம் போடுகின்றார்....!

## 66. இரக்ஷகன்

(கமாஸ்) (ரூபகம்)

எனது ரக்ஷகன் வரும்
இனிய ஜோதி நாளிதே ;
மனதவன் திருப் புகழை
மங்கள மாய்ப் பாடுமே !

மையிருள் வனத்தில் யான்
வழி நடக்கும் போதிலே,
கைகொடுத் தெனை நடத்தக்
காளைபோல் வருகுவான்.

துன்பமேகம் வந்தென் வாழ்வைச்
சூழ்ந்து நின்ற போதிலே,
'இன்பம் யான்உன் உள்ளத்தில்
இருக்கிறே' னென் றுடுவான்.

கோடை வெய்யிற் சோடை போக்கக்
கொண்ட லாக வீசுவான் ;
வாடும் ஆவி சோர்வு நீங்க
வான் மழை பொழிகுவான்.

துட்டப் பேய்கள் சூழ்ச்சி செய்து
தூக்கி லிட்ட போதிலும்,
கட் டெரித்து நித்தியக்
கனலென் றென்னை மாற்றுவான் ;

பவ்வினை யெனைத் தொடர்ந்து
பங்கஞ் செய்த போதிலும்,
கவிதை யாக வந்து தெய்வக்
காதலால் உருக்குவான்.

## 67. இந்திர கானம்

(மாண்டு) (திஸ்ரஏகம்)

பொலிக பொலிக பொலிக பொலிகவே
பொங்கு மின்பமே எங்கும் பொலிகவே
நலின நரக விருளும் அச்சமும்
நமுசி யாதி யரக்கர் ஒழிகவே ;
பொழிக பொழிக பூரணக் கதிர்—சுத்த
போக யோக சக்தி வளர்கவே
அழிக வுலகில் அசுர மாயமே
அமர கங்கை யருவி பெருகவே.

இரு ளொழிக்கும் இரவி யெழுகவே !
இட ரொழிக்கும் உறுதி பெருகவே !
அருள் சுரக்குஞ் சுரபி வளர்கவே—எங்கும்
ஆத்ம ஞானம் பூத்தொ ளிர்கவே...
பொருள்செழித்து வாழ்க பூமகள்...மிகப்
பொன்செழித்து வாழ்க நன்மனை—தெய்வத்
திருசெழித்து வாழ்க தீரரே—வாரீர்
செயமுரசு கொட்டி முன்செல்வோம்.

இன்பமின்ப மென்று பாடுவோம்—எங்கும்
இன்ப மோங்கத் தொண்டு செய்குவோம்.
அன்பெனும் அமுத முண்ணுவோம்—வாரீர்
அமரவூற்றை யள்ளிப் பருகுவோம்.
துன்ப மில்லை, அச்ச மில்லையே !
சோம்ப லில்லை, தோல்வி யில்லையே !
தென்புலத் தரசன் பாசமும்—நம்மைத்
தீண்டாத தீயைத் தூண்டினேம்.

## 68. காற்றுலாவிடும்

(கரகரப்ரியா) (திஸ்ரஏகம்)

காற்றுலாவிடும்—இந்தக்
காய வீட்டிலே,
கூற்றை வென்றிடும்—தூய
குகைக்கனலைக் காண்.

விளக்கு வீசிடும்—நல்ல
வெண்சுடரதே—மண்
விளக்கு மண்ணெனில்—ஓங்கும்
வெளிச்சம் மண்ணுமோ ?

ஆளும் சட்டையும்—போலே
ஆத்ம னேந்துடல்
வாளுடன் உறை—போல
வசிப்ப தாகுமே.

கூடும் குருவியும்—போலக்
குடியிருந்திடும்
வீடு மாறினும்—ஆத்ம
வேந்தன் மாறிடான்.

காவலில்லையே—இக்
கட்டுமில்லையே—நான்
சாவ தில்லையே—நானே
சச்சிதானந்தம்.

## 69. ஆனந்தக் கும்மி

ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே—சச்சி
தானந்தம் ஆனந்தம் ஆனந்தமே
வானம் பொழிந்து வளரும்—உலகினில்
வாழத் தெரிந்திடின் ஆனந்தமே (ஆன)

மாம்பழக் காற்றை மருவிப் புதுமலர்
வள்ளி முருகன் போல் ஆடுதம்மா;
தேம்பழச் சோலையில் தெய்விகக் காதலைத்
தேடும் பருவமும் கூடுதம்மா ! (ஆன)

வேலைக் கடல்முர சார்க்குதம்மா—தமிழ்
வேதக் குழலிசை ஊதுதம்மா
மாலைக்குயில் வந்து கூவுதம்மா—உயிர்
மன்னனிடம் மனந் தாவுதம்மா (ஆன)

ஓமெனப் பச்சை மலையருவி—ஆடி
உச்சி குளிர வருகுதம்மா
நாமதைப் போலச் சுதந்தரமாய்ப்—பல
நன்மை புரிகுவோம் கண்மணியே (ஆன)

கட்டுங்கவலையும் இல்லையடீ—அந்தக்
காட்டுக் கிளிமொழி கேட்டு விட்டால் ;
வட்டமிட் டாடும் கருடனுடன்—மனம்
வானத்தி லேறும் வகையறிந்தால் (ஆன)

சாட்சியால் நின்று சகத்தை நடத்திடும்
　　சந்திர சூரியர் தாரகை போல்
காட்சி சமத்துவம் கண்டுவிட்டால்—இங்கே
　　கட்சிக் கலகங்கள் இல்லையடி (ஆன)

அன்னை குழந்தையைக் கொஞ்சி வளர்த்திடும்
　　அன்புநம் நெஞ்சில் அமைந்து விட்டால்,
பின்னிவ் வுலகெல்லாம் தாயகமே—சாதிப்
　　பேயில்லை வேற்றுமைப் பீடையில்லை (ஆன)

வில்லுங் கணையும், விரலுடன் வீணையும்,
　　வீரமும் தர்ம விதியு மெனச்
சொல்லும் செயலுடன் சொக்கி நின்றால்—இங்கே
　　சுவர்க்க ராச்சியம் காணுமடி. (ஆன)

பொங்கிடுந் தேன்வளம், பொங்கிடும் பால்வளம்,
　　போகமுடன் வரும் யோக சுகம்.
மங்கள மான மஹாசக்தி சுந்தரி
　　மானிட வாழ்விற் கலந்து விட்டால் (ஆன)

விண்ணவர் போல விளங்கிடுவோம்—சகி
　　விஞ்ஞான ஜோதி துலங்கிடுவோம்
எண்ணிய புண்ணிய மெய்திடுவோம்—பர
　　மேசனை நேசமுடன் கலப்போம். (ஆன)

# 70. *திருக்காட்சி

## *வெள்ளித் திரை மார்பு*

கன்னித் தவக்காட்சி கண்குளிரக் கண்டுவந்தே
தென்கடலின் முன்பு தியானத் தமர்ந்தநிசி,
கள்ளார் மதிநிலவின் காதல் வெறியேறி
வெள்ளித் திரைமார்பு விம்மிப் புரண்டலைய,
முத்துக் கரத்தால் 'முழுமதியே வா!' வென்று
பித்துப் பிடித்தார்க்கும் பெருங்கடலோ டென்னுளத்தில்,
தாய்நாட்டின் அன்புத் தணல்வெள்ளந் தானெழுந்து,
வாய்மைச் சுதந்தரமாம் வான்மதியை 'வா!' வென்னும்;
முத்துமுத் தாக முளைத்தொளிருஞ் சிந்தனைகள்,
சித்தத் திரைகளெல்லாந் 'தேசமே வாழி!' யென்னும்!

## *குழந்தை முறை கேளாயோ?*

பாருக்கு ஞானப் பரிதியே, மெய்யறத்தின்
வேருக்குப் பாலூற்றே, வேதாந்த வீணையிலே
தேவர்கள் மீட்டுந் திருநாமச் சீர்த்தியளே,
பாவிப்பார் பாவனைபோற் பாலிக்குங் கற்பகமே!
ஆவி யுருகியுள் ளார்வமுடன் உன்னருளைக்
கூவி யழைக்குங் குழந்தைமுறை கேளாயோ?
கன்னி முனையினிலுங் கௌரி முடிமீதும்
அன்னையே நீசெய் யருந்தவங்கை கூடிலதோ?

---

* 1924-ல் *தமிழ்க் குருகுல மாணவருடன் குமரி முனைக்குச் சென்றிருந்தபோது கண்ட தியானக் காட்சி.*

உன்கோயில் இன்றேன் ஒளிமழுங்கிற் றென்னம்மே ?
உன்வேத வாக்குகளும் ஊமைமணி யாயினவோ ?
கல்வி யொளியிழந்து, கண்ணிழந்து, கைக்கணியாஞ்
செல்வத் தொழிலிழந்து, திண்டோள் வலிவிழந்து,
தீராத வெம்பிணிகள் தேய்க்கும் உடல்சுமந்து
பாரால யத்திற் பரிதவிக்கும் மக்களைநீ
காப்பாற்ற வேண்டும், கருணைபொழி விண்ணமுதே !
பூப்பாரந் தாங்கும் புகலே, பராசக்தி !

## *துயர் தீராய் !*

எங்கும் ஒருபொருளென் றேயுணரும் உன்குலத்துத்
தங்கக் குழந்தைகளுஞ் சாதிமதச் சிக்கல்களால்,
ஒன்றுபட்ட வாழ்க்கை யுடைந்து பகைபேசித்
துண்டுபட்டு வீழுந் துயர்தீராய், செந்திருவே !
இச்சையுள்ள போகமெல்லாம் ஈந்துவளம் பொங்கிடுமுன்
பச்சைவள நாட்டினிலே பஞ்சம் புகுந்ததென்னே !
கண்ணன் குழல்கேட்டுக் காராம் பசுகறக்கும்
புண்ணியப் பொன்னாடு பொலிவிழக்கப் பார்ப்போமோ ?
விண்ணிழந்து மண்ணிழந்து, வீரக் கனலிழந்து,
பண்ணிழந்து நல்ல பதமிழந்து நிற்போமோ ?
வேத முனிவர் விளைத்தசுப மங்கலமாம்
நாத மடங்கி நமனோசை கேட்போமோ ?

## *எங்கே ?*

புத்தரின் சாந்தமயப் புன்னகையைக் காண்கிலமே ?
சித்தர்களின் செய்ய திருவடிகள் காண்கிலமே ?
நெஞ்சத் துறவுடனே நீதிசெய்அ சோகனெங்கே ?
அஞ்சா தறஞ்செய் அநபாய சோழனெங்கே ?
பொற்கை வழுதியெங்கே ? போற்றார் நடுநடுங்கும்
விற்கை விசயனெங்கே ? வேல்பிடித்த வீரரெங்கே ?

சாகா வரம்பெற்ற சச்சிதா னந்தமயர்
யோகநிட்டை செய்தருளும் உன்சே வடிநிழலிற்
பேராசைப் பூதங்கள் பிய்த்தெம்மை யுண்ணுவதோ ?
பாராசைப் பேய்கள் பகடை யுருட்டுவதோ ?

## அன்பு வெறி

வீர சிவாஜிக்கு வெற்றிதந்த சக்தியன்னே,
தீரகுரு கோவிந்த சிங்கனுக்கு வீறுதந்த
சண்டீ, பவானீ, ஜயகாளீ, அன்புவெறி
கொண்டலறு மன்பனையாட் கொள்ளாய்! இராமக்ருஷ்ண
தேவருக்குக் கல்லாத் திருஞான வூற்றீந்தாய்;
ஆவலுடன் என்னுள்ளம் அல்லும் பகலுமுன்னைக்
கேட்கும் வரமறிந்துங் கேளா தொளிவாயோ ?
ஆட்கொண்ட தாயின் அருளிதுவோ, அம்மம்ம !

## எதிர் பார்த்திருந்தேன்

உன்னகமும், உன்னறமும், உன்புகழும் ஓங்கிடவே
என்னையுனக் கேயளித்தேன் எந்தாயே, யின்னுமென்னைச்
சோதிக்க வேண்டா, சுடர்மணியே, யென்விரதஞ்
சாதிக்க வல்லதொரு சக்தியருள் ! மக்களெல்லாம்
அஞ்ஞான நீங்கி யகண்ட சுதந்தரராய்
மெய்ஞ்ஞான மோங்கி, மெலிவகன்று வாழ்ந்திடுக,
வறுமை யடிமை மடமை யிடர்தீர்க !
சிறுமை பொருமைவினை தீமைகளைப் போக்கிடுவாய் !
பற்றுக்கொண் டுன்னருளிற் பாரெல்லாம் ஓர்குலமாய்
ஒற்றுமைகொண் டோங்க வொருவழிசெய் யென்றிறைஞ்சி
அன்னை யமுதின் அருளையெதிர் பார்த்திருந்தேன் :

## அற்புதக் காட்சி

புன்னகைசெய் சந்திரனுற் பொங்குங் கடல்வெள்ளம்
அத்தனையு முத்தாய், அரதனமாய், பொன்மணியாய்

வைத்து வடிவமைத்து வான முடிசூடி,
எங்குந்தா ஞகி யிடமெல்லாந் தன்னெழிலாய்க்
கங்குல்பக லில்லாத காட்சியொன்று கண்ணுரக்
கண்டேனெந் தாரகத்தைக் காதல் விழிகளிஞல் !
வெண்டா மரையடியில் வீழ்ந்தேன்ஓம் சக்தியென்றே !
யாதா லுவமிப்பேன் யான்கண்ட பேரழகை ?
மாதா வுடனேதோ மழலைமொழி பேசிநின்றேன் :
மின்மினியைக் காட்டியிது விண்விளக்க மென்பதுவோ ?
புன்னுரையின் சித்திரத்தாற் பூரணத்தைக் காட்டுவதோ?
கையா லிறைத்துக் கடலாழங் கண்டிடவோ ?
வையம் படைத்தவனை வாயா லளந்திடவோ ?
ஆற்று மணலை யமுதாக்கும் பாலரைப்போல்,
காற்ருடி யாகாசக் கப்பலெனும் பிள்ளையைப்போல்
யானுமென் புன்கவியை அன்னையுரு வென்பேஞே ?
மோன முழுப்பொருளை முன்கண்ட யோகியர்போல்
ஆனந்த வெள்ளத் தழுந்தி யுளஞ்சிலிர்த்தேன் !
தானந்த மில்லாத சக்தியெழி லென்சொல்வேன் ?
ஒன்று பலவாகிப் பலவும் ஒருங்காகி,
நின்ற பிரமமிந்த நேரிழையாய் வந்ததுவோ ?
வேதங்கள் ஓம்என்று விளம்பி யுரையிறந்த
போதமய மென்றன் புலன்காண வந்ததுவோ ?
தேவ ரமுதந் திருவுருவங் கொண்டதுவோ ?
ஓவாவிண் ணின்பம் உடல்கொண் டுயிர்ப்பதுவோ ?
காலைப் பவளத்திற் காட்டுங் கதிர்ச்செம்பொன்
போலத் திருநகையும், பூத்தவெண் டாமரையில்
நீல மணிபதித்து நீள்கயலைப் போற்புரளும்
கோல விழிக்கருணை கொண்டு பசிதீர்ந்தேன்.
தகதகெனக் காந்துகின்ற தங்கத் திருமேனி
முகமதியி லேகுலுங்கு மோகனச் சௌந்தரியம்
கார்கொண்ட மின்னருவி காணு மலர்க்கூந்தல்
பார்வாழு மன்பூற்றுப் பாயும் பயோதரங்கள்
தாரா மணிகோத்த தாமத் தடமார்பு

பேராழி யென்னப் பெருகிவரும் வான்கருணை
பொங்கும் விழிகளிலோர் பொன்னுலகங் கண்டுவந்தேன்!
பங்கயத் தாளிற் பரமுமிக முங்கண்டேன் !
அறம் வெல்க வென்றார்க்கும் அம்பொற் சிலம்படியில்
மறைமுழங்கி யெல்லா மதத்தினரும் அன்புமலர்
தூவி வணங்குகின்றார் தொண்டுவழி பாடுசெய்தே ;
ஆவியினு மேலாகும் அன்னை திருப்புகழை,
மாந்தருடன் விண்ணவரும் வானெட்டப் போற்றுகின்றார்:
வேந்தர் பணிகின்றார் ; வீரத் திருவாளர்
கோடிமின்ன லைப்போலக் கொடிகள் உயர்ந்தாடப்
பேடிக்கும் ஆண்மை பிறக்கஜய பேரிகொட்டி,
சந்திரக் கூட்டம்போற் சாமரைகள் வீசுகின்றார் :
" எந்தாய்நீ வாழி, யெமதரசி வாழி !" யென்றே
ஆர்வமிகப் போற்றுகின்றார், ஆனந்தக்கூத் தாடுகின்றார்
சீர்பாடி வெற்றித் திருமாலை சூட்டுகின்றார்.
காண்டிபமுங் கோதண்டக் கார்முகமுஞ் சக்கரமும்
பூண்ட படைசூழப் பூரணகும் பம்பொலியச்
செல்வத் திருவுடனே செய்ய கலைவாணர்
பல்லாண்டு பாடுகின்றார் : பன்னீர் தெளிக்கின்றார் :
ஆடு மயில்களுடன் அன்னக் குழாங்களைப்போல்,
கூடும் பசுங்குழையார் கும்மி யடிக்கின்றார்.
தெய்வ மணங்கமழும் தேன்வாய் மலர்திறந்து
வையம் புகழ வரம்பெற்ற மெய்ப்புலவர்,
போற்றி,ஜய போற்றியெனப் பூமாரி, பாமாரி,
காற்றெல்லாம் வாசங் கமகமக்கத் தூவுகின்றார் !
கங்கைசிந்து கோதாரி காவேரி வைகைவளர்
பொங்கும் பசுவளமும், பொன்னார் கனிவளமும்,
வெள்ளி யிமாலயமும் விந்தியமும் தென்மலையும்
அள்ளித் தருவளமும், ஆனுத கான்வளமும்,
தென்னாழி முத்துந் திரள்பவள மும், சுரங்கப்
பொன்மணியுங் கொண்டு, புலவர்செய் கைவளமும்,
காவியமுங் கூத்துங் கனிமதுரக் கீதமுடன்

ஓவியமும்கொண்ட உயர்ந்த கலைவளமும்,
சூழ விளங்குகிறாள், சொற்கரிய அற்புதமாய்
ஆழி முரசதிரும் அழகுமணிக் கோயிலிலே !
திக்கெட்டும் வீசித் திகழுந் திருவழகிற்
சொக்கி மனமிறந்து சொல்லிறந்து தாள்பணிந்தேன் !

*காலக் கொடுமைகள்*

"ஆகாவுன் னற்புதம்போல் யாங்குமில்லை!" என்றே நான்
மோகமுற்று நிற்கையிலே, மூண்டதொரு பேரிருளே !
கண்செய்த பாவமோ காணேனவ் வான்காட்சி !
கண்பெற் றிழந்தவன்போல், கானகத்தில் அந்தகன்போல்,
புண்பட்டு வாடுகின்ற போதிலே, நேர்மாறாய்
மண்ணி லரக்கர், வலிய படை தாங்கி
அட்டூழி யத்தால் அழித்துயிரை ஆதிக்கம்
பெற்றாளக் கண்டு, பெருங்கவலை யான்கொண்டேன் :
வெறிபிடித்த நாத்திகர் வேதத்தைத் தீயில்
எறிகின்றார் : ஆங்காரித் தெக்காளஞ் செய்கின்றார் ;
கள்ளைக் குடித்துக் கனல்போலக் கண்சிவந்து,
தெள்ளறிவைத் தாமிழந்து செய்யா தனசெய்வார் ;
தேவதைகள் சக்தித் திருவென்னப் போற்றுகின்ற
பூவையரைச் சிற்றின்பப் பொம்மையெனப் பாவிப்பார் ;
தாயன் பிழந்தார் ; தருமத்தைக் கற்பழிப்பார் :
பேய்போற் பிறர்பொருளைப் பிய்த்துண்டு கொக்கரிப்பார் ;
மானிடத்தோல் போர்த்த வரிப்புலியர், பேய்நாயர்,
ஓநாயர், வஞ்சநரி யுள்ளம் படைத்தவரே
நாடுதொறு மல்கி 'நமதே யுலக' மெனக்
கேடுசெயப் புக்கார் ; கெட்டும் அவர் உணரார்.
மண்ணாசை கொண்டு மனிதர்களை மாய்த்திடவே
பண்ணிக் கொலைக்கருவி பௌதிகச் சூழ்ச்சியினால்
விண்ணேறிக் குண்டுகளை வீசுவார் கூசாமல் :
மண்ணெல்லாம் புண்ணீராய், மக்கள் பிணக்காடாய்,

வையஞ் சுடுகாடாய், வாழ்வெல்லாம் சாங்குரலாய்ச்
செய்து மகிழ்ந்து செயபே ரிகையடித்துக்
கொண்டாட்டத் தோடு கொலுவிருப்பார் மன்னர்; அதைக்
கண்டு தருமங் கலங்கிநிற்கும் அப்பாலே !
மண்வெறிப் போர்கள், மதவெறிசெய் வெம்போர்கள்,
பெண்வெறிப் போர்கள் பெரிய புகழ்ப்போர்கள்
ஆயுதப் போர்கள், அகந்தைப் பகைதீட்டுங்
காகிதப் போர்கள், கனகப் பெரும்போர்கள்
சூரு வளியிற் சுழன்றேடும் பஞ்செனவே
மாரு வகந்தை மனச்சுழலின் மாயத்தே
தோய்ந்து தினம்புரியுந் தொல்லைகளுஞ் சள்ளைகளும்
ஓய்ந்தபா டில்லை : யொருவருக்கு மின்பமில்லை.
கையா லுழைத்துண்போர் கஞ்சியின்றிப் பஞ்சமுற
வெய்யபொறிச் சாமான்கள் விற்றிடவே மற்றவரின்
நாட்டைக் கடையாக்கி நலிக்குங் கொடுமையினை
ஏட்டி லெழுதுவதேன் ? எங்குமே காண்கின்றேம் !

## *போர் மூளக் கண்டேன்*

"இப்படியுங் கால மிருக்குமா, தாயே" யென்(று)
அப்படியே தம்பித்தேன் ! ஆங்கே தடதடெனக்
கோடி யிடி முழங்கக் கோபப் புயல்வீச
நாடி நடுங்க நரவுலக மெங்குமே
போர்மூளக் கண்டேன் : புகைமூண்டு மூச்சடைத்தே
பார்திகைக்கக் கண்டேன் : பரிதாப மென்சொல்வேன் ?
ஊழிவெள்ளம் போலே யூற்றுங் குருதிவெள்ளம்,
ஆழியெல்லாஞ் செந்நீர், அவனி பிணக்கும்பல்,
மேற்குங் கிழக்கும் வெடிமருந்துச் சாலைகளே !
தோற்கும் அசுரபலம், துன்பப் புயல்வீசி
ஆணவப் போர்வெறிகள் ஆடிக் கரியாகும்
பாணவே டிக்கையெல்லாம் பாராது பார்த்திருந்தேன் !
ஆங்கேபார் ! ஆஹாஹா ! அன்னை மகாகாளி
ஹூங்காரஞ் செய்தே " ஒழிந்த ததர்ம " மென்றுள் !

## புது வாழ்வு

அக்கணமே வந்தாளென் ஆனந்தத் தாயமுதம்,
சொக்கத்தங் கம்போற் சுதந்தரப் புன்னகையாள் !
"காப்பாற்றுய் தாயே, கருணைத் தடங்கடலே,
காப்பாற்றுய் !" என்றிந்தக் காசினிவாழ் மாந்தரெல்லாம்
பாரதத் தாய்காலிற் பணிந்து முறையிடவே,
தாரகமாம் எந்தாய் தருமச்செங் கோலுயர்த்தி
ஆருலகிற் கெல்லாம் அபயமளிக் கக்கண்டேன் !
போரொழிந்து மாந்தர் புதுவாழ் வுறக்கண்டேன் !
சண்டைப் புயலாற் சகத்தி லறமழித்த
கண்டகர் வீழக் கருணையுள தொண்டர்களைக்
கொண்டிங்கு தெய்வக் குலம்வளர்த்தாள் சக்தியன்னை.
கண்டேன் உலகினிலே காணுத காட்சியெல்லாம் :
புத்தப் புதுவுலகம், புத்தப் புதுமாந்தர் !
சித்தத்தி லானந்தத் தேனூறுங் காட்சிகளைக்
கண்டேன் ! புதுவசந்தக் காலத்தைக் கண்குளிரக்
கண்டேன், புதுயுகத்தைக் காதல் விழிகளினுல் !
ஆணுள்ளும் பெண்ணுள்ளும் ஆண்டவனும் சக்தியுமே :
மாணுலக மெல்லாம் வளர்தெய்வ மந்திரமே :
தாரணியின் வாழ்வெல்லாம் சக்திசிவ லீலைகளே ;
காரணமுங் காரியமுங் காட்சித் திருவருளே !
சாதிமத பேதத் தடங்காணேன் ! எல்லாரும்
ஆதிப் பரம்பொருளின் அன்புக் குழந்தைகளே ;
தன்னலங்க ளில்லை ; சகம்பொதுவே யாவருக்கும் ;
மன்னன் மனச்சாட்சி ; வாழ்வெல்லாம் அத்யாத்ம
யோகமே ; விண்ணின் ஒளிவீசுஞ் சுத்தசிவ
போகமே யாகப் பொலிகின்ற தெங்கெங்கும் ;
கலைகள் பழுத்துக் கனிகுலுங்குங் கற்பகமே
உலகமோ, விண்ணே, உரைகடந்த காட்சியிதோ ?

## வாழ்க பராசக்தி !

ஆங்கே பரவசத்தில் ஆழ்ந்திருக்கும் போதினிலே,
ஓங்குஜய பேரி யொலித்தெழுப்பித் தென்கடலும்,
"வாழ்க மஹா பாரதமே ! வானுலக ரக்ஷகியே !
வாழ்கபரா சக்தி, வாழ்கபரா சக்தி !" யென்றே
முத்தலைகள் வீசியின்ப மூண்டுகூத் தாடினவே !
தத்திமிதோம் வெற்றியெனத் தாளங்கள் போட்டு
நடமாடி னேன்யானும் ; ஞாலமெல்லாம் எந்தாயின்
கொடியாடக் கண்டேன் ! கொழுந்துவிட்ட தின்பவெறி !
போற்றி ஜயபோற்றி, புவியரசி பாரதியே,
போற்றி ஜயபோற்றி, புதுயுகத்தின் செஞ்சுடரே !

## 71. சக்தி பரவசம்

சக்திஓம் சக்தி, சுத்த சக்திஓம்,
இத்தினம் உன்புகழ் இசைக்கப் புகுந்தேன் :
சொல்லரும் உனது சோதி வடிவை
நினைத்து நினைத்து நீரா புருகும்
அன்பருள் ஒருவன் அடியனென் றறிவாய்.
என்பெரும் ஆர்வம் இயற்றலுன் கடனே.
வாக்கும் நீயே, வளர்கவி நீயே,
ஆக்கும் கவியின் ஆவியு நீயே !
அம்மா யானோர் யாழெனை வுன்கை
சும்மா நிற்கிறேன் ; சுருதி செய்து,
அருவிபோல் இசைகள் ஆர்ப்பாய் தேவி!
உன்கைக் குழலாய் உள்ளேன் அம்மே !
இன்னிசை யமுதை என்னுள் உயிர்ப்பாய்.
கள்ள மில்லாத காலையைப் போலவே
தெள்ளிய வுள்ளம் தெரிந்திட நிற்பாய் ;
சித்தந் தெளிந்து, தீத்தழல் போலுன்

பத்தி யெழுந்து, பகைவினை சிந்தி,
மடவிரு ளகன்று, மமதை யொழிந்தே
திடமன துடனே, தேவியுன் அருளே
தாரக மாகத் தவம்பல செய்தேன் ;
அத்தவப் பயனாய் அம்மையே உன்னை
என்றுந் துதிக்கும் இன்பமே தந்தாய் !
முக்குணப் போரில் சிக்கிச் சிதையாச்
சாந்த வுறுதி தருவாய் சிவையே !
கார்கடல் போலென் கருத்திற் பொங்கும்
ஆர்வப் பெருக்கை யளத்தலு மாமோ ?
நாட்பல சுற்றி நலிந்தென் முறையைக்
கேட்பவ ரின்றிநீ கேட்டிடச் சொல்வேன் ;
இமயச் சிவனார் இன்ப நடஞ்செயும்
தமிழகம் வாழத் தவஞ்செயுங் கன்னியே,
அருணத் திருவே, அலைகடல் போன்ற
கருணை விரிவே, காட்சிக் கினிய
இயற்கை யெல்லாம் இறைவியுன் விளக்கம் ;
வானம் உனது ஞான விரிவாம் ;
உடுக்க ளெல்லாம் ஒண்மணிப் பூணும்
முழுமதி யுனது முத்தப் பதிவாம்
மேகம் உனது மெல்லிய கூந்தலாம் ;
அருவி மாமழை அருளின் பெருக்காம் ;
மலைகள் உனது மாண்பின் வடிவாம் ;
காடுகள் உனது கவின்பெறு வனப்பாம் ;
பூக்கள் உனது புன்னகைத் திரளாம் ;
கனிகள் உனது கைதரு விருந்தாம் ;
பறவைகள் உனது பாட்டின் மெட்டாம் ;
குயில்கள் உனது குரலின் எதிரொலி ;
கிளிகள் உனது கிளர்வாய் மொழியாம் ;
அன்னமும் உன்றன் அணிநடை அசைவாம் ;
மாமரைக் காடுன் மலர்முகப் பொலிவாம் ;
குவளைக் காடுன் கோமள விழியாம் ;

முல்லை யரும்புன் முத்துப் பற்களாம் ;
பாதி மதியுன் பரந்த நெற்றியாம் ;
இந்திர வில்லுன் இணைந்த புருவமாம் ;
மீனினம் உனது வெள்விழி ; வண்டுன்
கருவிழி ; அம்புன் கடைவிழி யாமே !
இரவும் பகலும் இமைகள் உனக்கே ;
நெருப்பெலாம் உனது நெற்றிக் கண்பொறி ;
இடமெலாம் உன்றன் எல்லையில் உடலாம் ;
வான விரிவுன் ஞான விரிவாம் ;
உயிரெலாம் உன்றன் ஓயா வுயிர்ப்பாம் ;
உலகமுன் ஆடல் ஓங்கும் கோயிலாம் ;
ஆடலும் பாடலும் அழகும் கலையுமுன்
நவரசங் குலுங்கு நாடக விளக்கமாம் ;
முக்குணம் உனது மும்மனப் பான்மையாம் ;
பூமி யுனது பூந்தடந் தேராம் ;
காலமே யுனது கடுவிசைப் புரவியாம் ;
இரவியும் மதியும் இரதசக் கரமாம் ;
வாழ்வெலாம் உனது வழிநடைக் காட்சியாம் ;
முத்தொழில் உனது மூன்று விளக்கமாம் ;
போரும் உன்னுட் பொங்குஞ் சினமாம் ;
அமைதியெல் லாமுன் அருளின் விளக்கமாம் !
சிவேஸ்வரி, அகண்ட ஜீவேஸ் வரிநீ !
புவனேஸ் வரிநீ ! புவனங் கடந்த
துரியாம் பிகைநீ ! சுத்த சக்திநீ !
நீயே முக்தி, நீயே சித்தி !
உன்னை யன்றி உயிரெனக் கில்லை ;
உலகமும் இல்லை, உள்ளமும் இல்லை.
என்னை ஈன்ற இறைவீ, யுனக்கே
வாழ்வை யெல்லாம் வழிபா டாக்கினேன்.
உன்வினை யாட்டே என்வினை யாட்டாம்.
தினகரன் போலத் திருவருள் பொழியும்
வாய்மனங் கடந்த மகேஸ்வரி நீயே !

தாவிப் பறக்கும் தவத்தீ யாலே
பகைவரைச் சாடும் பத்திர காளிநீ !
திருவுந் திறமும் சேரவென் வாழ்வைக்
காவிய மாக்குங் கமலை நீயே !
தீய னேனையுந் திருத்திப் பூரணம்
பொருந்த வைக்கும் அருந்தவத் தாயே.
அன்பருக் கன்பும் அரக்கருக் கழிவும்,
தூயருக் கொளியும் தூரியருக் கின்பமும்
உதவி யருளும் யோகாம் பிகைநீ !
அடிமைத் தளையை அறுக்கும் விசைநீ !
மடமை யிருளை மாற்றும் சோதிநீ !
சித்தந் தெளியுந் திவ்விய மருந்துநீ !
உலகெலாம் என்னை ஒருங்கே வெறுக்கினும்,
" கவலைப் படாதே, கண்ணே !" யென்றென்
மனத்துயர் மாற்றும் மாதா நீயே !
முக்குணப் போர்கள் முற்றுகை போட்டும்,
இராக்ஷஸப் படைகள் இரத்தவாள் சுழற்றியும்,
இடும்பைக் களத்தில் இன்னற் படுமெனை,
" அஞ்சேல் மகனே, அபயம் கொடுத்தேன் "
என்றெனைக் காக்கும் இரக்கம் நீயே !
அடியருக் குன்முகம் அமுதினும் இனிதாம் ;
கொடியருக் குன்முகம் கூற்றினுங் கொடிதாம் !
பண்டிதர் போற்றும் பழங்கவி யறியேன் ;
வாயில் வந்ததை வாரிக் கொட்டுவேன் ;
தாயெனும் உரிமையாற் சேயெனும் அன்பால்
பறவை போலும், பரவை போலும்
பாட்டுப் பாடிப் பரவுகின் றேனே.
அல்லிக் கரத்தால் ஆசிர் வதிப்பாய் ;
மாங்கனி வாயால் வாழ்த்துரை சொல்லாய் !
செம்மலர்ப் பாதம் சென்னியில் வைத்தேன் ;
சதங்கை யொலியாற் சஞ்சலந் தீர்ப்பாய் !
அருவி மலைபோல் அமுதக் கலம்போல்

எழுந்த மார்பில் இரக்கம் பொங்கி
ஆளுடைப் பிள்ளைக் கருளிய பாலை
அளித்தெனை யுன்றன் அருட்சே யாக்காய் ;
தண்ணருள் பெருகும் புண்ணிய நோக்கால்
என்குறை தீர்ப்பாய் ; எண்ண மெல்லாம்
உன்னில் நாட்டும் உயர்வெனக் கருளாய் ;
உண்மை யொளியினை உள்ளத் தேற்றுய் ;
இறைவீ, யுன்றன் இச்சையெப் படியோ
அப்படி யேயென் ஆவியை நடத்தாய் !
எனக்கொரு சித்தமும் இனிமே லில்லை ;
எனக்கெனச் செயலும் இல்லை, இல்லை.
மனமொழி மெய்யெலாம் உனதே, கொள்வாய் !
சிற்றறி மானிடன் செய்கையென் அறிவேன் ?
எல்லாம் அறிந்தநீ எனைக்கொண் டாளாய் ;
உடலுயிர் மனத்தில் இடர்ப்படும் உயிர்க்கொரு
தாரகமே நின் சரண்புகுந் தொழிந்தேன்.
காமக் குரோதக் கடும்புயற் கடலில்
ஜீவத் தோணி சிக்கிய போது,
மாலுமி யாக வந்தெனைக் காத்தாய் ;
வஞ்சப் பகைதரு நஞ்சைத் தீர்த்தாய்.
மருளை நீக்கக் குருவாய் வந்தாய்,
துறைசேர் வேகத் துடுப்பாய் நின்றுய் ;
பேதையேன் எனக்கும் வேதம் விளக்கினுய் ;
கலையறி யாத கசடன் எனக்கும்,
பால வயதிற் பாட்டொன் றளித்தாய் ;
புலமை யில்லாப் புல்ல னேனையும்
உரையுள் ளடங்கிய ஊமை யேனையும்,
அருளிசை யருவி யாக்கினை வாழி !
கீதையின் பொருளைக் கிளத்தினை ; என்கை
தாயுமா னவரைத் தந்தறி வூட்டினை ;
அப்பர் சுந்தரர் ஆளுடைப் பிள்ளையார்
மாணிக்க வாசகர் வளர்த்த தமிழை

அளித்துநின் அன்பிற் குளித்திடச் செய்தாய் !
தீர்க்க தரிசிகள், மார்க்க தரிசிகள்
கண்ட நல்வழி காட்டினை நீயே ;
உள்ள தெல்லாம் உனக்கே யுரிமை ;
எள்ளள வேனும் எனக்கென நினையேன்.
நாசியை வருத்தி நாக்கைக் கட்டி
வாசியை யடக்கி வளிநிலை கண்டு,
உடலை மடக்கிக் குடலைக் குலுக்கி
நீண்ட யோகம் நிகழ்த்தியும் பயனிலேன் ;
அகந்தை யின்றியுன் அடிமலர் பிடித்தபின்
மண்ணுடல் வாழ்வில் விண்சுடர் காட்டினை.
இகமும் பரமும் என்னுட் காட்டினை ;
கடலை ஆறு கலப்பது போலுன்
கருணைவெள் ளத்திற் கலந்த பிறகு,
சாதன மாயினை, சக்தி யாயினை,
சித்தி யாயினை, முத்தி யாயினை ;
உன்னை யன்றி உலகெனக் கில்லை ;
உன்னுள மின்றி உய்வெனக் கில்லை ;
அன்னைநீ யின்றி ஆதர வில்லை ;
அன்னைநீ யின்றி அசைவு மில்லை ;
தேக வாழ்வை யோகவாழ் வாக்கினை ;
சாகா மருந்தின் சாதன மளித்தாய் ;
அவனி தன்னிலே அமரவாழ் வளித்தாய் ;
யானுன் வீணை, நீயென் னிசையே ;
யானுன் பூங்குழல், நீயென் பாட்டு ;
யானுன் மெல்லுடல், நீயென் ஆவி ;
யானுன் இருகண், நீயென் பார்வை ;
யானுன் பாத்திரம், நீயென் அருட்பால் ;
யானுன் இதயம், நீயென் துடிப்பு ;
தாயே, எனக்குத் தந்த வரத்தை
உலகிற் கெல்லாம் உதவி யருளுவாய் !
அம்மே, உலகின் அழிவைக் கண்டால்

நெஞ்சழிந் துருகி, நெட்டுயிர்த் தழுவேன்.
அடஞ்செய் தீமைகள் ஆயிரம் புகுந்தன ;
தாசி வெறியால் தாயை உதைக்கும்
நீசப் பதர்போல் நிலைகெடு மாந்தர்
தாயை மறந்தார், தாய்மொழி பேணுர்,
தாய்நா டெண்ணுர், தந்நலம் வேட்பார் ;
வீர மற்ருர் ; கூரம் பிழந்தார்,
திர மற்ருர் ; தீனிக் கலைவதே
வாழ்க்கை யானுர் ; வயிற்றின் அடியார் !
சுத்தசன் மார்க்கச் சுடரொளி காணுர் ;
சத்தம் போட்டுச் சாதிகள் பேசுவார் !
அன்னிய வலையில் அகப்பட் டழிவார் ;
தம்மவர் தம்மைத் தகைபெற மதியார் !
மீண்டுமென் ஞட்டார் நீண்டெழுங் கனல்போல்
வீர தீரராய், வித்தகச் சித்தராய்
எழுந்து நின்றுன், ஈறிலாக் கருணையால்
அறமும், பொருளும், அகப்புற நலமும்,
காத லின்பமும், கடவு ளின்பமும்,
வீட்டு நன்மையும், நாட்டு நன்மையும்,
உரிமைத் திருவும், ஒற்றுமைத் திறனும்,
அருளும், ஆண்மையும், அன்பும், பண்பும்,
இண்டலில் லாத கேண்மையும் போற்றி,
வண்டு போல வளம்பெற வுழைத்தே,
விரிநிலம் புகழ வியன்பல செய்தே
பல்லாண்டு வாழும் பரிசெனக் கருளாய்.
செஞ்சொலுக் கரிய சிந்தனை மிகப்பல
நெஞ்சில் இருப்பதை நீயே யறிவாய்.
உன்முன் விரிந்த வுலப்பிலாக் கடல்போல்
என்னுள் அருட்கடல் எழுந்து, பேரின்பம்
பொங்கித் ததும்பும் பூரிப் பளிப்பாய்.
வையமும் உயிரும் வாழ்வும் செயலும்
தெய்வப் பொலிவுடன் சிறந்து விளங்கவே

சுத்தசன் மார்க்கத் தொண்டரை யருளாய்.
போற்றி போற்றி பூரண சக்தி,
வான்முக டெட்ட வளர்கநின் கொடியே!
உதயம் போன்ற புதுநகை யுடையாய்,
இதயந் தோறும் இலகுங் கனலே,
ஆர்கலிப் பெருக்கினும் அன்பு மிகுந்தாய் ;
கார்மழை தன்னினும் கருணை சிறந்தாய் ;
விண்ணொளி யாயென் விழியாற் காண்பாய் ;
பண்ணொலி யாயென் பனுவலைப் புனைவாய் ;
மண்புவி வாழ்வில் மடத்துயர் செய்யும்
புண்ணெலாந் தீரப் புன்னகை புரிவாய் !
பதகர் வீட்டுப் பஞ்சரக் கிளிபோல்
இதமில் லாரின் இரும்புக் காலடி
அடிமையாய் வருந்தும் கொடுமையைத் தீர்த்தாய் ;
மிடிபிணி களைந்து, மேன்மை யளித்தாய் ;
சாதி மதநிறச் சண்டைக ளற்ற
பொதுவழி வாழும் புதுயுக மளித்தாய்.
வாடிய உள்ளம் வளம்பெறச் செய்தாய் ;
பாடிய பனுவல் பயன்பெறச் செய்வாய் ;
முத்துப் போல மொழிநய மருளாய் ;
வாக்கிற் சக்தி வளம்பெற வருளாய் !
மேற்குங் கிழக்கும் மெச்சிப் புகழத்
தென்கலை புதிய மங்கலம் பொலிய
நன்கலை யருளாய் ! நாவலர்க் கமுதே !
சிந்தையி லூறுஞ் சின்மயத் தேனே
மந்திரக் கவிமலர் மாலைகள் சூட்டித்
தியானத் தாலே தினமுனைத் தொழுதேன்.
ஏழிசை பொங்கும் ஆழிப் பெருக்கே !
வாழி வாழி நின் வரம்பிலா வளமே !

ஓம் சுத்த சக்தி

## புதுயுக நிலைய வெளியீடுகள்



விலை மலிவு ! தூய திருத்தப் பதிப்பு !

உயர்ந்த இலக்கியங்கள் !

கவியோகி சுத்தானந்தரின் பார்வையிலேயே எல்லா நூல்களும் வெளி வருகின்றன. தூய திருத்தப் பதிப்புகள். நல்ல அறிவும் ... நல் உணர்வும் செயல் வீறும் பரவுவதே இந்த வெளியீடுகளின் நோக்கம்.

## OUTSTANDING BOOKS
By
YOGI SUDDHANANDA BHARATI

1. **The Gospel of Perfect Life (Yoga Siddhi)** 3. 8
   * A Garland of Practical Wisdom.
   * A Synthesis of all Yogas as applied to life.
   * The Bible of New Humanity.
2. **Yogi Shuddhananda Bharati** 4. 0
   * A brilliant treatise on Yogi Shuddhananda Bharati by the great savant K. S. Ramaswami Sastriar with profuse quotations from all the works of the seer-poet.

**யோகி ஸ்ரீ சுத்தானந்தரின் அரிய புதிய நூல்கள்**

1. **ஸ்ரீ அரவிந்தப் பிரகாசம்** 2. 8
   ஸ்ரீ அரவிந்தரின் முழு வரலாறும், யோக சாதனமும், ஆசிரம நடைமுறை விளக்கமும் அடங்கிய அற்புத நூல்.
2. **ஸ்ரீ அன்னை** 0. 8
   ஸ்ரீ அரவிந்தரின் தீர்க்க தரிசன விளக்கம்
3. **பகவத் கீதை** (வசனம்) 1. 4
4. **ஏழை படும் பாடு** 4. 4
   (விக்தர் ஹ்யூகோ நாவல்)
5. **கவிக் கனவுகள்** (,,) 1. 8
6. **புது யுகப் பாட்டு** (,,) 1. 8
   (பயனுள்ள அரிய பாடல்கள் நூறு)
7. **கீர்த்தனாஞ்சலி** (,,) 3. 8
   சிதம்பர கீதம், தேவ கானம் சாதனை, சன்மார்க்க ஐக்கிய கீதங்கள் எல்லாம் ஒருங்கே அடங்கிய இசை நூல். (672 பாடல்கள்)

**புதுயுக நிலையம் : : புதுச்சேரி**

**PUDU YUGA NILAYAM, Pondicherry**